உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

குமரகுருபரசுவாமிகள்

அருளிச்செய்த

# பிரபந்தங்கள்.

சிரசிலேயஞ்சலிசெய்துகொண்டு,தமதுபரிவாரங்களோடுதிருப்பரங்குன்றத்திற்சென்று, சுவாமிகளைத்தரிசித்துவணங்கி, "யாவராலும் பெறுதற்கரியதிருவருளைப்பெற்ற சுவாமீ! தேவரீரை அடியேன் பூர்வத்திலே புரிந்த புண்ணியத்தினால் தரிசிக்கப்பெற்றேன்." என்று முகமன்கூறி, மீனாக்ஷியம்மையாருடைய ஆஞ்ஞையைத்தெரிவித்து, அவரையும், அவரருளிச்செய்த பிள்ளைத்தமிழையும் யானைமீதேற்றிக்கொண்டு, மதுரையையடைந்து நகர்வலஞ்செய்வித்தார். பின்பு குமரகுருபரசுவாமிகள் திருக்கோயிலையடைந்து, சித்திவிநாயகக்கடவுளையும், சோமசுந்தரக்கடவுளையும் தரிசித்து, துதித்து வணங்கிக்கொண்டு, மீனாக்ஷியம்மையாருடைய சந்நிதியையடைந்து, நமஸ்கரித்து, எழுந்துநின்றார். அப்பொழுது, சர்வலோகங்களையும்பெற்றும் குமரியாகவே விளங்காநின்ற மீனாக்ஷியம்மையார், தெய்வத்தன்மைபொருந்திய தமது இளந்திருக்கோலத்தைக்காட்டியருள; சுவாமிகள் தரிசித்து, அடியேன்செய்த பிள்ளைத்தமிழுக்கு இது பரிசுபோலுமென்றுநினைந்து, அத்தியந்த ஆச்சரியமடைந்து, தாமியற்றியபிள்ளைத்தமிழைச் சந்நிதானத்திலே அரங்கேற்றுவாராயினார்.

அப்பொழுது, அங்குள்ள சிவனடியார்களிலொருவர் பிள்ளைத்தமிழ்த்திருமுறையைப் பீடத்திலெழுந்தருளுவித்து விதிப்படிபூசித்து வணங்கித்துதிக்க, குமாரகவிகள் அரசருடைய வேண்டுகோளின்படியே அதனைவாசிக்க, சுவாமிகள் அதன்பொருளை யாவருங்கேட்டு இன்புறும்படி விரித்துப்பிரசங்கித்தார். அத்தினத்திலே காப்புப்பருவமொன்றே நடந்தது. சுவாமிகள் இவ்வாறே, தினமும் ஒவ்வொருபருவமாகப் பிரசங்கித்துக்கொண்டுவரும்போது, வருகைப்பருவத்தில், மீனாக்ஷியம்மையார் அருச்சகரது பெண்குழந்தைபோன்று இளந்திருக்கோலத்தோடு, திருமலைநாயகர்மடியின்மீது எழுந்தருளியிருந்து, "தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே நறைபழுத்த,துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்,—தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற் கேற்றும் விளக்கே வளர்சிமைய, விமை

யப் பொருப்பில் விளையாடு மிளமென் பிடியே யெறிதரங்க,— முழங்
கும் புவனங் கடந்துநின்ற வொருவன் றிருவுள் ளத்திலழகொழுக வெ
ழுதிப் பார்த்திருக்கு முயிரோ வியமே மதுகரம்வாய்,— மடுக்குங் கு
ழற்கா டேந்துமிள வஞ்சிக் கொடியே வருகவே, மலயத் துவசன் பெ
ற்றபெரு வாழ்வே வருக வருகவே." என்னும் ஒன்பதாவதுசெய்யுளை
வாசித்துப் பொருளுரைக்குந்தருணத்தில், "இன்னுமொருமுறை இச்
செய்யுளைவாசித்துப் பொருளுரைக்க."என யாவருமகிழவிரும்பி, கேட்
டுவியந்து, இறுதிச்செய்யுளைவாசித்து நிறுத்துந்தருணத்தில் * மறைந்த
ருளினார். அப்பொழுது, திருமலைநாயகர் அருச்சகரது பெண்குழந்தை
யென்று அதுகாறும் தாம் எண்ணிக்கொண்டிருந்த எண்ணத்தையொ
ழித்து, இங்ஙனமெழுந்தருளியிருந்தவர் சர்வஜீவதயாபரராகிய மீனா
க்ஷியம்மையாரேயென்று தெளிந்து, சுவாமிகளுக்கு அம்மையாரருளிய
திருவருளின்திறத்தைப் புகழ்ந்துகொண்டாடினார். சபையாரும் அள
விறந்த ஆச்சரியமடைந்தார்கள். இவ்வண்ணமே பிள்ளைத்தமிழை அர
ங்கேற்றியபின்பு, திருமலைநாயகர் சுவாமிகளைச் சிங்காதனத்திலெழுந்த
ருளுவித்து, திருவடிகளில் வீரகண்டாமணியைத்தரித்து, பொன்னினா
லும் அரதனத்தினாலும அபிஷேகஞ்செய்து, யானை, குதிரை, சிவிகை
களையும், குடைகொடிமுதலிய விருதுகளையுங்கொடுத்தார்.

---

* வருகைப்பருவத்திலன்றி முத்தப்பருவத்திலே, "காலத் தொடுகற்
பனைகடந்த கருவூலத்துப் பழம்பாடற், கலைமாச் செல்வர் தேடி
வைத்த கடவுண் மணியே யுயிரால, — வாலத் துணர்வெனு நீர்
பாய்ச்சி வளர்ப்பார்க் கொளிபூத் தருள்பழுத்த மலர்க்கற் பகமே
யெழுதாச்சொன் மழலை ததும்பு பசுங்குதலைச், — சோலைக் கிளியே
யுயிர்த்துணையாந் தோன்றாத் துணைக்கோர் துணையாகித், துவந்த
சாந்தப் பெருவெளியிற் றுரியங் கடந்த பரநாத, — மூலத் தலத்து
முளைத்தமுழு முதலே முத்தந் தருகவே, முக்கட் சுடர்க்கு விருந்
திடும் முலையாய் முத்தந் தருகவே." என்னும் முதற்செய்யுளை
வாசித்துப் பொருளுரைக்குங்கால் மீனாக்ஷியம்மையார் இளங்குழவிக்
கோலமாகக் காக்ஷியளித்து, ஒரு முத்துவடம் சுவாமிகள் கழுத்தி
லணிந்து மறைந்தருளியதாகவும் சரித்திரம் உண்டு.

அதன்பின்னரும் சுவாமிகள், திருமலைநாயகர்முதலியோர் வேண்டுகோளின்படி மீனாக்ஷியம்மைதூறும், மீனாக்ஷியம்மையிரட்டைமணிமாலை என்னும் இரண்டுபிரபந்தங்களையும், சோமசுந்தரக்கடவுளைத்துதித்து மதுரைக்கலம்பகம் என்னும் ஒருபிரபந்தத்தையும் அருளிச்செய்தனர். பின்பு ஒருநாள், திருமலைநாயகர் வெகுநேரம்வரையில் போசனஞ் செய்யாதிருந்தமைகண்டு, சுவாமிகள், "*வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி - தொகுத்தார்க்குந் துய்த்த லரிது." என்னுந் திருக்குறளையெடுத்தோத; அரசருவந்து, "அரிய திருக்குறளெனப்படும் தமிழ்வேதத்தை முற்றும் ஆராய்ந்துதெளிதற்குக் காலமில்லையாதலால், அதிலுள்ள நீதிகளைவிளக்கிச் சுருக்கமாக அடியேன்பொருட்டு ஒருநீதிநூல் செய்துதரவேண்டும்." என்றுபிரார்த்தித்தனர். சுவாமிகள் அவ்வாறே நீதிநெறிவிளக்கம் என்னும் ஒருநூலை அருளிச்செய்துதந்து, அவ்வரசர்வேண்டுகோளின்படியே மீனாக்ஷியம்மையையும் சோமசுந்தரக்கடவுளையும் தரிசித்துக்கொண்டு, அத்தலத்திலே வசித்தருளினார்.

சிலநாட்சென்றபின்பு தமதுசகோதரராகிய குமாரகவிகளையழைத்து, மாதாபிதாக்களனுமதியின்படியே, தாமவதரித்த கைலாசபுரத்திலே இல்லறதருமத்தில்வழுவாது நிற்கும்படி பணித்து, விடையளித்தனுப்பிவிட்டு, தாம் நானாவிதவாத்தியங்கள்முழங்க, விருதுகள்புடைசூழ, தமக்கபிஷேகித்த திரவியங்களை அரசர்வேண்டுகோளின்படியே ஒட்டகங்களின்மீதேற்றிக்கொண்டு, மதுரையையகன்று, தம்மைப்பிரிவாற்றாதுதொடர்ந்துவரும் அரசனையும், மந்திரிமார்களையும், பிறரையும் மீண்டுசெல்லும்படி வற்புறுத்தி, தாம் சிவிகைமேற்கொண்டு, பாண்டிநாட்டைக்கடந்து, சோழநாட்டையடைந்து, அங்குள்ள திரிசிராப்பள்ளி, திருவானைக்காமுதலிய தலங்களிலுள்ள அடியார்கள் எதிர்கொண்டுபணிய சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு, அவ்வந்தலங்க

---

* திருக்குறள் ௩அ-ம் அதிகாரம்; ஊழ். எ.

ளிலே சிலநாள்வசித்து, திருவாரூரையடைந்து, தியாகேசப்பெருமானைத்தரிசித்து, திருவாரூர் நான்மணிமாலை என்னும் ஒருபிரபந்தத்தை அருளிச்செய்தனர். அங்குவசிக்குநாளில், திருக்கைலாசபரம்பரையாகிய * தருமபுரவாதீனத்திலே நான்காவதுகுருமூர்த்திகளாய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமாசிலாமணித்தேசிகசுவாமிகளுடைய திருவருட்சிறப்பைக்கேள்வியுற்று, அவரைக்காணவிரும்பிப் புறப்பட்டு, இடையிலுள்ள பலதலங்களையும் வணங்கிக்கொண்டு தருமபுரத்தையடைந்தார்.

அத்தினத்திலே, சைவசித்தாந்தசாஸ்திரங்களையும், அவற்றிற்குரிய அங்கங்களாயுள்ளநூல்களையும், ஐயந்திரிபற ஓதியுணர்ந்து, அவற்றிற்கூறப்படும் சரியை, கிரியை, யோக ஞானானுசந்தானங்களை மேற்கொண்டு, குருபத்தியிற்சிறந்துவிளங்கும் அடியவர்திருக்கூட்டங்களும், வேதசிவாகமவிற்பன்னர்களும், சைவாசாரியர்களும், இலக்கணவிலக்கியங்களில்வல்ல வித்துவான்களும் புடைசூழும்படி, ஞானசூரியனைப்போல, ஸ்ரீமாசிலாமணித்தேசிகர் தக்ஷிணாபிமுகமாய் எழுந்தருளியிருந்தார். அச்சமயத்திலே, சுவாமிகள் பரிசனங்கள்பின்னேவர, விருதுகளோடும் அத்திருமடத்தினுள்ளேசென்று, அவருடையசந்நிதியிலே உத்தரீயத்தோடு ஆசனத்தின்மீதிருந்துகொண்டு, மாசிலாமணித்தேசிகரால் வினவப்பட்ட வினாக்கள்பலவற்றிற்கும் உத்தரஞ்சொல்லிக்கொண்டுவந்தார். மாசிலாமணித்தேசிகர், திருப்புன்முறுவல்கொண்டு, இறுதியிலே திருத்தொண்டர்பெரியபுராணத்தில், † "ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ் - சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமே யாக - விந்துவாழ் சடையா னாடுமா னந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின் - வந்தபே

* இத்தருமபுரவாதீனத்தின் பிரதமகுருமூர்த்திகள் ஸ்ரீஞானசம்பந்ததேசிகர்; இரண்டாவதுகுருமூர்த்திகள் ஸ்ரீஆனந்தபரவசதேசிகர்; மூன்றாவதுகுருமூர்த்திகள் ஸ்ரீசச்சிதானந்ததேசிகர்.

† தடுத்தாட்கொண்டபுராணம் (௧0௬)

ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.'' என்னுந்திருவிருத்தத்தின் அனுபவப்பயனைவினவ; வாக்குத்தடைப் பட்டது. உடனே சுவாமிகள் இருக்கைவிட்டெழுந்து, முருகக்கடவுளுடைய ஆஞ்ஞையைநினைந்து, மனங்கலங்கி, ஆசனத்தையெடுத்தெறிந்துவிட்டு, உத்தரீயத்தை இடையிலேகட்டிக்கொண்டு, சந்நிதானத்திலே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்துநின்று, அஞ்சலியஸ்தராகி, ''எம்பெருமானே! ஆணவமலத்தினாலே மறைக்கப்பட்ட தமியேன் அறியாமையாற்செய்த பெருங்குற்றத்தைமன்னித்து, அடிமைகொண்டருளவேண்டும்.'' என்றுபிரார்த்தித்து வணங்கினார். அப்பொழுது ஞானாசாரியராகிய மாசிலாமணித்தேசிகர் அவரைநோக்கி, '' நீ, காசியாத்திரைசெய்துகொண்டு மீள்வையேல், அநுக்கிரகம்புரிவோம்.'' என்று வலியுறுத்த; சுவாமிகள் பின்னும் பலமுறைவணங்கி, கருணாநிதியே! சிறியேன் தேவரீருடைய கட்டளையின்படி, பசியினாலும், பிணிமுதலியவற்றினாலும்வருந்திக் காசியாத்திரையைமுடித்துக் கொண்டு வருமளவும் தேகநிற்பதோ நிலையில்லை; அன்றி இறக்கினும், பின்னரும் இம்மானுடப்பிறவியேவாய்த்துத் தேவரீர்திருவருட்பேற்றிற்குப் பாத்திரனாதலும் நிச்சயமில்லை: ஆதலால், அடியேனுடைய குற்றத்தைச் சிறிதும் திருவுள்ளத்திற்கொள்ளாது, திருவருள்பாலித்தல்வேண்டும்.'' என்று பிரார்த்தித்தார். பரங்கருணைத் தடங்கடலாகிய மாசிலாமணித்தேசிகர் திருவுளமிரங்கி, ''அன்பனே! அது இயலாதாயின், சிதம்பரஸ்தலத்தையடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு ஒருமண்டலம் வசித்துவருவாயாக.'' என்று ஆஞ்ஞாபித்தருளினார்.

சுவாமிகள், அவ்வாஞ்ஞையைச் சிரமேல்வகித்து, அநுமதிபெற்று, சிவிகைமேற்கொண்டு, திருப்புள்ளிருக்குவேளூரையடைந்து, திருக்கோயிலினுள்ளே பிரவேசித்து, வைத்தியநாதசுவாமியையும், தையனாயகியம்மையையும், முத்துக்குமாரசுவாமியையுந் தரிசித்துவணங்கித் துதித்துக்கொண்டு, அத்தலத்தின் எல்லையைக்கடந்து புறத்திற் செல்லும்போது; முத்துக்குமாரசுவாமியானவர், சுவாமிகளிடத்தில்

அருச்சகர்வடிவமாக எழுந்தருளி விபூதிகொடுத்து, "நம்மைக்குறித்து ம் ஒரு பிள்ளைத்தமிழ்பாடுவாயாக." என்று கட்டளையிட்டு, அந்தர்த்தா னமாயினர். உடனே சுவாமிகள் இங்ஙனம் எழுந்தருளினவர் நம்மை யாண்டருளிய முருகக்கடவுளேயென்றுதெளிந்து, நிலத்திலேவிழு ந்து சாஷ்டாங்கமாகநமஸ்கரித்தெழுந்து, மீண்டும் அத்திருப்பதியை அடைந்து, எவ்வாறுபாடுவேனென்று திகைக்கும்போது, அக்கடவு ளுடைய திருவருளினால் "பொன்பூத்தகுடுமி" என்ற ஓரசரீரிவாக்கு எழுந்தது. சுவாமிகள் அதனையே முதலாகக்கொண்டு, முத்துக்குமார சுவாமிபிள்ளைத்தமிழ் என்னும் பிரபந்தத்தைப் பாட ஆரம்பித்து, செங்கீரைப்பருவம் பாடும்போது, செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாளன் எனவும், தேனூறுகிளவிக்கு என்றுதொடங்குங்கால் வா யூறுகின்றவன் எனவும் இன்னனவாகத் தெய்வகதியாய்ப் பிறர்பாணிக ழ்ந்தசொற்களையும், இவையும் திருவருட்டிறம்போலும் என்று விடா தமைத்து, பாடிமுடித்து, அக்கடவுளுடைய சந்நிதியிலே பலருந் துதிக்கும்படி அரங்கேற்றிச் சிலநாள் அவ்விடத்திலேவசித்தார்.

பின்பு, சீர்காழியைத்தரிசித்துக்கொண்டு, சிதம்பரத்தையடை ந்து, திரிகாலங்களிலும் வழுவாமல் சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு வசிக்குநாளில், சிதம்பரமும்மணிக்கோவை என்னும் ஓர்பிரபந்த மியற்றியருளினர். அந்நாளிலே, சுவாமிதரிசனத்துக்குப் பரிசனங்க ளோடு செல்லும்பொழுது, வழியிலே தினந்தோறும் புராணப்பிர சங்கஞ்செய்துகொண்டிருந்த சைவாசாரியரொருவர் தவிர, அதுகேட் பவர்யாவரும் எழுந்து, மரியாதைசெய்வார்கள். அவர்களுள்ளே ஒரு வர் ஒருநாள் புராணிகரைநோக்கி, "ஐயா! புலவர்திலகராயும், சிவா நுபூதிப்பெருவாழ்வாயும் விளங்காநின்ற சுவாமிகளைக்கண்டு தாங்கள் மாத்திரம் மரியாதைசெய்யாதது என்னை?" என்றுவினவ; அதுகேட்ட புராணிகர் "அவர் இலக்கணகவியா? வரகவிதானே!" என்றார். அது பொறாத ஒருவர் சுவாமிகளுக்குத் திருச்செவிசாத்த; சுவாமிகள் இரு ப்புன்முறுவல்செய்து, "மிகமுயன்று அரிதிற்பெறுவது இலக்கணகவி

யும், அவ்வாறன்றி எளிதிற்பெறுவது வரகவியுமன்றோ? இதையுண ராதுரைப்பினும், அவர் சொல்லளவில் நம்மைத்துதித்தவரேயாயினர்: ஆயினும், அவர்சந்தேகத்தையும் நிவர்த்திசெய்வோம்.'' என்று சிதம்ப ரச்செய்யுட்கோவை என்னும் ஓர் சிறந்தபிரபந்தத்தை அருளிச்செ ய்தனர். புராணிகர் அந்நூலிலமைந்துள்ள அரிய இலக்கணங்களையும், சொற்சுவை பொருட்சுவைகளையும்நோக்கி, சுவாமிகளையடைந்துவ ணங்கி வேண்டிக்கொள்ள; சுவாமிகள் திருவுளமகிழ்ந்து, அளவளாவிய பின்பு, சிவகாமியம்மையிரட்டைமணிமாலை என்னும் ஓர்பிரபந்தத் தையும் செய்தருளினார்.

இவ்வாறு நியதிபூண்டு ஒருமண்டலம்வசித்து, அத்தலத்தை அருமையாகநீங்கி, தருமபுரத்தையடைந்து, ஞானாசாரியரைத்தரிசித்து, வணங்கி, அவரைத்துதித்தியற்றிய பண்டாரமும்மணிக்கோவை என் னும்பிரபந்தத்தை அவர்சந்நிதானத்திலே அரங்கேற்றினார். உடனே ஞானாசாரியர் திருவுளமிகமகிழ்ந்து, சுவாமிகளைநோக்கி, ''நீ இயல்பாக வே துறவியாயினும் நமது வரன்முறைப்படியே அத்துறவிற்குரிய கா ஷாயவஸ்திரமுதலிய சின்னங்களையும் தரித்துக்கொள்ளக்கடவாய்.'' எனப்பணித்து, அவரையடிமைகொண்டு, அச்சின்னங்களையளித்து, ஞானோபதேசமுஞ் செய்தருளினார். சுவாமிகள் * அணுக்கத்தொண் டராகி அங்குவசிக்குநாளிலே ஒருநாள், தமக்கு முன்னே பரிசாகக் கிடைத்த திரவியங்களை அந்த ஞானாசாரியர்சந்நிதியில்வைத்து ஏற்ற ருளும்படி பிரார்த்திக்க; அவர் முன்னர்ப்பணித்தவாறே '' நீ, காசி

---

* அணுக்கத்தொண்டராகி வசிக்குநாளிலே அவ்வவ்வமையங்களில், ''பூதங் கடந்த புகழ்க்கூடற் சம்பந்தன் போதித்தசொல், வாதங் கடந்து மனோலய மாயிந்து மண்டலம்போய், நாதங் கடந்து நடு வெளி தாண்டி நலஞ்சிறந்த, போதங் கடந்தின்ப பூரண மாகிப் பொலிந்ததுவே.'' என்னும் இச்செய்யுள்முதலிய சிலசெய்யுளருளி யதாகவும் கூறுவதுண்டு.

யையடைந்து இவற்றைக்கொண்டு தருமமியற்றுக.'' என்று திருவாய் மலர்ந்தருளினர்.

சுவாமிகள், அவ்வரியபணியைச் சிரமேற்கொண்டு, அநுமதிபெற்று, அத்திரவியங்களை ஒட்டகங்களின்மீதேற்றிக்கொண்டு, பரிசனங்களோடு தருமபுரத்தினெல்லையைக்கடந்து, சிவிகையில் ஆரோகணித்துச்சென்று, சிதம்பரமுதலாகியஸ்தலங்களைவணங்கிக் காஞ்சீபுரத்தையடைந்து, சுவாமிதரிசனஞ்செய்துகொண்டு வசிக்குநாளிலே, தம்மிடத்தில் அநேகவைஷ்ணவர்களோடுவந்து சமயக்கோட்பாட்டைப்பற்றி வாதித்த பிள்ளைப்பெருமாளையங்கார்முதலியோரைப் பல பிரபலநியாயங்கொண்டு வாதித்து, அவர்களைவென்று, அவ்விடத்தினின்றும் நீங்கி, இடையிலுள்ள திருக்காளத்திமுதலிய ஸ்தலங்களைவணங்கிக்கொண்டு, காசியென்னுந்திவ்வியதலத்தையடைந்தார். அவ்வெல்லையையடைந்தவுடன் சிவிகையினின்றுமிறங்கிக் கங்கையைவணங்கி, அதிலேஸ்நானஞ்செய்து தமதுநியதிகளைமுடித்துக்கொண்டு, அக்கங்கையின் இருபுறத்திலுங் காடுகளடர்ந்து, துருக்கர்களுடையபள்ளியும் சமாதியுமே நிறைந்திருப்பதைக்கண்டு, மனநொந்து, அன்றிரவுநித்திரைசெய்தார். அப்போது அந்தக்காடுகளால் மறைக்கப்பட்டிருந்த கேதாரத்திலெழுந்தருளிய சிவபெருமான் அவருக்குச் சொப்பனத்திலேதோன்றி, "நம்மைப்பூசிப்பாயாக.'' என்று ஆஞ்ஞாபிக்க; சுவாமிகள் அவ்வாறே மற்றைநாட் பிராமமுகூர்த்தத்திலே கேதாரத்தையடைந்து, காடுகளையெல்லாம் அழிப்பித்து, அதனடுவே எழுந்தருளிய சிவபெருமானைப் பூசித்துத்துதித்து பின்னர் விசுவநாதரை விசாலாக்ஷியம்மையாரோடும் அருச்சித்து வணங்கி, காசிக்கலம்பகம் என்னும் ஓர்பிரபந்தத்தை அருளிச்செய்தார்.

அத்தலத்தில் வசிக்குநாளிலே, அந்நகரத்தையாண்டுகொண்டு அங்கிருந்த டில்லிபாக்ஷாவைக்கண்டுவசனித்துத் தருமமியற்றுதற்கு வேண்டும் இடம்பெறவிரும்பி, அவனுக்குரிய இந்துஸ்தானிபாஷை

யைத் தெரிவித்தருளும்படி சகலபாஷைகளிலும்வல்ல சரஸ்வதியைப் பிரார்த்தித்து சகலகலாவல்லிமாலை என்னும் பிரபந்தத்திலே ஒன்பது பாடலருளியும், திருவருள் செய்யாதிருந்தமைகண்டு, "மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென் - பண்கண் டளவிற் பணியச்செய்வாய்" என்னும் பத்தாவதுபாட்டை அருளிச்செய்தார். உடனே சரஸ்வதியார் திருவருள்சுரந்து அப்பாஷையை விளக்கியருள; சுவாமிகள் களிகூர்ந்து, அவ்வரசன்சமூகத்திற் கெழுந்தருளினார். அவன் சுவாமிகளுடைய அருமைபெருமைகளைச் சிறிதும் அறியாதவனாகையால் சிங்காதனத்திலிருந்துகொண்டே வரலாற்றை வினாவ; சுவாமிகள் அதனாலே தமக்கு யாதொருகுறைவும் இல்லையாயினும், அவனுக்குநேரிடும் கெடுதியையோசித்து, கருணைகூர்ந்து, "மஹாராஜாவே, உமக்கு ஆசீர்வதிக்கவந்த நம்மை இப்படி நிறுத்திக்கொண்டு வினாவுவது தருமமல்ல." என்று உரைத்தருளினார். அதுகேட்ட அரசன் "உம்மிடத்திலே தெய்வீகங்கண்டாலன்றி உமதுசரீரத்தோற்றத்திற்கு நான் மரியாதைசெய்யேன்" என்றுசொல்ல; சுவாமிகள் "அப்படியாயின் அதனை நாளைக்குக்காட்டுவோம்." என்றுசொல்லி மீண்டு, மற்றைநாள் காளியினுடைய அநுக்கிரகத்தால்வந்த ஒருசிங்கத்தின் மேலேறிக்கொண்டு, யாவரும் அஞ்சும்படி சபையையடைந்து, அரசனைநோக்கி, "நீர் இருப்பது உயிரற்றசிங்கம்; நாமிருப்பது உயிருற்ற சிங்கம்; ஆயினும் நீர் அஞ்சவேண்டுவதில்லை: உமக்குமாத்திரம் இது பசுவாகத்தோன்றும்." என்றுசொல்லி, அதிலிருந்தபடியே அவன் வினாக்களுக்கு உத்தரங்கொடுத்து அவன்வணங்கும்படிச்செய்து அங்கே வீற்றிருந்தருளினார்.

அக்காலத்திலே அரசனையும் பிறரையும் சந்தோஷிப்பிக்கும்படி நடாத்திய பிரசங்கங்களுள்ளே சிற்றின்பத்தைக்குறித்துச்செய்யும் பிரசங்கத்தைக்கேட்டு, துறவிகளாய்விருத்தப்பருவமடைந்துள்ள அரசனுடைய குருமுதலியோர்களும் விரகத்தினாலேமயங்கிப் பூமியிலேவிழுவார்கள். யுத்தவிஷயமாகச்செய்யும் பிரசங்கத்தைக்கேட்டு,

வயோதிகர்களும் கண்சிவந்து பற்களைக்கடித்து, ஆயுதங்களையெடுத்துக்கொண்டு ஆரவாரிப்பார்கள். இவ்வாறு ஒவ்வொருவிஷயங்களையும்பற்றிப் பிரசங்கிக்கும் பிரசங்கங்களினும் தாங்கள் அந்தந்தமயமாதலையடைந்தும், சிலதுருக்கர்கள் மற்றவைகளைப்பற்றிச் சந்தேகியாமல் சிற்றின்பத்தைக்குறித்துச்செய்த, பிரசங்கத்தில்மாத்திரம் சந்தேகம்பிறந்து, இவருக்கு அநுபவமில்லாமலே சாஸ்திரத்தால் இவ்விஷயத்தில் இவ்வளவுபேசமுடியுமாவென்று சுவாமிகளைநோக்கி, "இவர் பகற்சந்நியாசிபோலும்!" என்பதுமுதலாகப் பலவாறு பிதற்றுவாராயினார்கள். அதுகண்டு சுவாமிகள் மிகவும் களிம்பேறிய ஒரு செப்புப்பாத்திரத்தை அழைப்பித்து, அவ்வாறுபிதற்றிய துருக்கர்களைநோக்கி, "நாளைக்கு இதை மருந்தில்லாமலே பொன்னாக்குதலாகிய ஒரு இரசவாதம்செய்வோம்." என்றுசொல்லி, அப்பாத்திரத்தை அவர்கள் காணும்படி மலத்திலேபுதைப்பித்தார்.

மறுநாள் அரசன்முதலிய பலரும்வந்து கூடியபின்பு, அப்பாத்திரத்தையெடுப்பித்துச் சுத்திசெய்வித்து பொன்னென எதிரொளிக்கக்கண்டு, முதனாள் ஆக்ஷேபித்த துருக்கர்களுட்சிலர், "இது இரசவாதத்தாலன்று; மலம்புளிப்பாதலால் இப்படிப்பிரகாசிக்கின்றது." என்ன; உடனே சுவாமிகள் அவர்களைநோக்கி, "நீவிர், மலம்புளிப்பென்றீர்களே, அதையும்புசித்து அநுபவித்தீர்கள்போலும்" என்றார். அவர்கள் அதுகேட்டு மிகவும் கோபங்கொண்டிருக்க சுவாமிகள் அவர்களைநோக்கி, "நேற்றைக்கு இப்படிப்பட்ட கோபம் நமக்கும் உண்டாயிருக்குமே?" என்றுசொல்லினார். அப்பொழுது விவேகிகளாகிய அரசன்முதலாயினோர் அவர்களையடக்கி, சுவாமிகளுடைய புத்தியைவியந்து புகழ்ந்தார்கள். மூடர்களாகிய அத்துருக்கர்கள் முன்னையினும் மிக்க பொறாமையுடையவர்களாய் ஒருநாள் அரசனிடத்திலேவந்து, "உமதுநண்பராகிய குமாரகுருபரசுவாமிகள் சாஸ்திரங்களில் வல்லவரோனும் அவர்கைக்கொண்டதெய்வமோ பொய்;"

என்றார்கள். அதுகேட்ட அரசன் அதனைச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ்செய்ய; சுவாமிகள், உண்மையை யாவருக்கும் வெளிப்படுத்த விரும்பி, அத்துருக்கர்களுடைய உத்தேசப்படியே காய்ச்சப்பட்ட இரும்பைக்கொணர்வித்து, சைவசமயமே மெய்ச்சமயமானால், அச்சமயத்திற்குரிய சிவபெருமானுக்குப் பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஆன்மா என்னும் எட்டுமே திருவுருவமானால், அவ்வெட்டனுள்ளும் அக்கினியே பிரதானமானால் இது சுடமாட்டாதென்னுங் கருத்தோடு அவ்விரும்பைத் தமது திருக்கரத்திலே ஏந்தியருளினார். அதுகண்டயாவரும் அதியற்புதமடைந்து சிவபெருமானே பரம்பொருளென்று தெளிந்து, சுவாமிகளைத் துதித்தார்கள். பொறாமையதிகரித்துள்ள துருக்கர்களோ தங்கள்கருத்து முற்றாமையால் முகம்புலர்ந்து, தலைகவிழ்ந்துநிற்க; சுவாமிகள் யாதொருசலனமுமின்றி அரசனுடைய வேண்டுகோளின்படியே அந்த இரும்பை; எறிந்துவிட்டுச் சபையிலே வீற்றிருந்தருளினார்.

பின்னொருநாள் அத்துருக்கர்கள் அரசனையடைந்து, "துறவிகளுக்குச் சாதிபேதங்கூடாது" என்று சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருத்தலால் துறவியாகிய குமரகுருபரசுவாமிகளுக்கு நமது திருகத்திலே போசனஞ்செய்விக்கவேண்டும்." எனக்கூறக்கேட்டு, அரசனும் அதற்குடன்பட்டவனாய்ச் சுவாமிகளுக்கு விண்ணப்பஞ்செய்ய; அதற்குமிசைந்து, தமது வேலைக்காரனொருவனை ஒருதட்டிலே சில செவ்வரத்தம்பூவைவைத்து ஒரு வெள்ளைப்பரிவட்டத்தினாலே மறைத்துக்கொண்டுவரும்படி நியமித்துவிட்டு, தாம் முற்சென்று, அங்கே தமக்காகப் படைக்கப்பட்டிருந்த மாமிசங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியேவினாவி, "பன்றிமாமிசம் ஒன்றுமாத்திரம் தவறியதுபோலும்; ஆனால் அது என்னிடத்திலிருக்கின்றது." என்றுசொல்லி, வேலைக்காரன் கொண்டுவந்த தட்டைவாங்கும்படி கைநீட்ட; அம்மிருகத்தின்பெயரையுஞ் சொல்லாத துருக்கர்களோடு அரசனும்

வெட்கப்பட்டு அதனைத்தடுத்தான். சுவாமிகள் அரசனைத் தம்வயமாக்கவிரும்பி, அங்கேபடைத்துள்ள மாமிசங்களனைத்தையும் உற்றுநோக்க; அவைகளெல்லாம், காய், கனி, முதலிய பல அரிய தின்பண்டங்களாயின. அதுகண்ட அரசன் சுவாமிகளைவணங்கித் தனது குறையையிரந்து, "இனி அடியேன்செய்யவேண்டிய பணியாது?" என்று வினவ; சுவாமிகள், "உமது ஆளுகையிலுள்ள இக்காசிமாநகரத்தில் நாம் எண்ணிவந்த தருமத்தைநடாத்துதற்கு ஓரிடம்வேண்டும்." என்றார். அரசனும் "தேவரீருக்குப் பிரீதியான இடந்தருவேன்." என்று உடன்பட்டான். அன்றிரவு நித்திரைசெய்யும்பொழுது கேதாரேஸ்வரர் சுவாமிகளுடைய சொப்பனத்திலேதோன்றி, "அன்பனே நீ அரசனிடத்திலே உபயகருடன் வட்டமிடுமிடத்தைக் கேள்." என்று கட்டளையிட்டு மறைந்தருளினர். சுவாமிகள் விழித்தெழுந்து திருவருளைத்துதித்து, மற்றைநாள் உஷஸ்காலத்திலே கேதாரேஸ்வரரைத் தரிசித்துக்கொண்டு வெளியிலேவந்தபோது, அந்தக் கேதாரகட்டத்தின் அருகில் அரசனுடைய பள்ளிவாசலில் சிவாஞ்ஞைப்படி உபயகருடன்வட்டமிடக்கண்டு, திருவுளமகிழ்ந்து, அரசனிடத்திற்சென்று தெரிவித்தார். உடனே அரசன் யாதொருதடையுஞ்சொல்லாமல், அந்த இடத்தில் ஒரு பெரியமடங்கட்டி, அதிலே தனதுமுகருமுத்திரை வைத்து, தத்தஞ்செய்து, அவருக்கு வேண்டியசிறப்புக்களையும் கொடுத்தான். இதுவே குமாரசாமிமடம்என்று சொல்லப்படுகின்றது.

சுவாமிகள் அத்திருமடத்திலே எழுந்தருளியிருந்துகொண்டு, திருமலைநாயகர்கொடுத்த திரவியங்களைக்கொண்டு அவர்பெயரினால் ஒரு சத்திரங்கட்டுவித்து, தருமபரிபாலனஞ் செய்தமையேயன்றி, கேதாரநாதருக்கும் ஆலயமமைத்து, விதிப்படி நித்தியநைமித்திகங்களை ஏற்படுத்தி, காலந்தோறும் தரிசனஞ்செய்துகொண்டு அத்தலத்திலேயே வசித்திருந்தனர். ஒருநாள் தமது ஞானாசாரியரைத் தரிசிக்க வேண்டுமென்னும் அன்பு அதிகரித்தலால் கேதாரநாதரையும் விசு

வநாதரையும் தரிசித்துக்கொண்டு பிரஸ்தானமாகி, இடையிலுள்ள தலங்களைத்தரிசித்து, தருமபுரத்தின் எல்லையையடைந்து, சிவிகையி னின்றுமிறங்கி, திருமடத்தினுள்ளேசென்று, ஞானசாரியரைத்தரிசி த்து, வணங்கித்துதித்து, திருவருள்பெற்றுச் சிலநாள் உடன்வசித்து, காசியையடைந்தனர். இங்ஙனம் மூன்றுமுறைவந்து தரிசித்துச்சென் றபின்பு நாலாவதுமுறையிலே ஞானசாரியருடைய சந்நிதியிலேநின் று, "இனி அடியேனுக்கு எம்பெருமானுடைய தரிசனத்தைவிட்டு நீங்கிக் காசியிலிருக்க மனமில்லை:" என்று விண்ணப்பஞ்செய்தனர். அப்போது ஞானசாரியர் பிரிவாற்ருமையால்வருந்தும் சுவாமிகளை நோக்கி,

" காட்டிருந் தாலு மலையிருந் தாலுங் கருதரிய
நாட்டிருந் தாலு நமக்கென்ன காணல்ல தோர்கமலை
வீட்டிருந் தாண்டருள் ஞானப்ர காசன் விரைமலர்த்தாள்
கேட்டிருந் தாலும் பிறவா நெறிவந்து கிட்டிடுமே."

என்னும் கட்டளைக்கலித்துறையை யருளிச்செய்து, சொக்கலிங்கமூர் த்தியையும் மீனுட்சியம்மையையும் கிரியாபூசையாக எழுந்தருளப்பண் ணிக்கொடுத்து, திருவருள்பாலித்து விடையளித்தனர். சுவாமிகள் அவ்வாஞ்ஞையைச் சிரமேற்கொண்டுவணங்கி விடைபெற்று, அங்கே எழுந்தருளிவிளங்கும் சொக்கலிங்கமூர்த்தியின் சந்நிதியிலே நமஸ்கரி த்தெழுந்து, அரிதினீங்கி, காசியையடைந்து, அரிய சிவதருமங்களை யியற்றிக்கொண்டு சிவாநுபூதிச்செல்வராய்ச் சிலகாலம் வீற்றிருந்து வைகாசிமாதத்திலே, கிருஷ்ணபக்ஷதிருதிகையிலே, சிவபெருமான் திருவடிநீழலிற் கலந்தருளினர்.

முற்றிற்று

திருச்சிற்றம்பலம்.

---

குமரகுருபரசுவாமிகள்திருவடிவாழ்க.

கணபதி துணை.

## திருச்செந்தூர்க்

# கந்தர் கலிவெண்பா.

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையுந்—தேமேவு

நாதமுநா தாந்த முடிவு நவைதீர்ந்த
போதமுங் காணாத போதமா—யாதிநடு

வந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய்—வந்த

குறியுங் குணமுமொரு கோலமுமற் றெங்குஞ்
செறியும் பரம சிவமா—யறிவுக்

கநாதியா யைந்தொழிற்கு மப்புறமா யன்றே
மநாதிகளுக் கெட்டா வடிவாய்த்—தனாதருளின்

பஞ்சவித ரூப பரசுகமா யெவ்வுயிர்க்குந்
தஞ்சமென நிற்குந் தனிப்பொருளா—யெஞ்சாத

பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வுங்
காரணமு மில்லாக் கதியாகித்—தாரணியி

லிந்திரசா லம்புரிவோன் யாவரையுந் தான்மயக்குந்
தந்திரத்திற் சாராது சார்வதுபோன்—முந்துங்

கருவின்றி நின்ற கருவா யருளே
யுருவின்றி நின்ற வுருவாய்த்—திரிகரண

மாகவரு மிச்சை யறிவியற்ற லாலிலய
போகவதி காரப் பொருளாகி—யேகத்

தருவு மருவு முருவருவு மாகிப்
பருவ வடிவம் பலவா—யிருண்மலத்துண்
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமல
பாகமுற வேகடைக்கண் பாலித்துத்—தேகமுறத்
தந்த வருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து—மந்த்ரமுத
லாறத்து வாவுமண்டத் தார்ந்தவத்து வாக்களுமுற்
கூறத் தகுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து—மாறிவரு
௧௫ மீரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனியெண்பா
னூரவந்த நான்குநூ றாயிரத்துட்—டீர்வரிய
கன்மத்துக் கீடாய்க் கறங்குஞ் சகடமும்போற்
சென்மித் துழலத் திரோதித்து—வெந்நிரய
சொர்க்காதி போகமெல்லாந் துய்ப்பித்துப் பக்குவத்தா
னற்கா ரணஞ்சிறிது நண்ணுதலுந்—தர்க்கமிடுந்
தொன்னூற் பரசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து—முன்னூல்
விரதமுத லாயபல மெய்த்தவத்தி னுண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித்—தருள்பெருகு

---

(௧௨) மோகமுறும்பல்லுயிர் - சகலர். இவர் ஆணவம் கன்மம் மாயையென்னும் மூம்மலமுடையவர்.

(௧௬) மந்திரமுதல் ஆறத்துவாக்களாவன:—மந்திரம் பதம் வர்ணம் புவனம் தத்துவம் கலை. இவற்றுள், மந்திரங்கள் - ௧௧; பதங்கள்-அ௧; வர்ணங்கள்-௫௧; புவனங்கள்-௨௨௪; தத்துவங்கள்-௩௬; கலைகள்-௫. இவ்வாறனுள்ளே, முந்தியமூன்றும் சொல்வடிவமும், பிந்திய மூன்றும் பொருள்வடிவமுமாகி, ஆன்மாக்கள் இருவினைப்பயன்களை நுகர்தற்கு ஏதுவாயிருக்கும். அத்துவா - வழி.

௨௦ சாலோக சாமீப சாரூப மும்புசிப்பித்
தாலோகந் தன்னை யகற்றுவித்து—நால்வகையாஞ்
சத்திநி பாதந் தருதற் கிருவினையு
மொத்துவருங் கால முளவாகிப்—பெத்த
மலபரி பாகம் வருமளவிற் பன்னா
ளலமருதல் கண்ணுற் றருளி—யுலவா
தறிவுக் கறிவாகி யவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீக்கிப்—பிறியாக்
கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு—திருநோக்கா
௨௫ லூழ்வினையைப் போக்கி யுடலறுபத் தெட்டுநிலை
யேழுமத்து வாக்க ளிருமூன்றும்—பாழாக
வாணவ மான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணு
மடிஞானத் தாற்பொருளு மான்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி—முடியாத
தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகியெங்கு
நீக்கமற நின்றநிலைகாட்டிப்—போக்கும்
வரவு நினைப்பு மறப்பும் பகலு
மிரவுங் கடந்துலவா வின்ப—மருவுவித்துக்
௩௦ கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றுந் தாழ்சடையும்
வன்மழுவு மானுமுடன் மால்விடைமேன்—மின்னிடத்துப்

---

(௨௦) நால்வகையாஞ்சத்திநிபாதம்-மந்ததரம் மந்தம் தீவிரம் தீவிரதரம். சத்திநிபாதம் - சிற்சத்திபதிதல்.

(௩௦) கன்மமலத்தார்-பிரளயாகலர். இவர் ஆணவம் கன்ம மென்னும் இருமலமுடையவர்.

பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி—மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள்செய் துண்ணின்
றொருமலத்தார்க் கின்ப முதவிப்—பெருகியெழு
மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேயிருத்தி
யான்றபர முத்தி யடைவித்துத்—தோன்றவரும்
யானெனதென் றற்ற விடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக—ஞானந்
திருவுருவா யிச்சை செயலறிவு கண்ணா
வருளதுவே செங்கை யலரா—விருநிலமே
சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே யெவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே—மின்னுருவந்
தோய்ந்தநவ ரத்நச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியுந்—தேய்ந்தபிறைத்
துண்டமிரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும்—விண்ட
பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்
கருள்பொழியுங் கண்மலரீ ராறும்—பரிதி
பல்வு மெழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையு—நிலவுமிழும்
புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயுஞ்
சென்மவிடாய் தீர்க்குந் திருமொழியும்—வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூ ரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்துந் திருமுகமு—மெவ்வுயிர்க்கு

---

(௩௨) ஒருமலத்தார் - விஞ்ஞானகலர், இவர் ஆணவமலமுடையவர்.

ஊழ்வினையை மாற்றி யுலவாத பேரின்ப
வாழ்வுதருஞ் செய்ய மலர்முகமுஞ்—சூழ்வோர்
வடிக்கும் பழமறைக ளாகமங்க ளியாவு
முடிக்குங் கமல முகமும்—விடுத்தகலாப்
பாச விருரேந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமு—நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கு
மோக மளிக்கு முகமதியுந்—தாகமுடன்
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவுந்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையுங்—கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டு—மாரமுதந்
தேவர்க் குதவுந் திருக்கரமுஞ் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமு—மோவாது
மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர வணிந்த திருக்கரமு—மார்பகத்தில்
வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமு
முய்த்த குறங்கி லொருகரமு—மொய்த்த
சிறுதொடிசேர் கையுமணி சேர்ந்ததடங் கையுங்
கறுவுசம ரங்குசஞ்சேர் கையுந்—தெறுபோ
ரதிர்கே டகஞ்சுழற்று மங்கைத் தலமுங்
கதிர்வாள் விதிர்க்குங் கரமு—முதிராத
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
வம்பொன் மணிப்பூ ணகன்மார்பும்—பைம்பொற்
புரிநூலுங் கண்டிகையும் பூம்பட் டுடையு
மரைஞாணுங் கச்சை யழகுந்—திருவரையு

நாதக் கழலு நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமுஞ்—சோதி
யிளம்பரிதி நூறா யிரங்கோடி போல
வளந்தருதெய் வீக வடிவு—முளந்தனிற்கண்
டாதரிப்போர்க் காருயிரா யன்பரகத் தாமரையின்
மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே—யோதியவைந்
தோங்காரத் துள்ளொளிக்கு முள்ளொளியா யைந்தொழிற்கு
நீங்காத பேருருவாய் நின்றோனே—தாங்கரிய
மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையா
லொத்த புவனத் துருவே யுரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த
கலையே யவயவமாக் காட்டுமத்து வாவி
னிலையே வடிவமா நின்றோய்—பலகோடி
யண்ட முருவாகி யங்கஞ் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுட் கரணமாய்த்—தொண்டுபடு
மாவிப் புலனுக் கறிவளிப்ப வைந்தொழிலு
மேவித் தனிநடத்து மெங்கோவே—மேவ
வருமட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானந்
தருமட்ட யோகத் தவமே—பருவத்
தகலாத பேரன் படைந்தோ ரகத்துட்
புகலாகு மின்பப் பொருப்புஞ்—சுகலளிதப்
பேரின்ப வெள்ளப் பெருக்காறு மீதானந்
தேரின்ப நல்குந் திருநாடும்—பாரின்ப
மெல்லாங் கடந்த விருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த வணிநகரும்—தொல்லுலகி

வீறு முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரகதமு — மேறுமதந்
தோய்ந்து களித்தோர் துதிக்கையினாற் பஞ்சமலங்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும் — வாய்ந்தசிவ
பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தொடையுங் — காரணத்து
ளைந்தொழிலு மோவா தளித்துயர்ந்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசுஞ் — சந்ததமு
நீக்கமின்றி யாடி நிழலசைப்பான் போற்புவன
மாக்கி யசைத்தருளு மாணையுந் — தேக்கமழ்ந்து
வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே — தேசுதிகழ்
பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி — யாங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
யைந்து முகத்தோ டதோமுகமுந் — தந்து
திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறு
மொருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப — விரிபுவன
மெங்கும் பரக்க விமையோர்கண் டஞ்சுதலும்
பொங்கு தழற்பிழம்பைப் பொற்கரத்தா — லங்க
ணெடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோ — யடுத்ததொரு
பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப் — போதொருசற்
றன்னவளுங் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுருவாய் — முன்னர

ரறுமீன் முலையுண் டழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலு
மன்னவள்கண் டவ்வுருவ மாறினையுந்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்றாக மேவுவித்துச்—செய்ய
முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பா
லகத்துண் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த
வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி
மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றோன்றுந்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்
விருப்பா லளித்தநவ வீரருக்குண் முன்றோன்
மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்
தங்கட் புவன மனைத்து மழித்துலவுஞ்
செங்கட் கடாவதனைச் சென்றுகொணர்ந்—தெங்கோன்
விடுக்குதியென் றுய்ப்பவதன் மீதிவர்ந்தெண் டிக்கு
நடத்தி விளையாடு நாதா—படைப்போ
னகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தென்
றுகந்த பிரணவத்தி னுண்மை—புகன்றிலையாற்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனங்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும்
பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரம மொழிந்தோனே—கொன்னெடுவேற்
றாரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த்

தெள்ளு திரைகொழிக்குஞ் செந்தூரிற் போய்க்கருணை
வெள்ள மெனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக்

கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச்—சயேந்திரனுஞ்

சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே—காரவுணன்

வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்க ளுற்படையுஞ் சங்கரித்துப்—பானு

பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த

வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய்—போரவுண

னங்கமிரு கூறா யடன்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட னார்த்தெழுந்து தோன்றுதலு—மங்கவற்றுட்

சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
வேறி நடாத்து மிளையோனே—மாறிவரு

சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே—மூவர்

குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே—மறைமுடிவாஞ்

சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவுந்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே—பொய்விரவு

காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு

கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போ
லேனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத்

தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே—யுள்ளமுவந்
தாறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்
கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்
பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பிசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையுந்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையு
மெவ்விடம்வந் தெம்மை யெதிர்ந்தாலு—மவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளு
மச்ச மகற்று மயில்வேலுங்—கச்சைத்
திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையு மீரா
றருள்விழியு மாமுகங்க ளாறும்—விரிகிரணஞ்
சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறு
மெந்தத் திசையு மெதிர்தோன்ற—வந்திடுக்க
ணெல்லாம் பொடிபடுத்தி யெவ்வரமுந் தந்துபுகுந்
துல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமா
மாசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையு—மோசை
யெழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுட

(௧௦௯) ஆறுதிருப்பதி-திருப்பரங்குன்றம் திருச்சீரலைவாய் திருவாவினன்குடி திருவேரகம் குன்றுதோறாடல் பழமுதிர்சோலை.

௧௨௦ னிம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்
தாயும் பழைய வடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
டடியேற்கு முன்னின் றருள்.

திருச்செந்தூர்க்கந்தர்கலிவெண்பா
முற்றிற்று.

---

குமரகுருபரசுவாமிகள் ஐந்துவயதுவரையும் ஊமையாய் இருந்து ஐந்தாம்வயதிலே திருச்செந்தூர் முருகக்கடவுளது திருவருளினால் இக்கலிவெண்பாவை அருளிச்செய்தார். வித்தையில் விருப்பமுடையவர்கள் இக்கலிவெண்பாவைத் தினந்தோறும் நியமமாக அன்புடன் பாராயணம் பண்ணக்கடவர்கள்.

திருச்சிற்றம்பலம்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

மதுரை

# மீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ்.

## விநாயககக்கடவுள்.

கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முங்கட் கடைக்கடைக் கனலுமெல்லை, கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி கடைக் கா றிரட்ட வெங்கோன், — போர்கொண்ட வெண்கோட் பொல ன்குவடு பொதியும்வெண் பொடிதுடி யடித்து வைத்துப், புழுதியாட் டயராவொ * ரயிராவ ணத்துலவு போர்க்களிற் றைத்து திப்பாந், — தார்கொண்ட மதிமுடி யொருத்தன் றிருக்கண்மலர் சாத்தக் கிளர்ந்து பொங்கித், தவழுமிள வெயிலுமழ நிலவுமள வளவலாற் றண்ணென்று வெச்சென்று பொன், — வார்கொண் டணிந்தமுலை மலைவல்லி கர்ப் பூர வல்லியபி ராம வல்லி, மாணிக்க வல்லிமர கதவல்லி யபிடேக வல்லிசொற் றமிழ் தழையவே.

---

## காப்புப்பருவம்.

### திருமால்.

மணிகொண்ட நெடுநேமி வலயஞ் சுமந்தாற்று மாசுணச் சூட்டு மோட்டு, மால்களிறு பிடர்வைத்த வளரொளி விமானத்து வாலுளை

---

* அயிராவணம் - இரண்டாயிரங்கொம்புள்ளயானை. இது சிவபெருமானுக்குரியது. இதை அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் வாரானைப் பருவம் (௬)வது செய்யுளினுங்காண்க. தார்-அரும்பு.

காப்புப்பருவம் - பாட்டுடைத்தலைவரைத் திருமால்முதலியோராற் காவல்புரிவிக்கும்பருவம்.

மடங்க ருங்கு, — மணிகொண்ட பீடிகையி னம்பொன்முடி முடிவைத்தெ மையனொடு வீற்றி ருந்த, வங்கயற் கண்ணமுதை மங்கையர்க் கரசியையெ மம்மனையை யினிது காக்க, — கணிகொண்ட தண்டுழாய்க் காடலைத் தோடுதேங் கலுழிபாய்ந் தளறு செய்யக், கழனிபடு நடவையிற் கமலத் தணங்கரசொர் கையணை முகந்து செல்லப், — பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப் பணைத்தோ ளொருத்தலைப்பப், பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலே. (க)

## சிவபெருமான்.

### வேறு.

சிகர வடவரை குனிய நிமிர்தரு செருவி லொருபொரு வில்லெனக் கோட்டினர், செடிகொள் பறிதலை யமண ரெதிரெதிர் செலவொர் மதலைசொல் வைகையிற் கூட்டினர், திருவு மிமையவர் தருவு மரவொலி செயவ லவர்கொள நல்குகைத் தீட்டினர், சிறிய வெனதுபுன் மொழியும் வடிதமிழ் தெரியு மவர்முது சொல்லெனச் சூட்டினர், —

---

(க) கணி-கண்ணி.

திருமழிசையாழ்வார் காஞ்சியில்வசிக்குங்கால், திருவெஃகாவென்னுந்தலத்தில் தொண்டுபூண்டிருந்த ஓர்விருத்தைக்கு எவ்வனமளிக்கக்கண்ட பல்லவராஜன், தானும் அவராலே எவ்வனம்பெறவிரும்பி, அவர்சீடராகிய கணிகிருஷ்ணரிடத்தேயறிவித்து, அவர் உடன்படாமையால் எனது நாட்டைவிட்டகல்வது தகுதியெனக்கூறினன். உடனே கணிகிருஷ்ணர் திருமழிசையாழ்வாரிடம் விண்ணப்பித்துத் தாம் முற்செல்ல, ஆழ்வாரும் "கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி, மணிவண்ணா நீகிடக்கவேண்டா — துணிவுடைய, செந்நாப் புலவனிதோ செல்கின்றே னீயுமுன்றன், பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்." என்னும் செய்யுளைப்பாடிக்கொண்டு பிற்றொடர்ந்தவழி, விஷ்ணுமூர்த்தியும் உடனெழுந்தருளினர். என்பது சரித்திரம்.

பகரு மிசைதிசை பரவ விருவர்கள் பயிலு மியநெறி வெள்வளைத் தோட்டினர், பசிய வறுகொடு வெளிய நிலவிரி பவள வனமடர் பஞ் சடைக் காட்டினர், பதும முதல்வனு மெழுத வரியதோர் பனுவ லெ ழுதிய வைதிகப் பாட்டினர், பரசு மிரசித சபையி னடமிடு பாத பத் யுக முள்ளம்வைத் தேத்துதுந், — தகர மொழுகிய குழலு நிலவுமிழ் தரள நகையுமெ மையனைப் பார்த்தெதிர், சருவி யமர்பொரு விழியு மறுகிடை தளர வளர்வதொர் செவ்விமுற் றுக்கன, தனமு மனனுற வெழுதி யெழுதரு தமது வடிவையு மெள்ளிமட் டேற்றிய, தவள மலர் வரு மிளமி னொடுசத தளமின் வழிபடு தையலைத் தூத்திரை, — மகர மெறிகட லமுதை யமுதுகு மழலை பழகிய கிள்ளையைப் பேட்டன, மடவ நடைபயில் பிடியை விரைசெறி வரைசெய் புயமிசை வையம் வைத் தாற்றிய, வழுதி யுடையகண் மணியொ டுலவுபெண் மணியை யணிதிகழ் செல்வியைத் தேக்கமழ், மதுர மொழுகிய தமிழி னியல்ப யின் மதுரை மரகத வல்லியைக் காக்கவே. (௨)

## சித்திவிநாயகக்கடவுள்.

### வேறு.

கைத்தல மோடிரு கரடக் களைத்திரை, கக்குக டாமுடைக் கட லிற் குளித்தெமர், — சித்தம தாமொரு தறியிற் றுவக்குறு, சித்திவி நா யக னிசையைப் பழிச்சுதும், — புத்தமு தோவரு டழையத் தழைத்த தொர், பொற்கொடி யோவென மதுரித் துவட்டெழு, — முத்தமிழ்தே ர்தரு மதுரைத் தலத்துறை, முத்தன மேவுபெ ணரசைப் புரக்கவே.

## முருகக்கடவுள்.

### வேறு.

பமர மடுப்பக் கடாமெடுத் தூற்றுமோர் பகடு நடத்திப் புலோம சைச் சூர்ப்புயல், பருகி யிடக்கற் பகாடவிப் பாற்பொலி பரவை

(௨) இருவர்கள் - இரண்டுகேந்தருவர்கள். இதை "கந்தரு வரையிரு காதிற் சேர்த்தனே" என்பதனானு முணர்க. தோடு தானியாகுபெய ராய்ச் செவியையுணர்த்திற்று. யுகம் - இரண்டு. மடவம் - இளமை.

(ச) பமரம் பிரமரமென்பதன்றிரிபு. பரவையென்றது இந்திரனே,

டைப்பத் மமாதெனத் தோற்றிய, — குமரி யிருக்கக் கலாமயிற் கூத்தயர் குளிர்புன மொய்த்திட் டசாரலிற் போய்ச்சிறு, குறவர் மகட்குச் சவாமிடற் கேக்கறு குமரனை முத்துக் குமாரனைப் போற்றுதும், — ழிந்திரை முற்றத் துமேருமத் தார்த்துமுள், ளெயிறுகு நச்சுப் பணுடவத் தாப்பிசைத், திறுக விறுக்கித் துழாய்முடித் தீர்த்தனொ டெவரு ழித்துப் பராபவத் திச்சுட, — வமுதுசெய் வித்திட் டபோனகத் தாற்சுட ரடரு மிருட்டுக் கிரீவமட் டாக்கிய, வழகிய சொக்கற் குமால் செயத் தொட்டிக லமர்செய் கயற்கட் குமாரியைக் காக்கவே. (௪)

பி ர ம தே வ ர்.

வேறு.

மேகப் படலக் குழலி வாய்மடுத் துண்ணவும் விட்புலம் விருந் தயர வுட், வெள்ளமுதம் விளைங் கருந்திரைப் பைந்துகில் விரித்துடுத்; துத்தி விரிப, — நாகத்து மிச்சுடிகை நடுவட் கிடந்தமட நங்கையைப் பெற்று மற்றந், நாகணைத் துஞ்சுதன் றந்தைக்கு வந்துதவு நளினக் குழந்தை காக்க, — பாகத்து மரகதக் குன்றொன்றொர் தமனியக் குன்றொடு கிளைத்து நின்ற, பவளத் தடங்குன் றுளக்கண்ண தென்றப் பரஞ்சுடர் முடிக்கு முடிமூன், — றுகத் தமைத்துப்பி றொருமுடிதன் முடிவைத் தணங்கரசு வீற்றிருக்கு, மபிடேக வல்லியை யளிக்குல முழக்குகுழ லங்கயற் கண்ண முதையே. (௫)

தேவேந்திரன்.

வேறு.

சுழியுங் கருங்கட் குண்டகழி சுவற்றுஞ் சுடர்வேற் கிரிதிரித்த, தோன்றற் களித்துச் சுறவுயர்த்த சொக்கப் பெருமான் செக்கர்முடி, —

---

(௪) பராபவம் - அவமதிப்பு.

(௫) உத்தி - படப்பொறி. பாகத்துமரகதக்குன்றொன்றோர் தமனியக் குன்றொடுகிளைத்துநின்ற பவளத்தடங்குன்று - விஷ்ணுமூர்த்தியையும் பிரமதேவரையும் இருபக்கத்துமுடைய ஏகபாதமூர்த்தி.

பொழியுந் தரங்கக் கங்கைவிரை புனல்கால் பாய்ச்சத் தழைந்துவிரி, புவனந் தனிப்பூத் தருள்பழுத்த பொன்னங் கொடியைப் புரக்கவழிந், — இழியுந் துணர்க்கற் பகத்தினற விதழ்த்தேன் குடித்துக் குமட்டியெதி, ரொடுக்குஞ் சிறைவண் டுவட்டுறவுண் டிணைக்கக் கனைக்கு மதக்கலுழிக், — குழியுஞ் சிறுகணேற்றுருமுக் குரல்வெண் புயலுங் கரும்புயலுங், குன்றங் குலைய வுகைத்தேறுங் குலிசத் தடக்கைப் புத்தேளே. (சு)

## திருமகள்.

வேறு.

வெஞ்சூட்டு நெட்டுடல் விரிக்கும் படப்பாயன் மீமிசைத் துஞ்சுநீல, மேகத்தி னகத்து விடுசுடர்ப் படலைமணி மென்பர லுறுத்தநொந்து, — பஞ்சூட்டு சீறடி பதைத்துமதன் வெங்கதிர்ப் படுமிள வெயிற்கு டைந்தும், பைந்துழாய்க் காடுவிரி தண்ணிழ லொதுங்குமோர் பசுங்கொடியை யஞ்ச லிப்பா, — மஞ்சூட் டகட்டுநெடு வான்முகடு துருவுமொரு மறையோதி மஞ்ச லிக்க, மறிதிரைச் சிறைவிரிய மாயிர முகக்கடவுண் மந்தா கினிப் பெயர்த்த, — செஞ்சூட்டு வெள்ளோதிமங்குடி யிருக்கும்வளர் செஞ்சடைக் கருமி டற்றுத், தேவுக்கு முன்னின்ற தெய்வத்தை மும்மூலத் திருவைப் புரக்க வென்றே. (எ)

## கலைமகள்.

வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை விரும்புஞ் சுரும்பர் பாட, விளைநறவு கக்கும் பொலன்பொகுட் டலர்கமல வீட்டுக் கொழித்தெ டுத்துத், — தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலி னன்பினைந் திணையென வெடுத்த விறைநூற், றெள்ளமுது கூட்டுணுமோர் வெள்ளோதி மத்தினிரு சீறடி முடிப்பம் வளர்பைங், — கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை யொழுகுதீங் கிளவியுங் களிம யிற்குக், கிளரிளஞ் சாயலு நவ்விக்கு நோக்கும்விரி கிஞ்சுகச் சூட்டர சனப், — பிள்ளைக்கு மடநடையு முடனுடு மகளிர்க்கோர் பேதைமையு முதவி முதிராப்,

(அ) "அன்பினைந்திணை" என இறையெடுத்தநூல் இறையனா ரகப்பொருள்.

பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொரு பாண்டிப் பிராட்டியை
க் காக்க வென்றே. (அ)

## தூர்க்கை.

வடிபட்ட முக்குடுமி வடிவே றிரித்திட்டு வளைகருங் கோட்டு மோட்டு, மகிடங் கவிழ்த்துக் கடாங்கவிழ்க் குஞ்சிறுகண் மால்யானை வீக்க வாங்கும், — றுடிபட்ட கொடிநுண் ணுசுப்பிற் குடைக்தெனச் சுடுகடைக் கனலி தூண்டுஞ், சுழல்கண் முடங்குளை மடங்கலை யுகைத் தேறு சூரரிப் பிணவு காக்க, — பிடிபட்ட மடநடைக் கேக்கற்ற கூடத் தற் பிடிக்குழாஞ் சுற்ற வொற்றைப், பிறைமருப் புடையதொர் களி ற்றினைப் பெற்றெந்தை பிட்டுண்டு கட்டுண்டு நின், — றடிபட்ட திருமேனி குழையக் குழைத்திட்ட வணிமணிக் கிம்பு ரிக்கோ, டாக த்த தாகக் கடம்பா டவிக்குள்விளை யாடுமொர் மடப் பிடியையே. (கூ)

## சத்தமாதர்கள்.

### வேறு.

கடகளி றுதவுக பாய்மிசைப் போர்த்தவள் கவிகுவி றுறுகலின் வாரியைத் தூர்த்தவள், கடல்வயி றெரியவொள் வேலினைப் பார்த்த வள் கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவ, — ளிடியுக வடவளி யேறுகைத் தார்த்தவ ளெழுதரு முழுமறை நூலினிற் கூர்த்தவ, ளெயிறுகொ டெழுதெழு பாரினைப் போர்த்தவ ளெனுமிவ ரெழுவர்க டாண்முடிச் சூட்டுதுங், — குடமொடு குடவியர் பாணிகைக் கோத் திடு குரவையு மலதொர்ப ணுமுடிச் சூட்டருள், குழிகொள நடமிடு பாடலுக் கேற்பவொர் குழலிசை பழகளி பாடிடக் கேட்டுடை, — மடலவிழ் துளபந றுவெடுத் தூற்றிட மழகளி றெனவெழு கார்முகச் சூற்புயல், வரவரு மிளையகு மாரியைக் கோட்டெயின் மதுரையில் வள ர்கவு மாரியைக் காக்கவே. (க0)

---

(கூ) மால்யானை - இங்கே தனம்.

(க0) சத்தமாதர்கள்-மாகேசுவரி நாராயணி கௌமாரி இந்திராணி காளி அபிராமி வராகி. இவர்களை இச்செய்யுளில் முறையேகொள்க.

## முப்பத்துமூவர்.

வேறு.

அமரில் வெந்நிடமெ வுதியர் பின்னிடமொ ரபயர் முன்னிடவெ னத்தொக்க வோடவு, மளவு மெம்முடைய திறையி தென்னமுடி யரசொண்ணிலரொர் முற்றத்து வாடவு, மகில மன்னரவர் திசையின் மன்னரிவ ரமர ரொன்றுமுறை இக்கெட்டு ரூடவு, மமுத வெண்மதியின் மரபை யுன்னியுனி யவரி யண்ணன்முழு வெப்பத்து மூழ்கவுங், — குமரி பொன்னி வைகை பொருநை நன்னதிகள் குதிகொள் விண்ணதியின் மிக்குக் குலாவவுங், குவடு தென்மலையி னிகர தின்மைசார் குடிகொள் பொன்மலைது தித்துப் பராவவுங், குமரர் முன்னிருவ ரமர ரன்னையிவள் குமரி யின்னமுமெ னச்சித்தர் பாடவுங், குரவை விம்மவர மகளிர் மண்ணிலெழில் குலவு கன்னியர்கள் கைக்கொக்க வாடவுங், — கமல முன்னியிடு மரச வன்னமெழு கடலி லன்னமுட னட்புக்கை கூடவுங், கரிய செம்மலொடு மிளைய செம்மல்விடு கருடன் மஞ்ஞையொடொர் கட்சிக்கு ளூடவுங், கடவி விண்ணரசு நடவுவெம்முனைய களிறு கைம்மலைசெல் கொப்பத்து வீழவுங், கனக மன்னுதட நளினி துன்னியிரு கமல மின்னுமொரு பத்மத்துண் மேவவு, — மிமய மென்னமனு முறைகொ டென்னருமெ மிறையை நன்மருகெனப்பெற்று வாழவு, மெவர்கொல் பண்ணவர்க ளெவர்கொன் மண்ணவர்க ளெதுகொல் பொன்னுலகெ னத்தட்டு மாறவு, மெழில்செய் தென்மதுரை தழைய மும்முலையொ டெழுமெ னம்மனைவ னப்புக்கொர் காவல, ரிருவ ரெண்மர்பதி னொருவர் பன்னிருவ ரெனும விண்ணவர்கண் முப்பத்து மூவரே. (கக)

காப்புப்பருவம் முற்றிற்று.

---

(கக) கட்சி-பக்ஷிக்கூடு. கனகநளினி - பொற்றாமரைத்தீர்த்தம். நளினி - நளினத்தையுடையது. முப்பத்துமூவராவார் - மருத்துவர் இருவர்; வசுக்கள் எண்மர்; உருத்திரர் பதினொருவர்; ஆதித்தர்பன்னிருவர். இவர்களே தனித்தனி கோடியராய் முப்பத்துமுக்கோடி தேவரெனப்படுவர்கள்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

மதுரை

# மீனாட்சியம்மைகுறம்.

காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கார்கொண்ட பொழின்மதுரைக் கர்ப்பூர வல்லிமணங் கமழுந் தெய்வத், தார்கொண்ட கருங்குழலங் கயற்கண்ணி யருட்குறஞ்செந் தமிழாற் பாட, வார்கொண்ட புகர்முகத்தைங் கரத்தொருகோட் டிரு செவிமும் மதத்து நால்வாய்ப், போர்கொண்ட கவுட்சிறுகட் சித்திவி நா யகன்றுணைத்தாள் போற்று வாமே.

சிந்து.

பூமருவிய பொழிறிகழ் மதுரா
புரிமருவிய வங்கயற்க ணம்மை
தேமருவிய மதிதவழ் குடுமித்
தென்பொதியக் குறத்தி நானம்மே. (௧)

செந்நென்முத்துங் கன்னன் முத்துமொளிர்
திகழ்மதுரை யங்க யற்கணம்மை
பொன்னுமுத்துஞ் சொரியும் வெள்ளருவிப்
பொதியமலைக் குறத்தி நானம்மே. (௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செண்டிருக்கும் வடவரையிற் சேவிருக்கு மாசிருக்குந் தென்ன ரீன்ற, கண்டிருக்கு மதுரமொழிக் கனிவிருக்குந் துவரிதழங் கயற்கட்

பாவை, வண்டிருக்கு நறைக்கமல மலரிருக்கும் பரிபுரத்தாண் மனத்துள் வைத்துக், கொண்டிருக்குந் தமிழ்முனிவன் குடியிருக்கும் பொதியமலைக் குறத்தி நானே. (ங)

சிந்து.

மங்கைகுங்குமக் கொங்கைபங்கயச்
செங்கையங்கயற் கண்ணிநாள் மறைபண்ணிநாள்
பங்கனைக்கழ லங்கனைச்சொக்க
லிங்கனைக்கூடி மேவுவாய் கொல்லிப்பாவையே. (ச)

மேற்படிவேறு.

வஞ்சியேயப ரஞ்சியேமட மயிலேவரிக் குயிலே
கொஞ்சியேபழி யஞ்சியாருனைக் கூடுவாரினி யம்மே. (ரு)

மேற்படிவேறு.

புழுகாலே தரைமெழுகு பிள்ளையார்வை
பொற்கோல மிட்டுநிறை நாழிவையாய். (சா)

மேற்படிவேறு.

ஆழிகைதா வழகாருமங் கயற்கணம்மை பங்க
ரழகியசொக்க ரருள்புரிவருன் பான்மருவி யம்மே. (எ)

மேற்படிவேறு.

பேசு மென்குறி மோச மென்றிடி
லார்சொ லும்பரி யாசமே
வாச மென்குழ லாய் சவுந்தர
மாறர் வந்தணை வாரம்மே. (அ)

மேற்படிவேறு.

நங்கை நீகரு துங்குறி சொல்லவுன்
செங்கை தனைக்கொடு வாவெங்க
ளங்க யற்கண்ணி பங்க ரருட்சொக்க
லிங்க ரினியணை வாரம்மே. (கூ)

மேற்படி வேறு.

தூசுமொரு காசும்வையுண் ணேசம்வரவே சொல்னா
ளீசர்கயி லாசர்மது ரேசருனைச்சேர் வாரம்மே. (௧௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கைக்குறியின் முகக்குறிகண் டிடக்கெழுந்த கெவுளிநன்று கன்னி மார்வந், திக்குறிகண் டறக்கின்று மிடக்கண்ணுந் துடிக்கின்ற திதன்மே லுண்டோ, பொய்க்குறிய சிறுமருங்குற் பூங்கொடிநீ யங்கயற்கட் பூவை மாதின், மெய்க்குறியும் வளைக்குறியு முலைக்குறியு மணிக்குவைர் தோண் மேவு வாயே. (௧௧)

சிந்து.

கடமலைக்கும் வெம்மலையாங் கைம்மலையு மாயிரவாய்ப்
படமலைக்கு மரவரசும் பதித்துருகும் பார்மடந்தை
குடமலைக்குந் தடமுலையாங் குலமலைக ளிரண்டெனவே
வடமலைக்குந் தென்பொதிய மலயமலை யென்மலையே. (௧௨)

திங்கண்முடி சூடுமலை தென்றல்விளை யாடுமலை
தங்குமுயல் சூழுமலை தமிழ்முனிவன் வாழுமலை
யங்கயற்கண் ணம்மைதிரு வருள்சுரந்து பொழிவதெனப்
பொங்கருவி தூங்குமலை பொதியமலை யென்மலையே. (௧௩)

கன்னமதஞ்சாய்த் துறங்குகொலைக் களிறுகிடந்து பிளிறுமலை
தென்னந்தமிழும் பசுங்குழவித் தென்றற்கொழுந்துந் திளைக்குமலை
யன்னம்பயிலும் பொழிற்கூட லறலங்கூந்தற் பிடியாண்ட
பொன்னங்குமிழ்த் தடஞ்சாரற் பொதியமலையென் மலையம்மே. (௧௪)

மந்தமா ருதம்வளரு மலையெங்கள் மலையே
வடகலைதென் கலைபயிலு மலையெங்கள் மலையே
கந்தவேள் விளையாடு மலையெங்கள் மலையே
கனகவள மணிவிளையு மலையெங்கள் மலையே

---

(௧௫) வது செய்யுள் எப்பிரதிகளிலும் ஓரடி குறைந்தேயிருக்கின்றது.

யிந்தமா நிலம்புரக்கு மங்கயற்கண் ணம்மை
 யின்பமுறுந் தென்பொதிய மலையெங்கண் மலையே. (கரு)

சிங்கமும்வெங் களிறுமுடன் விளையாடு மொருபாற்
 சினப்புலியு மடப்பிணையுந் திளைத்திடுமங் கொருபால்
வெங்கரடி மரையினொடும் விளையாடு மொருபால்
 விடவரவு மடமயிலும் விருந்தயரு மொருபா
லங்கணமர் நிலங்கவிக்கும் வெங்கவிகை நிழற்கீ
 ழம்பொன்முடி சூடுமெங்க ளபிடேக வல்லி
செங்கமலப் பதம்பரவுங் கும்பமுனி பயிலுந்
 தென்பொதிய மலைகாண்மற் றெங்கண்மலை யம்மே. (கசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கச்சைப் பொருது மதர்த்தெழுந்து கதிர்த்துப் பணைத்த மணிக் கொங்கைப், பச்சைப் பசுங்கொம் பங்கயற்கட் பாவை பயந்த வாறிருதோட்,.செச்சைப் படலை நறுங்குஞ்சிச் சிறுவன் றனக்குப் பெருந் தடங்கட், கொச்சைச் சிறுமி தனைக்கொடுத்த குறவர் குலமெங் குல மம்மே. (கஎ)

சிந்து.

கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக் கிழங்குகல்லி யெடுப்போங்
 குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக் கொடியில்வைத்துத் தொடுப்போம்
பழம்பிழிந்த கொழுஞ்சாறுந் தேறலும்வாய் மடுப்போம்
 பசுந்தழையு மரவுரியு மிசைந்திடைவ யுடுப்போஞ்
செழுந்தினையு நறுந்தேனும் விருந்தருந்தக் கொடுப்போஞ்
 சினவேங்கைப் புலித்தோலின் பாயலிற்கண் படுப்போ
மெழுந்துகயற் கணிகூலில் விழுந்துவினை கெடுப்போ
 மெங்கள்குறக் குடிக்கடுத்த வியல்பிதுகா ணம்மே. (கஅ)

புல்வாயின் பார்வையைவெம் புலிப்பார்வை யிணங்கும்
 புதுத்தினைகல் லுரற்பாறை மூன்றிரெுறு முணங்கும்

கல்விடரில் வரிவேங்கை கடமானோ டுறங்குங்
 கருமலையில் வெள்ளருவி கறங்கிவழிந் திறங்குஞ்
சில்வலையும் பலவாரு முன்னிறப்பிற் றூங்குஞ்
 சிறுதுடியும் பெருமுரசுந் திசைதொறுநின் றேங்குங்
கொல்லையின்மான் பிணையுமிளம் பிடியும்விளை யாடுங்
 குறிச்சியெங்கள் குறச்சாதி குடியிருப்ப தம்மே. (கசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வெள்ளிமலைக் குறவன்மகன் பழனிமலைக் குறவனெங்கள் வீட்டிற் கொண்ட, வள்ளிதனக் கேகுறவர் மலைபாட்சி சீதனமாய் வழங்கினாற், பிள்ளைதனக் கெண்ணெயிலை யனைக்குமொரு துணியிலையென் பிறகே வந்த, கள்ளிதனைக் கொண்டவன்றே குறவனுக்கு மெனக்கு மிலை கஞ்சி தானே. (உ0)

சிந்து.

கூடல்புன வாயில்கொடுங் குன்றுபரங் குன்று
 குற்றால மாப்பனூர் பூவணநெல் வேலி
யேடகமா டானைதிருக் கானப்பேர் சுழிய
 லிராமேசந் திருப்புத்தூ ரிவைமுதலாந் தலங்க
ளாடியெங்க ளங்கயற்கண் ணாண்டதமிழ்ப் பாண்டி
 நன்னாடும் பிறநாடு மென்னாடே தாகக்
காடுமலை யுந்திரிந்து குறிசொல்லிக் காலங்
 கழித்தேனென் குறவனுக்குங் கஞ்சிவரா தம்மே. (உக)

பொற்கொடிவள் ளிக்கிளைய பூங்கொடியென் பாட்டி
 பூமகன்மா யவன்மார்பிற் பொலிவளென்று சொன்னாள்
மற்றவள்பெண் களிலெங்கள் பெரியதாய் கலைமான்
 மலரயனார் திருநாவில் வாழ்வளென்று சொன்னாள்
பெற்றவெங்கள் நற்றாயுஞ் சுந்தரியிந் திரன்றேவி
 பெறுமென்றாள் பின்னெங்கள் சிறியதா யம்மே
சொற்றகுறிக் களவிலையென் கன்னிமா ரறியச்
 சொன்னேன்பொய் யலநாங்கள் சொன்னதுசொன் னதுவே.

முன்னொருநா ளம்மைதடா தகைபிறந்த நாளின்
 முகக்குறிகண் டிவளுலக முழுதாளு மென்றேன்
பின்னொருநாள் கைக்குறிபார்த் தம்மையுனக் கெங்கள்
 பிஞ்ஞகர்தா மணவாளப் பிள்ளையென்று சொன்னே
னன்னையவண் மெய்க்குறிக ளனைத்தையும்பார்த் துனக்கோ
 ராண்பிள்ளை யுண்டுபிறந் தரசாளு மென்றேன்
சொன்னகுறி யெல்லாமென் சொற்படியே பலிக்குந்
 தொகுத்துநீ நினைந்தகுறி யினிச்சொலக்கே ளம்மே. (௨௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒருகாலங் கஞ்சியுமென் குஞ்சிதலைக் கெண்ணெயுமோ ருடுப்புமீந்தாற், பொருகால வேற்கண்ணாய் மனத்துநீ நினைந்தவெலாம் புகல்வன் கண்டாய், வருகால நிகழ்காலங் கழிகால மூன்றுமொக்க வகுத்துப் பார்த்துத், தருகாலந் தெரிந்துரைப்ப தெளிதரிதன் றெங்கள்குறச் சாதிக் கம்மே. (௨௪)

சிந்து.

குங்குமஞ்சந் தனக்குழம்பிற் குழைத்துத்தரை மெழுகிக்
 கோலமிட்டுக் குங்குலியக் கொழும்புகையுங் காட்டிச்
செங்கனக நவமணிகள் திசைநான்கும் பரப்பித்
 தென்மேலை மூலைதனிற் பிள்ளையாரும் வைத்துப்
பொங்குநறு மலரறுகோ டைங்கரர்க்குச் சாத்திப்
 புழுகுநெய்வார்த் திடுவிளக்கு நிறைநாழி வைத்து
மங்கையருக் கரசியெங்க ளங்கயற்கண் ணமுதை
 மனத்துள்வைத்து நினைத்தகுறி யினிச்சொலக்கேளம்மே. (௨௫)

மூன்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
 முறத்திலொரு படிநெல்லையென் முன்னேவை யம்மே
யிந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
 யிரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
யுன்னுமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந் துதித்தா
 ருனக்கினியெண் ணினகரும மிமைப்பினிற்கை கூடு

மென்றனை யெங்கள்குலக் கன்னிமா ரறிய
வெக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே. (௨௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நெல்லளந் திட்ட போது நிமித்தநன் றிடத்தெ ழுந்த
பல்லியும் வரத்தே சொல்லும் பத்தினிப் பெண்கள் வாயாற்
சொல்லிய வாய்ச்சொ லன்றித் தும்மலு நல்ல தேகா
ணல்லது கிளைகூட் டும்புற் றுந்தைவீச் சழகி தம்மே. (௨௭)

சிந்து.

கொண்டுவா வம்மேகை கொண்டுவா வம்மே
கொழுங்கனக நவமணிக ளளைந்திடுமுன் கையே
வண்டுலா மலர்கொய்ய வருந்திடுமுன் கையே
வருந்தினர்க்கு நவநிதியுஞ் சொரிந்திடுமுன் கையே
புண்டரிகம் பூத்தழகு பொலிந்திடுமுன் கையே
புழுகுநெய்ச் சொக்கர்புயந் தழுவிடுமுன் கையே
யண்டர்நா யகியெங்கண் மதுரைநா யகியை
யங்கயற்கண் ணாயகியைக் கும்பிடுமுன் கையே. (௨௮)

அம்மேநின் செங்கையைநின் கொங்கையில்வைத் ததுதா
னபிடேகச் சொக்கருனை யணைவதொன்ற குறிகா
ணிம்மேலைத் திகையினிற்கை யெடுத்ததுவு மவர்தா
மின்றந்திப் பொழுதினில்வந் தெய்துவதொன் றதுகாண்
கைம்மேற்கை கட்டியதுந் தப்பாம லுனக்குக்
கைகூடு நீநினைத்த காரியமென் றதுகாண்
செம்மேனி மணிவயிற்றிற் கைவைத்த தினிநீ
சிறுவர்பதி னறுவரையும் பெறுவையென்ற தம்மே. (௨௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கைத் தலத்துத் தனரேகை யளவில் செல்வந் தருமுனது
செங்கைத் துடிதென் மதுரேசர் செம்பொற் புயத்திற் சேர்க்குமா

விங்கிப் படிபுத் திரரோகை யெவர்க்கு மிலையிப் படிதோளிற்
றங்கு மறுவங் கயற்கணம்மை தன்னோ டிருக்கத் தருமம்மே. (௩0)

சிந்து.

பொன்பொதியுந் துகிலெனவெண் புயலொடுதெண் பனிமூடுந்
தென்பொதிய மலையாட்டி பேரைச்சொல்லாய் பாடநான். (௩க)

பலநதிகள் புணர்ந்தநதிப் பதியையணை யாதவைகைக்
குலநதித்தண் டுறைச்செல்வி பேரைச்சொல்லாய் பாடநான். (௩உ)

அன்பாண்டு கல்வலிதென் றவ்வைபா டியவெங்க
டென்பாண்டி நாட்டாடன் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௩)

பொன்மாடஞ் சூழ்ந்தகரும் புயலமலன் போர்வைநிகர்
பன்மாடக் கூடலாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩௪)

எண்டிசைக்கும் வேம்பாயெம் மிறையவர்க்குக் கரும்பாகும்
வண்டிசைக்குந் தாரினாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩ரு)

தினவட்ட மிடும்பரிதித் திண்பரிமண் பரியாக்குங்
கனவட்ட வாம்பரியாள் பேரைச்சொல்லாய் பாடநான் (௩௬)

திக்கயங்கள் புறங்கொடுப்பத் திசையெட்டுந் திறைகொண்ட
கைக்கயத்தை மேற்கொண்டாள் பேரைச்சொல்லாய் பாடநான். ௩எ

ஆனேற்றுங் கொடியானை யைங்கணையான் வென்றிடவம்
மீனேற்றின் கொடியுயர்த்தாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩அ)

இனியானை யிலையரசர்க் கென்றுதிசை யெட்டுமொரு
தனியானை செலுத்தினாள் பேரைச்சொல்லாய் பாடநான். (௩கூ)

கருமலையச் செருமலையுங் கைம்மலைய மன்னர்தொழ
வருமலையத் துவசனருண் மடக்கொடியைப் பாடுவனே. (௪0)

---

(௩௩) ஔவைபாடிய பாடல் "வஞ்சி வெளிய குருகெல்லாம் பஞ்சவன்ற, ஞன்மாடக் கூடலிற் கல்வலிது, சோழ னுறந்தைக் கரும்பினிது தொண்டைமான், கச்சியிற் காக்கை கரிது."

விண்புரக்குங் கதிர்மௌலி முடிகவித்து வெண்குடைக்கீழ்
மண்புரக்கு மபிடேக வல்லியைநான் பாடுவனே. (௮௧)

வெம்புருவச் சிலைகுனித்து விழிக்கணைக ளிரண்டெந்தை
மொய்ம்புருவத் தொடுத்தெய்த மொய்குழலைப் பாடுவனே. (௮௨)

ஊன்கொண்ட முடைத்தலையிற் பலிகொண்டார்க் குலகேழுந்
தான்கொண்ட வரசாட்சி தந்தாளைப் பாடுவனே. (௮௩)

வானவர்கோன் முடிசிதறி வடவரையிற் கயலெழுது
மீனவர்கோன் றனைப்பயந்த மெல்லியலைப் பாடுவனே. (௮௪)

கான்மணக்குஞ் சடைக்காட்டிற் கவின்மணக்குங் கடிக்கொன்றைத்
தேன்மணக்கும் பிறைநாறுஞ் சீறடியைப் பாடுவனே. (௮௫)

எவ்விடத்துந் தாமாகி யிருந்தவருக் கருந்தவரும்
வெவ்விடத்தை யமுதாக்கும் விளைக்கொடியைப் பாடுவனே. (௮௬)

வைத்தபகி ரண்டமெனு மணற்சிற்றில் விழைத்திழைத்தோர்
பித்தனுடன் விளையாடும் பெய்வளையைப் பாடுவனே. (௮௭)

இலைக்குறியுங் குணமுநமக் கொண்டார்க்கு வளைக்குறியு
முலைக்குறியு மணிந்திட்ட மொய்குழலைப் பாடுவனே. (௮௮)

ஒன்றாகி யனைத்துயிர்க்கு முயிராகி யெப்பொருளு
மன்றாகி யவையனைத்து மானாளைப் பாடுவனே. (௮௯)

பரசிருக்குந் தமிழ்க்கூடற் பழியஞ்சிச் சொக்கருட
னரசிருக்கு மங்கயற்கண் ணாரமுதைப் பாடுவனே. (௯௦)

கொச்சகக்கலிப்பா.

சீர்வாழி தென்மதுரை நின்மலனா ரருள்வாழி
கார்வாழி யங்கயற்கட் கன்னிதிரு வருள்வாழி
சீர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி
பேர்வாழி யவன்செல்வம் பெரிதூழி வாழியவே. (௯௧)

மீனாக்ஷியம்மைகுறம் முற்றிற்று.

கணபதிதுணை.

# மதுரைமீனாக்ஷியம்மை இரட்டைமணிமாலை.

நேரிசைவெண்பா.

**கா**ர்பூத்த கண்டத்தெங் கண்ணுதலார்க் கோரூழ்
பார்பூத்த பச்சைப் பசுங்கொம்பே—சீர்கொள்
கடம்பவனத் தாயேநின் கண்ணருள்பெற் றாரோ
யிடம்பவனத் தாயே யிரார். (௧)

கட்டளைக்கலித்துறை.

**இ**ராநின் றதுஞ்சொக்க ரொண்டோள் குழைய விருகுவட்டாற்
பொராநின் றதுஞ்சில் பூசலிட் டோடிப் புலவிநலந்
தராநின் றதுமம்மை யம்மண வாளர் தயவுக்குள்ளாய்
வராநின் றதுமென்று வாய்க்குமென் னெஞ்ச மணவறையே. (௨)

நேரிசைவெண்பா.

**ம**தம்பரவு முக்கண் மழகளிற்றைப் பெற்றுக்
கதம்பவனத் தேயிருந்த கள்வி—மதங்க
னடியார்க் குடம்பிருகூ றாக்கினாள் பார்க்கிற்
கொடியார்க் கிலைகொல் குணம். (௩)

கட்டளைக்கலித்துறை.

**கு**ணங்கொண்டு நின்னைக் குறையிரந் தாகங் குழையப்புல்லி
மணங்கொண் டுவரொரு வாமங்கொண் டாய்மது ரேசரவர்
பணங்கொண் டிருப்ப தறிந்துகொள் ளாயம்மை பைந்தொடியார்
கணங்கொண் டிறைஞ்சு நினக்குமுண் டாற்பொற் கனதனமே. (௪)

(௧) பவனம் - பூமி. (௩) மதங்கன் - பாணபத்திரர்.

நேரிசைவெண்பா.

கனமிருக்குங் கந்தரர்க்குன் சன்னிதா னந்தென்
றினமிரப்ப தோவொழியார் தேனே—பனவனுக்காப்
பாமாறி யார்க்குனைப்போற் பாரத் தனமிருந்தாற்
றாமாறி யாடுவரோ தான். (ரு)

கட்டளைக்கலித்துறை.

தானின் றுலகு தழையத் தழைந்த தமிழ்மதுரைக்
கானின்ற பூங்குழற் கர்ப்பூர வல்லி கருங்கட்செய்ய
மீனின் றுலாவி விளையா டுவதுவிண் ணுறலைய
வானின்ற தோர்வெள்ளி மன்றாடு மானந்த மாக்கடலே. (சா)

நேரிசைவெண்பா.

கடம்பவன வல்லிசெல்வக் கர்ப்பூர வல்லி
யடந்தை யபிடேக வல்லி—நெடுந்தகையை
யாட்டுவிப்பா ளாடலிவட் காடல்வே றில்லையெமைப்
பாட்டுவிப்ப துங்கேட் பதும். (எ)

கட்டளைக்கலித்துறை.

பதுமத் திருவல்லி கர்ப்பூர வல்லிநின் பாதபத்ம
மதுமத் தொடுந்தம் முடிவைத்த வாமது ரோசரவ
ரிதுமத்தப் பித்துமன் றேழைமை முன்ன ரிமையவர்கைப்
புதுமத் தினைப்பொற் சிலையென் றெடுத்த புராந்தகர்க்கே. (அ)

நேரிசைவெண்பா.

தகுமே கடம்பவனத் தாயேநின் சிற்றி
லகமேயென் னெஞ்சகம தாஞன்—மகிழ்நரொடும்
வாழாநின் றாயிம் மனையிருண்மூ டிக்கிடப்ப
தேழாய் விளக்கிட் டிரு. (கூ)

கட்டளைக்கலித்துறை.

இராக்கு நதிவைகை பொய்கைபொற் றாமரை யீர்ந்தண்டமிழ்
வராக்கு மலைதென் மலயம தேசொக்கர் வஞ்சநெஞ்சைக்

கனைக்குங் கனகள்வி கர்ப்பூர வல்லிக்குக் கற்பகத்தார்
நினைக்கும்பொற் கோயி றிருவால வாயுமென் னெஞ்சமுமே. (௧0)

நேரிசைவெண்பா.

நெஞ்சே திருக்கோயி னீலுண் டிருண்டகுழன்
மஞ்சேந் தபிடேக வல்லிக்கு—விஞ்சி
வருமந்த காவென் வழிவருதி யாலிக்
கருமந் தகாவுன் கருத்து. (௧௧)

கட்டளைக்கலித்துறை.

கருவால வாய்நொந் தறமெலிந் தேற்கிரு காண்மலனைத்
தருவால வாய்நின்ற தொன்றுத வாய்வன் றடக்கைக்குநேர்
பொருவால வாயெட்டுப் போர்க்களி றேந்துபொற்கோயில்கொண்ட
திருவால வாய்மருந் தேதென்னர் கோன்பெற்ற தெள்ளமுதே. (௧௨)

நேரிசைவெண்பா.

தென்மலையுங் கன்னித் திருநாடும் வெள்ளிமலைப்
பொன்மலைக்கே தந்த பொலங்கொம்பே—நின்மா
முலைக்குவடு பாய்சுவடு முன்காய மாலம்
மலைக்குவடு வன்றே மணம். (௧௩)

கட்டளைக்கலித்துறை.

மணியே யொருபச்சை மாணிக்க மேமருந் தேயென்றுன்னைப்
பணியேன் பணிந்தவர் பாலுஞ்செல் லேனவர் பாற்செலவுந்
துணியேன் றுணிந்ததை யென்னுனைக் கேன்மது னைத்திருநாட்
டணியே யனைத்துயிர்க் கும்மனை நீயென் றறிந்துகொண்டே. (௧௪)

நேரிசைவெண்பா.

கொண்டைச் செருக்குங் குறுநகையு நெட்டயிற்கட்
கெண்டைப் பிறக்கமும்வாய்க் கிஞ்சுகமுங்-கொண்டம்மை
கற்பூர வல்லி கருத்திற் புகப்புகுந்தா
னற்பூர வல்லியுமென் னை. (௧௫)

(௧௫) பூரவல்லி - கலைமகள்.

கட்டளைக்கலித்துறை.

நாவுண்டு நெஞ்சுண்டு நற்றமி ழுண்டு நயந்தசில
பாவுண் டினங்கள் பலவுமுண் டேயங்கிற் கொண்டிருந்தோர்
தேவுண் டுவக்குங் கடம்பா டவிப்பசுந் தேனின்மையந்தாட்
பூவுண்டு நாரொன் றிலையாந் தொடுத்துப் புனைவதற்கே. (௧௬)

நேரிசைவெண்பா.

புனைந்தாள் கடம்பவனப் பூவைசில பூவை
வனைந்தாளென் வாயும் மனமுந் — தினந்தினமும்
பொற்பதமே நாறுமவள் பூம்பதமன் றேநமது
சொற்பதமே நாறுஞ் சுவை. (௧௭)

கட்டளைக்கலித்துறை.

சுவையுண் டெனக்கொண்டு சூடியான்மற்றென் சொற்றமிழ்க்கோர்
நவையுண் டெனவற நாணுதி போலு நகைத்தெயின்மூன்
றவையுண் டவரோ டருட்கூடல் வைகுமம் மேசொற்பொருட்
கெவையுண்டு குற்ற மவையுண்டு நீவி ரிருவிர்க்குமே. (௧௮)

நேரிசைவெண்பா.

விண்டிருந்த பொற்கமல மீதிருந்த பொன்னிணையுங்
கொண்டிருந்து குற்றேவல் கொள்ளுமாற் — றெண்டாண்டர்
தேங்காவில் வீற்றிருப்பத் தென்மதுரைக் கேகடப்பம்
பூங்காவில் வீற்றிருந்த பொன். (௧௯)

கட்டளைக்கலித்துறை.

பொற்பூர வல்லிக் கமலத்த னேசொல் புகுந்தகமும்
வெற்பூர வல்லி பிறந்தக மும்மது மீட்டுமென்னே
யற்பூர வல்லியென் வன்னெஞ்சக் கஞ்சத்தெம் மையனொடிங்
கற்பூர வல்லி குடிபுகுந் தேகின்ற காரணமே. (௨௦)

(௧௭) சிலபூ என்றது அம்பிகையினவயவங்களை.

மீனாக்ஷியம்மையிரட்டைமணிமாலை

முற்றிற்று.

---

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# மதுரைக்கலம்பகம்.

## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

புந்தித் தடத்துப் புலக்களி றோடப் பிளிறுதொந்தித்
தந்திக்குத் தந்தை தமிழ்க்குத வென்பதென் றண்ணளிதூய்
வந்திப் பதுந்தனி வாழ்த்துவ தும்முடி தாழ்த்துநின்று
சிந்திப் பதுமன்றிச் சித்தி விநாயகன் சேவடியே.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

மணிகொண்ட திரையாழி சுரிநிமிர மருங்கசைஇப்
பணிகொண்ட முடிச்சென்னி யரங்காடும் பைந்தொடியும்
பூந்தொத்துக் கொத்தவிழ்ந்த புனத்துழாய் நீழல்வளர்
தேந்தத்து நறைக்கஞ்சத் தஞ்சாயற் றிருந்திழையு
மனைக்கிழவன் றிருமார்பு மணிக்குறங்கும் வறிதெய்தத்
தனக்குரிமைப் பணிபூண்டு முதற்கற்பின் றலைநிற்ப
வம்பொன்முடி முடிசூடு மபிடேக வல்லியொடுஞ்
செம்பொன்மதிற் றமிழ்க்கூடற் றிருநகரம் பொலிந்தோய்கேள்.

இது எட்டடித்தரவு.

விண்ணரசும் பிறவரசுஞ் சிலவொய்த விடுத்தொருநீ
பெண்ணரசு தரக்கொண்ட பேரரசு செலுத்தினையே. (௧)

தேம்பழுத்த கற்பகத்தி னறுந்தெரியல் சிலர்க்கமைத்து
வேம்பழுத்து நறைக்கண்ணி முடிச்சென்னி மிலைச்சினையே. (௨)

வானேறுஞ் சிலபுள்ளும் பலரங்கு வலனுயர்த்த
மீனேறே வானேறும் விடுத்தடிக ளெடுப்பதே. (௩)

மனவட்ட மிடுஞ்சுருதி வயப்பரிக்கு மாறன்றே
கனவட்டந் தினவட்ட மிடக்கண்டு களிப்பதே. (௪)

விண்ணூறு தலைமடுப்ப நனையாநீ விரைப்பொருநைத்
தண்ணூறு குடைந்துவைகைத் தண்டுறையும் படிந்தனையே. (௫)

பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே. (௬)

இவையாறும் ஈரடித்தாழிசை.

அவனவ ளதுவெனு மவைகளி லொருபொரு
ளிவனென வுணர்வொ டெழுதரு முருவினை. (௧)

இலதென வுளதென விலதுள தெனுமவை
யலதென வளவிட வரியதொ ரளவினை. (௨)

குறியில னலதொரு குணமில னெனநினை
யறிபவ ரறிவினு மறிவரு நெறியினை. (௩)

இருமையு முதவுவ தெவனவ னெனநின
தருமையை யுணர்வுறி னமிழ்தினு மினிமையை. (௪)

இவைநான்கும் ஈரடியராகம்.

வைகைக்கோ புனற்கங்கை வானதிக்கோ சொரிந்துகரை
செய்கைக்கென் றறியேமாற் றிருமுடிமண் சுமந்ததே. (௧)

அரும்பிட்டுப் பச்சிலையிட் டாட்செய்யு மன்னையவ
டரும்பிட்டுப் பிட்டுண்டாய் தலையன்பிற் கட்டுண்டே. (௨)

---

(௩) சில என்பது பெரும்பாலும் இரண்டையுணர்த்தும்.

முலைகொண்டு குழைத்திட்ட மொய்வளைகை வளையன்றே
மலைகொண்ட புயத்தென்னீ வளைகொண்டு சுமந்ததே. (௩)

ஊன்வலையி லகப்பட்டார்க் குட்படாய் நின்புயத்தோர்
மீன்வலைகொண் டதுமொருத்தி விழிவலையிற் பட்டன்றே. (௪)

இவைநான்கும் ஈரடித்தாழிசை.

போகமாய் விளைந்தோய் நீ, புவனமாய்ப் பொலிந்தோய் நீ,
யேகமா யிருந்தோய் நீ, யெண்ணிறந்து நின்றோய் நீ.

இவைநான்கும் முச்சீரோரடி யம்போதரங்கம்.

வானு நீ, நிலனு நீ, மதியு நீ, கதிரு நீ,
யூனு நீ, யுயிரு நீ, யுளது நீ, யிலது நீ.

இவையெட்டும் இருசீரோரடி யம்போதரங்கம்.

எனவாங்கு, இது தனிச்சொல்.

பொன்பூத் தலர்ந்த கொன்றையீர் பூப்பக்
கருஞ்சினை வேம்பு பொன்முடிச் சூடி
யண்ணலா னேறு மண்ணுண்டு கிடப்பக்
கண்போற் பிறழுங் கெண்டைவல னுயர்த்து
வரியுடற் கட்செவி பெருமூச் செறியப்
பொன்புனைந் தியன்ற பைம்பூண் டாங்கி
முடங்குளைக் குடுமி மடங்கலந் தவிசிற்
பசும்பொ னசும்பிருந்த பைம்பொன்முடி கவித்தாங்
கிருநிலங் குளிர்தூங் கொருகுடை நிழற்கீ
ழரசுவீற் றிருந்த வாதியங் கடவுணின்
பொன்மலர் பொதுளிய சின்மலர் பழிச்சுது
மைம்புல வழக்கி னருஞ்சுவை யறியாச்
செம்பொருட் செல்வநின் சீரடித் தொழும்புக்
கொண்பொருள் கிடையா தொழியினு மொழிக

கடு பிறிதொரு கடவுட்குப் பெரும்பயன் றரூஉ
மிறைமையுண் டாயினு மாக குறுகிநின்
சிற்றடி யவர்க்கே குற்றேவ றலைக்கொண்
டம்மா கிடைத்தவா வென்று
செம்மாப் புறூஉந் திறம்பெறற் பொருட்டே. (க)

இது பத்தொன்பதடி நேரிசையாசிரியச்சுரிதகம்.

நேரிசைவெண்பா.

பொருணன் கொருங்கீன்ற பொன்மாடக் கூட
விருணன் றிருண்டகண்டத் தெம்மான் - சரணன்றே
மண்டுழா யுண்டாற்குக் கண்மலரோ டொண்மவுலித்
தண்டுழாய் பூத்த தடம். (உ)

கட்டளைக்கலித்துறை.

தடமுண் டகங்கண் டகத்தாள தென்றுநின் றண்மலர்த்தா
ணடமுண் டகமகங் கொண்டெய்ந்த வாவினி நங்களுக்கோர்
திடமுண் டகந்தைக் கிடமுண் டிலையெனத் தேறவிண்ணோர்
விடமுண்ட கந்தர சுந்தர சுந்தர மீனவனே. (௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மீனேறுங் கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை வெள்ளைப் பள்ளை
யானேறும் வலனுயர்த்த வழகியசொக் கர்க்கிதுவு மழகி தேயோ
கானேறுங் குழல்சரியக் கர்ப்பூர வல்லிதலை கவிழ்ந்து நிற்ப
வூனேறு முடைத்தலையிற் கடைப்பலிகொண் டூரூர்புக் குழலு மாறே.

கட்டளைக்கலித்துறை.

மாற்றென் றிலையென் மருந்துக்கந் தோசொக்கர் மாலைகொடார்
கூற்றென் றலவொரு கோடிகெட் டேன்கொழுந் தொன்றுதென்றற்
காற்றென் றிளம்பிறைக் கீற்றென்று கார்க்கட லொன்றுகண்ணீ
ரூற்றென் றிவளுக் குயிரொன் றிலையுண் டெம்பொன்றுமே. (௫)

(உ) தடம் - குளம், மலைப்பக்கம்.

விருத்தக்கலித்துறை.

ஒன்றே யுடம்பங் கிரண்டே யிடும்பங் குடம்பொன்றிலா
றொன்றே யறிந்தும்பி னின்றே யிரங்கென் றிரக்கின்றவா
குன்றே யிரண்டன்றி வெண்பொன் பசும்பொன் குயின்றேசெய்
மன்றே யிருக்கப் புறங்கா டரங்காட வல்லாரையே. (சு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வலங்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு விற்பீர்போன் மதுரை மூதூர்க், குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல் லாங்கொள்ளை கொள்கின் றீராற், பலங்கொண்ட செட்டிமக்குப் பலித்ததுநன் றுனீரிப் பாவை மார்க்குப், பொலங்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ கொள்வதற்கோ புறப்பட் டீரோ. (எ)

நேரிசைவெண்பா.

பட்டிருக்கத் தோலசைஇப் பாண்டரங்கக் கூத்தாடு
மட்டிருக்கு நீப வனத்தானே - கட்ட
விரும்பரவத் தானேநின் மென்மலர்த்தா ளன்றே
தரும்பரவத் தானே தனை. (அ)

கட்டளைக்கலிப்பா.

தனியி ருப்பவ ரொன்படு வார்கெட்டேன்
சற்று நீதியொன் றற்றவிவ் வூரில்யா
மினியி ருப்பவொண் ணாது மடந்தைமீ
ரிடம ருங்குஞ் சடைமருங் கும்மிரு
கனியி ருக்குங் கடம்பவ னேசனார்
கண்பு குந்தென் கருத்து ளிருக்கவும்
பனியி ருக்கும் பிறைக்கூற்ற முற்றியென்
பாவி யாவியை வாய்மடுத் துண்பதே. (கூ)

நேரிசைவெண்பா.

உண்ணமுத நஞ்சாகி லொண்மதுரைச் சொக்கருக்கென்
பெண்ணமுது நஞ்சேயோ பேதைமீர் - தண்ணிதழி
யிந்தா நிலமே யெனச்சொலா ரென்செய்வாண்
மந்தா நிலமே வரின். (௯௦)

புயவகுப்பு. ஆசிரியச்சந்தவிருத்தம்.

முதலடி.

வரியளி பொதுளிய விதழியொ டமரர்
மடந்தையர் நீல வனம்புக் கிருந்தன
மதியக டுடைபட நெடுமுக டுடைய
நிமிர்ந்தபொன் மேரு வணங்கப் பொலிந்தன
மழகதிர் வெயில்விட வொளிவிடு சுடர்வல
யங்கொடு லோக மடங்கச் சுமந்தன
மதுகையொ டடுதிறன் முறைமுறை துதிசெய்
தணங்கவ ராடு துணங்கைக் கிணங்கின.

இரண்டாமடி.

பொருசம ரிடையெதிர் பிளிறுமொர் களிறு
பிளந்தொரு போர்வை புறஞ்சுற்றி நின்றன
புகையெழ வழலுமிழ் சுழல்விழி யுழுவை
வழங்குமொ ராடை மருங்குற் கணிந்தன
புலவெயி றயிறரு குருதியொ டுலவு
மடங்கலின் வீர மொடுங்கத் துரந்தன
புகலியர் குரிசில்பண் ணொடுதமி ழருமை
யறிந்தொரு தாளம் வழங்கப் புகுந்தன.

மூன்றாமடி.

வுருமிடி யெனவெடி படவெதிர் கறுவி
நடந்தொரு பாண னுறங்கத் திரிந்தன

வுருகிய மனமொடு தழுவியொர் கிழவி
கருந்துணி மேலிடு வெண்பிட் டுகந்தன
வுறுதியொ டவன்மனை புகும்வகை கடிது
சுமந்தொரு கூடைம ணுந்திச் சொரிந்தன
வுருவிய சுரிகையொ டெதிர்வரு செழியர்
பிரம்படி காண நடுங்கிக் குலைந்தன.

நான்காமடி.

திருசுவை யமுதெழ மதுரம தொழுகு
பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன
தளிரியன் மலைமகள் வரிவளை முழுகு
தழும்பழ காக வழுந்தக் குழைந்தன
தளர்நடை யிடுமிள மதலையின் மழலை
ததும்பிய வூற லசும்பக் கசிந்தன
தமிழ்மது ரையிலொரு குமரியை மருவு
சவுந்தர மாறர் தடம்பொற் புயங்களே. (கக)

கட்டளைக்கலித்துறை.

புயல்வண்ண மொய்குழல் பொன்வண்ணந் தன்வண்ணம் போர்த்தடங்கண், கயல்வண்ண மென்வண்ண மின்வண்ண மேயிடை கன்னற்செந்நெல், வயல்வண்ணப் பண்ணை மதுரைப் பிரான்வெற்பில் வஞ்சியன்று, ளியல்வண்ண மிவ்வண்ண மென்னெஞ்ச மற்றவ் விரும்பொழிலே. (கஉ)

அம்மானை. மடக்கு. கலித்தாழிசை.

இருவருக்குங் காண்பரிய வீசர்மது ரேசனார்
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனர்கா ணம்மானை
விருதுகட்டி யங்கம்வெட்டி வென்றனரே யாமாகி
லருமையுடம் பொன்றிருகூ றுவதே னம்மானை
யானுலுங் காயமிலை யையரவர்க் கம்மானை. (கஙு)

அறுசீர்க்கழிநெடில்டியாசிரியவிருத்தம்.

அம்ம கோவெனும் விழுமழு மெழுந்துநின் றருவிநீர் விழிசோ ரும், விம்மு மேங்குமெய் வெயர்த்துவெய் துயிர்க்குமென் மெல்லிய லிவட்கம்மா, வம்மின் மாதரீர் மதுரையுங் குமரியு மணந்தவர் மலர்த் தாமந், தம்மி ளேனுவெனுந் தவப்பயன் பெரிதெனுந் தந்தைதா ளெறிந் தார்க்கே. (கச)

மதங்கியார். எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எறிவே லிரண்டுமென துயிர்சோர வுண்டுலவ விகல்வா ளிரண்டு விசிறு, வெறிசேர் கடம்பவன மதுரேசர் முன்குலவி விளையாடு மின் கொ டியனீர், சிறுநூன் மருங்குலிறு மிறுமாகொ லென்றுசில சிலைநூபு ரஞ்சொன் முறையீ, டறியீரொன் னெஞ்சுமல மரவே சுழன்றிடுநும் மதிவேக நன்ற றவுமே. (கரு)

கட்டளைக்கலித்துறை.

அறந்தந்த பொன்பொலி கூடற் பிரான்வெற்பி லம்பொற்படா
நிறந்தந்த கும்ப மதயா னையுநெடுந் தேர்ப்பரப்பு
மறந்தந்த விற்படை வாட்படை யுங்கொண்டு மற்றொருநீ
புறந்தந்த வாவணங் கேநன்று காமவெம் போரினுக்கே. (கசு)

அறுசீர்க்கழிநெடில்டியாசிரியவிருத்தம்.

போரானை முதுகுறைப்பப் பொறையாற்றுஞ் சினகரத்துப் புழைக்கை நால்வாய்க், காரானைப் போர்வைதழீஇ வெள்ளானைக் கருள்சுரந்த கடவு ளேயோ, வோரானை முனைப்போருக் கொருகணை தொட் டெய்திடுநீ ரொருத்தி கொங்கை, யீரானை முனைப்போர்க்கும் வல்லீரோ லொருகணைதொட் டெய்தி டீரோ. (கஎ)

மேற்படிவிருத்தம்.

எய்யாது நின்றொருவ னெய்வதுவு மிளையாட னிளைப்பும் புந்தி
வையாதார் வைதலுநின் மதியார்தா மதித்திடுதல் வழக்கே யன்றோ

(கசு) நிறம் - மார்பு.

மெய்யாத பொய்கடிந்து வீடாத வீடெய்தி வீழார் வீழச்
செய்யாள்செய் சரக்கறையாந் திருவால வாயிலுறை செல்வ ஞரோ.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆறுதலை வைத்தமுடி நீணில வெறிப்பவெமை யாளுடைய பச்சை மயிலோ, டீறுமுத லற்றமது ராபுரியி லுற்றபர மேசரொரு சற்றுமுணரார், நீறுபடு துட்டமதன் வேறுரு வெடுத்தலரி னீள்சிலை குனித்துவழிதே, ஞூறுகணை தொட்டுவெளி யேசமர் விளைப்பதுமென் னூழ்வினை பலித்த துவுமே. (கக)

தழை. கட்டளைக்கலித்துறை.

பல்லா ருயிர்க்குயி ராமது ரேசரப் பாண்டியன்முன்
கல்லானைக் கிட்ட கரும்பன்று காணின் களபக்கொங்கை
வல்லானைக் கேயிட வாய்த்தது போலுமென் வாட்கணிஞய்
வில்லார் புயத்தண்ண றண்ணளி யாற்றந்த மென்றழையே. (உ0)

வஞ்சித்துறை.

தழைத்திடுங் கூடலார், குழைத்துடன் கூடலார்
பிழைத்திடுங் கூடலே, யிழைத்திடுங் கூடலே. (உக)

வஞ்சிவிருத்தம்.

கூட லம்பதி கோயில்கொண்
டாடல் கொண்டவ ராடலே
யூட லும்முடம் பொன்றிலே
கூட லும்மொரு கொம்பரோ. (உஉ)

ஊசல். கலித்தாழிசை.

கொம்மைக் குவடசையக் கூர்விழிவேல் போராடக்
கம்மக் கலனுஞ் சிலம்புங் கலந்தார்ப்ப

(கக) அலரினீள்சிலை - புட்பவில். (உக) கூடலிழைத்திடுங்கூடல் - கடற்கரையிலிழைக்கும் கூடற்சுழி. (உங) கம்-கம்மியரதுதொழில்.

மும்மைத் தமிழ்மதுரை முக்கணப்பன் சீர்பாடி
யம்மென் மருங்கொசிய வாடுக பொன்னூச
லழகெறிக்கும் பூண்முலையீ ராடுக பொன்னூசல். (உரு)

களி. தாழிசை.

அழகுற்றதோர் மதுரேசனை யமரேச னெனக்கொண்
டாடுங்களி யானின்றிசை பாடுங்களி யேம்யாம்
பொழுதைக்கிரு கலமூறுபைந் தேறற்பனை யினைநாம்
போற்றிக்குரு மூர்த்திக்கிணை சாற்றத்தகு மப்பா
பழுதற்றதோர் சான்றுண்மை பயின்றூர்தின முயன்றூற்
பலமுண்டதி னலமுண்டவ ரறிவார்பல கலைநூ
லெழுதப்படு மேடுண்டது வீடுந்தர வற்றூ
லெழுதாததோர் திருமந்திர மிளம்பாளையு ளுண்டே. (உசு)

கலிவிருத்தம்.

உண்பது நஞ்சமா லுறக்க மில்லையால்
வண்பதி கூடலே வாய்த்த தென்னுமாற்
பெண்பத நின்னதே பெரும வேள்கணை
யெண்பது கோடிமே லெவன் றெடுப்பதே. (உஎ)

மடக்கு. கட்டளைக்கலிப்பா.

தொடுத்த ணிந்தது மம்புத ரங்கமே
சுமந்தி ருந்தது மம்புத ரங்கமே
யெடுத்து நின்றது மாயவ ராகமே
யெயிறி றுத்தது மாயவ ராகமே
யடுப்ப தந்தணர் பன்னக ராசியே
யணிவ துஞ்சில பன்னக ராசியே
கொடுப்ப தையர் கடம்பவ னத்தையே
கொள்வ தையர் கடம்பவ னத்தையே. (உஅ)

நேரிசைவெண்பா.

கடங்கரைக்கும் வெற்பிற் கரைகரைக்கும் வைகைத்
தடங்கரைக்க ணின்றவர்நீர் தாமோ - நெடுந்தகைநுங்
கூட்டம் புயமே கொடாவிடில்வேள் கூன்சிலையி
னூட்டம் புயமே நமன். (உஎ)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நம்பா நினக்கோல் முறையோ வெனக்கால் நஞ்சுண்டு பித்துண்டு நாந்தேவ ரென்பார், தம்பாவை யர்க்கன்று காதோலை பாவித்த தயவாளர் கூடற் றடங்காவில் வண்டீர், செம்பாதி மெய்யுங் கரும்பாதி யாகத் திருத்தோளு மார்பும் வடுப்பட்ட துங்கண், டெம்பாவை யைப் பின்னு மம்பாவை செய்வா ரெளியாரை நலியிற்பி னேதா மிவர்க்கே.

கொச்சகக்கலிப்பா.

ஆவமே நாணே யடிகணையே யம்மதவேள்
சாவமே தூக்கிற் சமனுஞ் சமனன்றே
யோவமே யன்ன வுயிர்விற்றுப் பெண்பழிகொள்
பாவமே பாவம் பழியஞ்சுஞ் சொக்கருக்கே. (உக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கரைபொரு திரங்கு கழிதொறு மிருந்து கயல்வா வுறங்கு புள்ளீரோ, பருவமு மிழந்தென் மகடுய ருழந்து படுவிர கமொன்று முள்ளீரோ, யருமையொடு மெங்கள் பெருமையை யறிந்தே யருள்புரிய விங்கு வல்லீரோ, மருவிய கடம்ப வனமது புகுந்தென் மதுரையரன் முன்பு சொல்லீரோ. (௩0)

கொச்சகக்கலிப்பா.

ஈரித்த தென்ற லிளவாடை திங்களென்றோர்
பேரிட்ட மும்மைப் பிணியோ தணியாவாற்
பாருக்கு ணீரோ பழியஞ்சி யாரெனின்மற்
றூருக் குரைக்கே மடிகே ளடிகேளோ. (௩க)

பிச்சியார். கட்டளைக்கலிப்பா.

அடுத்த தோர்தவ வேடமும் புண்டர
மணிந்த முண்டமு மாய்வெள்ளி யம்பலத்
தெடுத்த தாள்பதித் தாடிக் கடைப்பிச்சைக்
கிச்சை பேசுமப் பிச்சனெ னச்செல்வீர்
கடைக்க ணோக்கமும் புன்மூர லும்முயிர்
கவர்ந்து கொள்ள விடுத்த கபாலிபோற்
பிடித்த சூலமுங் கைவிட்டி லீரொன்றே
பிச்சி யாரொனும் பேருமக் கிட்டதே. (௬௨)

கட்டளைக்கலித்துறை.

இடங்கொண்ட மானும் வலங்கொண்ட வொண்மழு வும்மெழுதும்
படங்கொண்டு வந்தனை யானெஞ்ச மேயினிப் பங்கயப்பூந்
தடங்கொண்ட கூடற் சவுந்தர மாறர்பொற் றாள்பெயர்த்து
நடங்கொண்ட தோர்வெள்ளி மன்றே றுதுமின்று நாளையிலே. (௬௩)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருநில னகழ்ந்ததொரு களிறுவெளி றும்படியொ ரிருளியி னையணைந்த னையுமக், குருளையை மணந்தருளி னிளமுலை சுரந்துதவு குழகரி துணர்ந்திலர் கொலாங், கருகியது கங்குலற வெளிறியது கொங்கைசில் கணைமதன் வழங்க வவைபோ, யுருவிய பசும்புணின்வெண் ணிலவனல் கொளுந்தியதெம் முயிர்சிறி திருந்த தரிதே. (௬௪)

கொற்றியார். எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருநாம மரசிவசங் கரநாம மெனக்கொண்
டவற்றொருநா மம்பகர்ந்தோர்க் கரியயனிந் திரனும்
பெருநாமங் கொடுத்தவர்தங் கருநாமந் துடைக்கும்
பெற்றியார் தமிழ்மதுரைக் கொற்றியார் கேளீ
ரொருநாமம் பயந்தவர்முன் றருநாமம் வியந்திவ்
வுலகறிய நாமமதொன் றுள்ளநீர் வெள்ளைத்

திருநாம மிட்டவன்றே கெட்டவன்றே வினையோர்த்
தெரித்திடுநா மழுமுனிவோர் தரித்திடுநா மழுமே. (௬௫)

நேரிசைவெண்பா.

மும்மைத் தமிழ்க்கூடன் மூலலிங்கத் தங்கயற்க
ணம்மைக் கழுதா மருமருந்தை - வெம்மைவினைக்
கள்ளத் திருக்கோயிற் காணலாங் கண்டீர்நம்
முள்ளத் திருக்கோயி லுள். (௬௬)

கட்டளைக்கலித்துறை.

உள்ளும் புறம்புங் கசிந்தூற் றெழுநெக் குடைந்துகுதி
கொள்ளுஞ்செந் தேறல் குனிக்கின்ற வாபத்திக் கொத்தரும்ப
வின்னுங் கமலத்தும் வேத சிரத்தும்விண் மீனெழுகந்
தள்ளுங் கொடிமதிற் பொற்கூடல் வெள்ளி யரங்கத்துமே. (௬எ)

மடக்கு. கட்டளைக்கலிப்பா.

அரங்கு மையற்கு வெள்ளிய ரங்கமே
யால யம்பிற வெள்ளிய ரங்கமே
யுரங்கொள் பல்கல னென்பர வாமையே
யுணர்வு மூமையு மென்பர வாமையே
விரும்பு பாடலு மாகவி மானமே
மேவு மானமு மாகவி மானமே
திருந்து தானந் தடமதிற் கூடலே
செயற்கை வெள்ளித் தடமதிற் கூடலே. (௬அ)

விருத்தக்கலித்துறை.

கூடார் புரந்தீ மடுக்கின்ற துஞ்சென்று கும்பிட்டதோ
ரேடார் குழற்கோதை யுயிருண்ப தும்மைய ரிளமூரலே
வாடாத செங்கோல் வளர்ப்பீ ரெணக்கன்னி வளநாடெனு
நாடாள வைத்தாளு நகையா இனிப்போடு நகையாடவே. (௬௯)

கொச்சகக்கலிப்பா.

நகையே யமையுமிந்த நாகரிக நோக்கு
மிகையே யனங்கன் வினைகொளல்வீ ணன்றே
தகைசேர் மதுரேசன் றண்டமிழ்நா டன்னீர்
பகையே துமக்கு நமக்கும் பகர்வீரோ. (சுo)

கலிவிருத்தம்.

வீரம் வைத்தவில் வேள்கணை மெய்த்தன
பாரம் வைத்த பசும்புண் பசும்புணே
யீரம் வைத்த விளமதி வெண்ணிலாக்
காரம் வைத்த கடம்ப வனேசனே. (சுக)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கடங்கால் பொருப்பொன் றிடும்போர்வை சுற்றுங் கடம்பா டவிச்சுந் தரரோநுங், நடங்தோள் குறித்திங் கணைந்தே மெனிற்பின் றரும்பேறுன் மத்தின் பெருவாழ்வோ, தொடர்ந்தே யுடற்றிந் திரன்சாப முற்றுந் துரந்தாலு மிப்பெண் பழிபோமோ, வடைந்தேம் விடக்கொன்றை யந்தா ரெவர்க்கென் றமைந்தே கிடக்கின் றதுதானே. (சுஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தான வெங்களி றோடு மிந்திரன் சாப முந்தொலையா
மேனி தந்தகல் யாண சுந்தரர் மேவு வண்பதியாம்
வானி மிர்ந்திட வாடு மொண்கொடி வால சந்திரனுங்
கூனி மிர்ந்திட வேதி மிர்ந்திடு கூட லம்பதியே. (சுங)

கைக்கிளை மருட்பா.

அஞ்சேன் மடநெஞ் சபிடேகச் சொக்கரருட்
செஞ்சே வடிக்கடிமை செய்யார்போற் - றுஞ்சா
தெறிதிரைக் கருங்கட லேய்க்கு
மறலியற் கூற்றுற் காடமர்க் கண்ணே. (சுச)

---

(சுங) இமிர்தல் - ஒலித்தல்.

கட்டளைக்கலித்துறை.

கண்முத் தரும்பின கொங்கைபொன் பூத்த கனிபவளத்
தொண்முத் தரும்புமென் பெண்முத்துக் கேமுத்த முண்டிமயத்
தண்முத் தமைந்த தபனிய மேதலைச் சங்கம்பொங்கும்
பண்முத் தமிழ்க்கொர் பயனே சவுந்தர பாண்டியனே. (சரு)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாணரு மழலைச் சீறியாழ் மதுரப் பாடற்குத் தோடுவார் காதும், பனிமதிக் கொழுந்துக் கவிர்சடைப் பொதும்பும் பாலித்தாய் பாட் டளி குழைக்குங்,—கோணரு வுளைப்பூங் கொத்தலர் குடுமிக் குறுங்க ணெட் டிலைச்சிலை குனித்த, கூற்றுயிர் குடித்தாய்க் காற்றலா மல தென் கொடியிடைக் காற்றுமா றுளதோ, — சேணருப் பசும்பொற் றசும்பசும் பிருக்குஞ் சிகரியிற் றகரநா றைம்பாற், சேயரிக் கருங்கட் பசுங்கொடி நுடங்குஞ் செவ்வியிற் சிறைமயி ல்கவத், — தூணரு முழவுத் தொண்மடித் தும்பர் சுவல்பிடித் தணைந்துபார்த் துணங்குந், தோரண மாடக் கூடலிற் சோம சுந்தரா சந்த்ரசே கரனே. (சசு)

நேரிசையாசிரியப்பா.

கரும்பொறிச் சுரும்பர் செவ்வழி பாடச்
சேயிதழ் விரிக்கும் பொற்பொகுட் டம்புயம்
பாண்மகற் கலர்பொற் பல்கை நீட்டுங்
கடவுள்செங் கைக்குப் படியெடுப் பேய்க்குந்
தடமலர்ப் பொய்கைத் தண்டமிழ்க் கூட
லொண்ணுத றழீஇய கண்ணுதற் கடவு
ளெண்மர் புறந்தரூஉ மொண்பெருந் திகைக்குத்
தூய்மைசெய் தோங்குப் பானிலா விரிந்த
விரசதங் குயின்ற திருமா மன்றகம்

---

(சஎ) ச. படி - ஒப்பு.

பொன்மலை கிடப்ப வெள்ளிவெற் புகந்தாய்க்குச்
செம்பொன் மன்றினுஞ் சிறந்தன் றுயினுங்
கருந்தாது குயின்றவென் கன்னெஞ் சகத்தும்
வருந்தியும் வழங்கல் வேண்டு
மிருவே றமைந்தநின் னொருபெருங் கூத்தே. (௪௭)

நேரிசைவெண்பா.

தேத்தந்த கொன்றையான் றெய்வத் தமிழ்க்கூடன்
மாத்தந்த வேழ மதமடங்க - மீத்தந்த
மாகவி மானம் வணங்கினமாற் கூற்றெமைவிட்
டேகவி மானமுனக் கேன். (௪௮)

கட்டளைக்கலித்துறை.

ஏனின் றிரங்குதி யேழைநெஞ் சேவண் டிமிர்கடப்பங்
கானின் றதுமற்றோர் கற்பக மேயந்தக் கற்பகத்தின்
பானின்ற பச்சைப் பசுங்கொடி யேமுற்றும் பாலிக்குமாற்
றேனின்ற வைந்தருச் சிந்தா மணியொடத் தேனுவுமே. (௪௯)

தாழிசை.

தேனுறுத சிலைக்கரும்பு கொலைக்கரும்பொரு வேம்பெனுந்
தேம்புயத்தணி வேம்பிணைக்கனி தீங்கரும்பெனு மிவ்வண
மானுறுத மழைக்கணங்கையு மாறியாடத் தொடங்குமான்
மாறியாடுநின் வல்லபந்தொழ வந்தபேர்க்கும் வருங்கொலோ
கானுறுத சுருப்புநாண்கொள் கருப்புவில்லியைக் காய்ந்தநாட்
கைப்பதாகைகவர்ந்துகொண்டதொர்காட்சியென்னவெடுப்பதோர்
மீனுறுத வடற்பதாகை விடைப்பதாகை யுடன்கொளும்
வீரசுந்தர மாறமாறடும் வெள்ளியம்பல வாணனே. (௫௦)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வாணிலாப் பரப்பு மகுடகோ டீர மறிபுனற் கங்கைநங் கைக்கும்,
வையமீன் றளித்த மரகதக் கொடிக்குன் வாமபா கமும்வழங் கினையா

ற், — பூணுலாங் களபப் புணர்முலை யிவட்குன் பொற்புயம் வழங்கலை யெமர்போற், பொதுவினின் ருய்க்கு நடுவின்மை யிடையே புகுந்தவா றென்கொலோ புகலாய்,— தாணுலாம் பசும்பொற் றோரண முகப்பிற் சூளிகை நெற்றியின் றிறங்குஞ், சுரிமுகக் குடக்கூன் வலம்புரிச் சங்கந் தோன்றலு மூன்றுநா ணிரம்பா, — நீணிலா வெனக்கொண் டணங்கனார் வளைக்கை நெட்டிதழ்க் கமலங்கண் முகிழ்க்கு,நீடுநான் மாடக் கூடலிற் பொலியு நிமலனே மதுரைநா யகனே. (ருக)

கட்டளைக்கலிப்பா.

மதும லர்க்குழ லாய்பிச்சை யென்றுநம்
 மனைதொ றுந்திரி வார்பிச்சை யிட்டபோ
திலொர் பிச்சையுங் கொள்ளார்கொள் கின்றதிங்
 கறிவு நாணுநம் மாவியு மேகொலாம்
பதும நாறும் பலிக்கலத் தூற்றிய
 பச்சி ரத்தம் பழஞ்சோ றெனிற்பினைப்
புதிய தூங்நம் முயிர்ப்பலி யேயன்றோ
 பூவை பால்கொள் புழுகுநெய்ச் சொக்கர்க்கே. (ருஉ)

கிள்ளைவிடுதூது. கட்டளைக்கலித்துறை.

புழுகுநெய்ச் சொக்க ரபிடேகச் சொக்கர்கர்ப் பூரச்சொக்க
ரழகிய சொக்கர் கடம்ப வனச்சொக்க ரங்கயற்கண்
டழுவிய சங்கத் தமிழ்ச்சொக்க ரென்றென்று சந்ததநீ
பழகிய சொற்குப் பயன்றேர்ந்து வாவிங்கென் பைங்கிளியே. (ருங)

நேரிசைவெண்பா.

பைந்தமிழ்தேர் கூடற் பழியஞ்சி யார்க்கவமே
வந்ததொரு பெண்பழியென் வாழ்த்துகே - னந்தோ
வடியிடுமுன் னையர்க் கடுத்தவா கெட்டேன்
கொடியிடமாப் போந்த குறை. (ருச)

காலம். மடக்கு. தாழிசை.

குறுமுகைவெண் டளவளவின் மணந்துவக்குங் காலங்
கொழுநரொடு மிளமகளிர் மணந்துவக்குங் கால
மறுகுதொறு நின்றெமர்க ளுருத்திகழுங் காலம்
வரிசிலைகொண் டுருவிலியு முருத்திகழுங் காலஞ்
சிறுமதிநம் பெருமதியி னுகப்படருங் காலந்
தென்றலிளங் கன்றுமுயி ருகப்படருங் கால
நிறையினொடு நாணினொடு மகன்றிரியுங் கால
நேசர்மது ரேசர்வரை யகன்றிரியுங் காலம். (ருரு)

நேரிசைவெண்பா.

அம்மானம் மேலன்று பட்ட தருட்கூடற்
பெம்மான்மேற் பட்ட பிரம்படியே - யிம்முறையு
மிம்மேனி காமநோய்க் கீடழிந்த வாவடிகள்
செம்மேனிக் குண்டாங்கொ றீங்கு. (ருசு)

சித்து. கட்டளைக்கலிப்பா.

குரும்பை வெம்முலை சேர்மது ரேசர்பொற்
கோபு ரத்திற் கொடிகட்டு சித்தர்யாங்
கரும்பை முன்புகல் லானைக் கிடுஞ்சித்தர்
கையிற் செங்கல் பசும்பொன்ன தாக்கினே
மிருந்த வீடும் வறும்பாழ தாமவர்க்
கெருத்துக் கொட்டிலும் பொன்மேய்ந் திடச்செய்தே
மருந்த னங்கமக் கோதன மேயப்பா
வாட கத்துமற் றுசையவ் வையர்க்கே. (ருஎ)

மடக்கு. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஐய மணிக்கல் மென்பணியே யன்பணி யக்கொள்வ தென்ப ணியே, மெய்யணி சாந்தமும் வெண்பலியே வேண்டுவ துங்கொள வெண்பலியே, யெய்ய வெடுப்பதொர் செம்மலையே யேந்தி யெடுப்ப

தோர் செம்மலையே, வையகம் வாய்த்த வளம்பதியே வாழ்வது கூடல் வளம்பதியே. (௫அ)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏடார் புண்டரிகத் திளமான் முதுபாட லெழுதா மறையோடு மிசைமுத் தமிழ்பாடப், பீடார் கூடல்வளம் பாடா வாடல்செயும் பெருமான் முன்சென்றாள் சிறுமா னென்சொல்கேன், பாடா ளம்மனையு நாடா ளெம்மனையும் பயிலா டண்டலையு முயலாள் வண்டலையு, மாடாண் மஞ்சனமுந் தேடா ளஞ்சனமு மயிலா ளன்னமுமே துயிலா ளின்னமுமே. (௫௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னியந் துவைப்பச் சங்க மேங்கிடச் செழிய ரீன்ற
கன்னியை மணந்தே யன்றே கன்னிநா டெய்தப் பெற்றார்
மின்னிவண் முயக்கும் பெற்றால் வெறுக்கைமற் றிதன்மே லுண்டோ
கொன்னியல் குமரி மாடக் கூடலம் பதியு ளார்க்கே. (௬0)

விருத்தக்கலித்துறை.

கேளார் புரஞ்செற்ற வின்னாரி தோயக் கிளர்ந்துற்றதோர்
தோளாளர் கூடற் பதிக்கேகு முகில்காள் சொலக்கேண்மினோ
வாளாவொர் மின்னுங்கண் மழைசிந்த வென்சொன் மறுத்தேகன்மின்
றாளாண்மை யன்றே தளைப்பட்ட வூரிற் றனித்தேகலே. (௬௧)

இடைச்சியார். அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கண்டமுங் காமர் மெய்யுங் கறுத்தவர் வெளுத்த நீற்ற
ரொண்டரு மதுரை யிற்சிற் றிடைச்சிநே ரிடைச்சி யென்பீர்
தொண்டைவா யமுதிட் டென்றன் பாலிங்குத் தோயீர் வாளா
மண்டுமென் னகத்தி லென்னீர் மத்திட்டு மதிக்கின் றீரோ. (௬௨)

கட்டளைக்கலித்துறை.

ஈர மதிக்கு மிளந்தென் றலுக்குமின் றெய்யுமதன்
கோர மதிக்குங் கொடுங்கோலு மேகொடுங் கோன்மைமுற்றுந்

நீர மதிக்குஞ்செங் கோன்மையென் ஞஞ்சில தேவர்மதி
சோர மதிக்குங் கடற்றீ விடங்கொண்ட சொக்கருக்கே. (கூரு)

வஞ்சிவிருத்தம்.

கரிய கண்டங் கரந்தவோர்
திருபர் கூடலி னெஞ்சிரோ
யுருவ மும்பெண் ணுருக்கொலா
மருவ மென்ப தவாவினே. (கூசா)

விருத்தக்கலித்துறை.

ஆவா வென்னே தென்னவர் கோற்கன் றணிசாந்த
ணீவா நின்றாய் நின்றில காமா னலமென்னே
கோவாம் வில்லி கொடுந்தனு வுங்கூ னிமிராதான்
மூவா முதலார் மதுரையி தன்றோ மொழிவாயே. (கூரு)

வலைச்சியார். அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மொழிக்கய லாகி வேத முடிவினின் முடிந்து நின்ற
வழிக்கய லாகார் கூடல் வலைவாணர் பெருவாழ் வன்னீர்
கழிக்கயல் விற்பீர் மற்றிக் காசினி யேழு முங்கள்
விழிக்கய லுக்கே முற்றும் விலையென்ப விளக்கிட் டீரோ. (கூகா)

நேரிசைவெண்பா.

விற்கரும்பே யொன்றிதுகேண் மென்கரும்பே யன்னார்தஞ்
சொற்கரும்பே முற்றுமலர் தூற்றுமா - னற்கரும்பை
யாளார் கடம்பவனத் தையருமற் றென்னியும்
வாளா வலர்தூற்று வாய். (கூஎ)

கட்டளைக்கலிப்பா.

வாலவிர்த்த குமார னெனச்சில
வடிவு கொண்டுநின் றாயென்று வம்பிலே
ஞால நின்னை வியக்கு நயக்குமென்
னடனங் கண்டும் வியவாமை யென்சொல்கேன்
*

பால லோசன பாநுவி லோசன
பரம லோசன பக்த சகாயமா
கால காலத்ரி சூல கபாலவே
கம்ப சாம்ப கடம்ப வனேசனே. (சுஅ)

கலிவிருத்தம்.

கட்டு வார்குழ லீர்கயற் கண்ணிறைட்
கிட்ட மாஞ்சொக்க னைக்கனை யேற்றினீர்
மட்டில் காம மடுப்படிந் தேற்கென்னே
கொட்டு வீர்பின்னுங் குங்குமச் சேற்றையே. (சுக)

நேரிசைவெண்பா.

குங்குமச்சே றுடுங் கொடிமாட வீதியில்வெண்
சங்குமொய்க்குஞ் சங்கத் தமிழ்க்கூட - லங்கயற்க
ணம்மையிடங் கொண்டாரை யஞ்சலித்தே மஞ்சல்மற்
றிம்மையிடங் கொண்டார்க் கினி. (எ0)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்னீ ரமுதுக் கிடமுங் கடுவுக் கெழிலார் களனுங் களறு வருளா, நன்னீ ரமுதக் கடலா கியுளார் நரியைப் பரியாக் கிநடத் தினரா, லன்னீர் மையின்மிக் கென்னீர் மையெறு வடன்மா மடன்மா வரமா றுசெயா, மைந்நீ ரளகத் திளமா னையனீர் வருவேன் மதுரைத் திருவீ தியிலே. (எக)

எழுசீர்க்கழிநெடிலடிவண்ணவிருத்தம்.

திருவைப் புணர்பொற் புயமைப் புயல்கைத் திகிரிப் படையுய்த் தவர்கூடற், றருமொய்த் தருமைச் சிறைபெற் றனமுத் தமிழ்வெற் பமர்பொற் கொடிபோல்வீர், புருவச் சிலையிற் குழைபட் டுருவப் பொருகட் கணைதொட் டமராடுஞ், செருவிற் றொலைவற் றவரைக் கொலுநற் சிலைசித் தசர்கைச் சிலைதானே. (எஉ)

---

(எ0) மையிடம் என்பது பாடம்.

கட்டளைக்கலித்துறை.

சிலைசிலை யாக்கொண்ட தென்மது ரேசர் சிலம்பில்வில்வேண்
மலைசிலை யாக்கொண்ட வாணுத லாய்நின் மருங்குல்சுற்று
மிலைசிலை யாக்கொண் டிளமானை யெய்திடு மிங்கிவர்பூங்
குலைசிலை யாக்கொண் டவர்போலு மாற்செம்மல் கொள்கைநன்றே. ()

பாண். அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொங்குரை யாற்றி விட்டுக் குளத்தினிற் றேட நீடு
மங்குறோய் மூதூருன் றையர் மதுரையோ மதியில் பாணு
வெங்கையர் மனைக்கண் வைத்தாங் கெம்மிடைத் தேர்தி மற்றம்
மங்கையர் மனம்போ லன்றே மகிழ்நர்தம் வாழ்க்கை தானே. (எச)

நேரிசைவெண்பா.

வாழிமடக் கிள்ளாய் மதுரா புரிவாழு
மூழி முதல்வர்க் குருவழிந்தே - யாழியான்
சேய்தொடுத்த வம்போ திரண்முலையுங் கண்மலருந்
தாய்தொடுத்த வம்போ தலை. (எரு)

மறம். எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமுகத்து நிமிர்குடுமி மாடக் கூடற் சவுந்தரபாண் டியர்குடியா ஞ் சமரி லாற்று, தொருமுகத்தி லொருகோடி மன்னர்மடிந் தொழிந் தா ருனைவிடுத்த மன்னவர்யா ருரையாய் தூதா, மருமுகத்த நெறிக்கு ழலெம் மடக்கொடியை வேட்பான் மணம்பேசி வரவிடுத்த வார்த்தை சொன்னாய், திருமுகத்தி லெழுத்திதுவேற் றிருமுடியி லெழுத்துந் தேர்ந்தறியக் கொண்டுவா சிகையினோடுஞ் சென்றே. (எசு)

---

(எங) பூங்குலைசிலையாக்கொண்டவர் - பூங்கொத்தாகக் கல்லையெறிந்த சாக்கியநாயனார். (எச) கொங்குரை - கொங்கம்பொன். இது, முற் காலத்துவழங்கிய மாற்றுயர்ந்த பொன்.

(எரு) வம்போதலை - வம்பு + ஓதலை.

குறம். அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செல்விட்ட பொழின்மதுரைத் தேவர்மணந் தடாதகா தேவிக் கன்று, சொல்விட்ட குறமகள்யான் றும்மலுநல் வரத்தேகாண் சுளகி லம்மை, நெல்விட்ட குறிக்குநீ நினைந்ததொரு பொருளதுநித் திலக்கச் சார்க்கும், வல்விட்ட குறியினொடும் வளையிட்ட குறியுளதோர் வடிவு தானே. (௭௭)

விருத்தக்கலித்துறை.

ஒடகலை யல்பல கலையொடு தமிழ்வள ருங்கூடல்
விடவர வரையினர் திருமுனி தொருவர் விளம்பாரோ
குடதிசை புகையெழ வழலுமிழ் நிலவு கொழுந்தோடப்
படவர வெனவெரு வருமொரு தமியள் படும்பாடே. (௭௮)

கட்டளைக்கலித்துறை.

பாட்டுக் குருகுந் தமிழ்ச்சொக்க நாதர் பணைப்புயமே
வேட்டுக் குருகுமெய் நாணும்விட் டாள்வண்டு மென்கிளியும்
பேட்டுக் குருகும்விட் டாளென்செய் வாளனல் பெய்யுமிரு
கோட்டுக் குருகு மதிக்கொழுந் துக்கென் குலக்கொழுந்தே. (௭௯)

மேகவிடுதூது. எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏமவெற் பென்றுகயி லாயவெற் பென்றுமல யாசலத் தென்று முறைவார், கோமகட் கன்பர்மது ரேசர்முச் சங்கம்வளர் கூடலிற் சென்று புகலீர், தாமரைக் கண்டுயிலு மாலெனச் சந்தமலி சாரலிற் றுஞ்சு முகில்காண், மாமதிப் பிஞ்சுமிளை தேர்குயிற் குஞ்சுமுயிர் வாய் மடுத் துண்டொ ழிவதே. (௮0)

சம்பிரதம். மேற்படிவேறு.

மட்டறு கடற்புவி யனைத்துமொ ரிமைப்பினின் மறைத்துடன் விடுத்தி டுவன்மற், றெட்டுவரை யைக்கடலை முட்டியு ளடக்கிடுவ

---

(௭௯) குருகு - வெண்மை, இளமை.
(அக) முட்டி - கைப்பிடி, சிறுகலயம்.

னித்தனையும் வித்தை யலவாற், றுட்டமத னைப்பொடி படுத்திமது ரைக்குளுறை சொக்கர்குண மெட்டி னுடுமெச், சிட்டர்க டுதித்திடு மகத்துவ மனைத்துமொரு செப்பினு ளடக்கி டுவனே. (அக)

நேரிசைவெண்பா.

அடுத்த பதஞ்சலியா ரஞ்சலியா நிற்ப
வெடுத்த பதஞ்சலியா ரோனுந் - தடுத்தவற்கா
மாறிக் குனித்தார் மலைகுனித்தென் மாமதனார்
சீறிக் குனித்தார் சிலை. (அஉ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிலையோ கரும்புபொரு கணையோ வரும்புசிவ சிவவாவி யொன்று முளதோ, விலையோ வறிந்திலமிம் மதனுண்மை யென்புகல்வ திதுவே தவம்பி றிதெனு, முலையே யணிந்தமுகிழ் நகையீரொர் பெண்கொடியின் முலையோடு முன்கை வளையான், மலையே குழைந்திடுதம் மிரு தோள் குழைந்துறைநம் மதுரேசர் தந்த வரமே. (அங)

உருவெளி. கட்டளைக்கலித்துறை.

வரும்புண்ட ரீக மிரண்டாலொர் கல்லுமென் வன்னெஞ்சமா
மிரும்புங் குழைத்த மதுரைப் பிரான்வெற்பி லேழ்பரியோன்
விரும்புந் தடமணித் தேர்வல வாவெஞ் சுரமிதன்றே
கரும்புங் கனியு மிளநீரும் பாலொங்குங் கண்களினே. (அச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கருவிட்ட காடெறிந்து கடம்புவனத் திருப்பீருங் கடுக்கைக் காட்டின், மருவிட்ட கொள்ளைவெள்ள மடுப்படிந்து மூண்டெழுமான் மதித்தீ கெட்டேன், செருவிட்ட விழிமடவார் வாயிட்டுச் சுடுவதல் லாற் செங்கை யீட்டு, மெருவிட்டு மூட்டிடநீர் விறகிட்டு மூட்டியவா வென்சொல் கேனே. (அரு)

---

(அக) செப்பு - சிமிழ், சொல். (அங) முலைமுகிழ் - முல்லையரும்பு.
(அரு) விறகிட்டுமூட்டியவா என்றது விறகுசுமந்ததை.

### விருத்தக்கலித்துறை.

என்போ டுள்ளமு நெக்குரு கப்புக் கென்போல்வார்க்
கன்போ டின்பு மளித்தருள் கூடலெம் மடிகேளோ
தன்போல் காமன் சாப முடித்தாற் றாழ்வுண்டே
முன்போர் காமன் சாப மனைத்து முடித்தாய்க்கே. (அசு)

### நேரிசையாசிரியப்பா.

முட்டாட் பாசடை நெட்டிதழ்க் கமலத்
திரைவர வுறங்குங் குருகு விரிசிறைச்
செங்கா னாரைக்குச் சிவபதங் கிடைத்தெனப்
பைம்புனன் மூழ்கிப் பதும பீடத்
தூற்றமி றாழு முலப்பில பஃறவம்
வீற்றுவீற் றிருந்து நோற்பன கடுக்குங்
குண்டுநீர்ப் பட்டத் தொண்டுறைச் சங்கமும்
வண்டமிழ்க் கடலின் றண்டுறைச் சங்கமு
முத்தகம் பயின்று காவியங் கற்றுச்
சித்திரப் பாட்டிய றேர்ந்தன செல்லுந்
தடம்பணை யுடுத்த தண்டமிழ்க் கூட
லிடங்கொண் டிருந்த விமையா முக்கட்
கருமிடற் றொருவனின் றிருவடி வழுத்துதுந்
தாய்நலங் கவருபு தந்தையுயிர் செகுத்தாங்
கிருபெருங் குரவரி னொருபழி சுமந்த
புன்றொழி லொருவற்குப் புகலின்மை தெரீஇ
யன்றருள் சுரந்த தொன்றூறு சென்றதோர்
வலியாற் கருள்வதூஉ நோக்கி
யெளியார்க் கெளியைமற் றென்பது குறித்தே. (அஎ)

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கூறுமயலுஞ் சிலகலையு மிழந்தொருமா னுயிரைக்
கொள்ளைகொள்ள வெழுந்தமதிக் கூற்றே யாற்றாச்

சிறுதுயிலும் பெருமூச்சுங் கண்டுமிரங் கலையாற்
றெறுமறலி நீயேயித் தெண்ணி லாவு
மெறியுநெடும் பாசமே யுடலுமறக் கூனி
யிருணிறமு முதிர்நரையா விழுந்தாய் போலு
நறுநுதலா ளொன்கொலுனை மதுரேசர் மிலேச்சு
நாகிளவெண் டிங்களென நவில்கின் றாரோ. (அஅ)

தாழிசை.

நவ்வியங்கண் மானுமானு மினிநுகந் திடங்கொள்வார்
நஞ்சமார்ந்தென் னெஞ்சமார்ந்து நனிகளங் கறுத்துளார்
கைவ்விளங்கு குன்றுமன்றுங் கோவிலாக் குனித்துளார்
கன்னிநாடர் மதுரைவாணர் கயிலைவெற்பர் வெற்பனீர்
கொவ்வைவாய் விளர்ப்பமைக் கருங்கணுஞ் சிவப்பவே
குளிர்தரங்க வைகைநீர் குடைந்துடன் றிளைத்திராற்
பைவ்விரிந்த வல்குலீர்நும் மன்னைமார்கள் சங்கையிற்
படிலவர்க்கு வீணினீவிர் பரிகரித்தல் பாவமே. (அசு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பாமிக்குப் பயின்மதுரைப் பரஞ்சுடரோ யொருத்திகயற் பார்வை மட்டோ, காமிக்கு மடந்தையர்கட் கயலெலா முமையடைதல் கணக்கே யன்றோ, மாமிக்குக் கடலேழும் வழங்கினீ ரொருவேலை மகனுக் கீந்து, பூமிக்குட் கடலைவறி தாக்கினீர் பவக்கடலும் போக்கி னீரோ. ()

மேற்படிவிருத்தம்.

நீரோடு குறுவெயர்ப்பு நெருப்போடு நெட்டுயிர்ப்பு நெடுங்கண் ணீரிற், பீரோடு வனமுலையுங் குறையோடு நிறையுயிரும் பெற்றா ளன்றே, காரோடு மணிகண்டர் கடம்பவனச் சொக்கர்நறை கமழ்பூங் கொன்றைத், தாரோடு மனஞ்செல்லத் தனையோடுந் தான்செல்லாத் தமிய டாளே. (கக)

---

(அசு) நெஞ்சமார்ந்துகளங்கறுத்துளார் களங்கு + அறுத்துளார்.

### பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்ற தடாதகா தேவியென் றொருபேர், தரிக்கவந் ததுவுந் தனிமுத லொருநீ சவுந்தர மாறனா னதுவும், — குமரவேள் வழுதி யுக்கிர னெனப்பேர் கொண்டதுந் தண்டமிழ் மதுரங், கூட்டுண வெழுந்த வேட்கையா லெனிலிக் கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார், — பமரம்யாழ் மிழற்ற நறவுகொப் பளிக்கும் பனிமலர்க் குழலியர் பளிக்குப், பானிலா முன்றிற் றூனிலா முத்தின் பந்தரிற் கண்ணிமை யாடா, — தமரர்நா டியரோ டம்மனை யாட வையநுண் ணூசுப்பள வலவென், றமரரு மருளுந் தெளிதமிழ்க் கூடலடலரா வலங்கல்வே ணியனே. (௯௨)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அடுத்தங் குலவாக் கோட்டைசுமந் தளித்தி ரொருவற் கதுநிற்கத் தொடுக்குங் கணைவே டனக்குலவாத் தூணி கொடுத்தீர் போலுமா[ன் லெடுக்குங்கணையைந்தெய்தகணை யெண்ணத்தொலையா தென்செய்கே றிடுக்கங் கொளமால் சிலைமதனைச் சினத்தீர் கடம்ப வனத்தீரோ. (௯௩)

### எழுசீர்க்கழிநெடிலடிவண்ணவிருத்தம்.

கடமுடைய நறுநெய்க்குண் முழுகியெழு வதையொத்த கரடமத கரிபெற்றோர் பிடியேபோன், மடவநடை பயில்பச்சை மயிலையொரு புறம்வைத்த மதுரையழ கியசொக்கர் வரைவேலோய், நடையுமெழு துவைநிற்கு நிலையுமெழு துவைசொற்கு ணலமுமெழு துவைசித்ர ரதிபோல்வா, ளிடையுமெழு துவைமுற்று மிலதொர்பொரு ளையுமொக்க வெழுதிலெவ ருனையொத்த பெயர்தாமே. (௯௪)

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மேதகைய பலகலைபோர்த் தறம்வளருந் தமிழ்க்கூடல் விகிர்த கேண்மோ, வேதமினின் றிருவுருவொன் றீருருவாய் நின்றதினு மிறும்பூ தந்தோ, போதலர்பைந் துழாய்ப்படலைப் புயல்வண்ணத் தொருவனிரு பூவை மார்க்குக், காதலனாய் மற்றுனக்கோர் காதலியாய் நிற்பதொரு காட்சி தானே. (௯௫)

நேரிசைவெண்பா.

காண்டகைய செல்வக் கடம்பவனத் தானந்த
தாண்டவஞ்செய் தாண்டவர்நீர் தாமன்றே - பூண்டடிய
ருள்ளத் திருப்பீரெம் முள்ளத்தை யும்முமதா
மெள்ளத் திருப்பீர் மிக. (௬௬)

கட்டளைக்கலித்துறை.

மிக்கார் முகத்தருள் கூடற் பிரான்விட நாண்டுவக்காக்
கைக்கார் முகத்தன்ன தேர்வல வாகை பரந்துசெலு
மிக்கார் முகக்க வெழுந்தகொல் லாமெம தாவியென்னத்
தக்கார் முகத்தடங் கண்ணீ ருகாந்த சலதியையே. (௬எ)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சலராசி தங்கு கணையேவு மொய்ம்பர் சரணார விந்த மிசையே
மலரா கிடந்த நயனார விந்தர் மதுரேசர் முன்பு புகலார்
சிலராவி யின்றி யுடலே சுமந்து திரிவார்கள் வெந்து விழவே
புலராத கங்கு லிடையேயொ ரங்கி புகையாது நின்றெரிவதே. (௬அ)

தாழிசை.

தேன்வழங்கு கடுக்கையார்கரு மான்வழங்கு முடிக்கையார்
திருவிருந்த விடத்தினாருள் கருவிருந்த நடத்தினார்
மானடங்கிய வங்கையார்சடைக் கானடங்கிய கங்கையார்
வைகையொன்றிய கூடலாரிவள் செய்கையொன்றையு நாடலார்
கானவேயிசை கொல்லுமாலுற வானவேய்வசை சொல்லுமாற்
கன்றியன்றி லிரங்குமாலுயிர் தின்றுதென்ற னெருங்குமாற்
றீநிலாவனல் சிந்துமாற்கொல வேனிலான்மெல முந்துமாற்
றினமிடைந்திடை நொந்தபோன்மகள் மனமிடைந்தது ணர்ந்துமே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உடையதொர் பெண்கொடி திருமுக மண்டல மொழுகுபெ ருங்
கருணைக், கடலுத வுஞ்சில கயல்பொரு மொய்ம்புள கடவுணெ டும்ப

(௬௯) வேய் - ஒற்றர்.

தியாம், புடைகொள் கருங்கலை புனைபவள் வெண்கலை புனையுமோர் பெண்கொடியா, வடகலை தென்கலை பலகலை யும்பொலி மதுரைவ ளம்பதியே. (க00)

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வள்ளைவாய் கிழித்துக் குமிழ்மறிந் தமர்த்த மதரரிக் கண்ணியு நீயு, மழலைநா றமுதக் குமுதவாய்க் குழவி மடித்தலத் திருத்திமுத் தாடி,— யுள்ளநெக் குருக வுவந்துமோந் தணைத்தாங் குவந்தனி ரிருத்திரா லுலக, மொருங்குவாய்த் தீருக் கொருதலைக் காம முற்றவா வென்கொ லோ வுரையாய், — வெள்ளிவெண் ணிலவு விரிந்தகோ டீரம் வெஞ்சுடர்க் கடவுளுங் கிடைத்து, வீற்றிருந் தனைய விடுசுடர் மகுட மீக்கொளத் தாக்கணங் கனையார், — கள்ளவாட் கருங்கண் ணேறுகாத் திட்ட காப்பென வேப்பலர் மிலைச்சுங், கைதவக் களிறே செய்தவக் கூடற் கண்ணுதற் கடவுண்மா மணியே. (க0க)

நேரிசையாசிரியப்பா.

கட்புலங் கதுவாது செவிப்புலம் புக்கு
மனனிடைத் துஞ்சி வாயிடைப் போந்து
செந்நா முற்றத்து நன்னடம் புரியும்
பலவேறு வன்னத் தொருபரி யுகைத்தோய்
புட்கொடி யெடுத்தொரு பூங்கொடி தன்னொடு
மட்கொடி தாழ்ந்த வான்கொடி யுயர்த்தோ
யோரே ழாழி சீர்பெறப் பூண்டு
முடவுப் படத்த சுடிகையுட் கிடந்து
நெடுநிலை பெயரா நிலைத்தே ரூர்ந்தோய்
மீனவர் பெருமான் மானவேல் பிழைத்தாங்
கெழுபெருங் கடலு மொருவழிக் கிடந்தென
விண்ணின் றிறங்குபு விரிதிரை மேய்ந்த
கொண்மூக் குறும்பு கொலைமதக் களிற்றொடும்

---

(க0க) தாக்கணங்கு - இலக்குமி.

(க0உ) ௬. வான்கொடி என்றது திருமாலாகிய இடபக்கொடியை.

வேற்றுமை தெரியாது மின்னுக்கொடி வளைத்தாங்
காற்றல்கொ டேற்றபா கலைத்தனர் பற்றத்
திரியுமற் றெம்மைத் தீச்சிறை படுக்கெனப்
பரிதிவே லுழவன் பணித்தனன் கொல்லென
மெய்விதிர்த் தலறுபு வெரீஇப்பெயர்ந் தம்ம
பெய்முறை வாரிப் பெயும்பெய லல்ல
நெய்பா றயிர்முதற் பல்பெய றலைஇப்
பெருவளஞ் சுரந்த விரிதமிழ்க் கூட
லிருநில மடந்தைக் கொருமுடி கவித்தாங்
கிந்திர னமைத்த சுந்தர விமானத்
தருள்சூற் கொண்ட வரியிளங் கயற்கண்
மின்னுழை மருங்குற் பொன்னொடும் பொலிந்தோய்
துரியங் கடந்த துவாத சாந்தப்
பெருவெளி வளாகத் தொருபெருங் கோயிலுண்
முளையின்று முளைத்த மூல லிங்கத்
தளவையி னளவா வானந்த மாக்கட
லின்பெருந் தன்மையை நிகழ்த்துதும் யாமென
மன்பெருஞ் சிறப்பின் மதிநலங் கொளினே
பேதைமைப் பாலரோ பெரிது மாதோ
வேத புருடனும் விராட்புரு டனுமே
யினையநின் றன்மைமற் றெம்ம னோரு
நினையவுஞ் சிலசொற் புனையவும் புரிதலின்
வாழியெம் பெருமநின் றகவே
வாழியென் மனனு மணிநா வும்மே. (௱௨)

(௨௦) தலையல் - மழைபெய்துவிடுதல்.

மதுரைக்கலம்பகம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# நீதிநெறிவிளக்கம்.

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வ
நீரிற் சுருட்டு நெடுந்திரைக - ணீரி
லெழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. (க)

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு - முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை. (உ)

தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி - நெடுங்காம
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது. (ங)

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச் - சொல்வள
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு. (ச)

எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகு - முய்த்துணர்ந்துஞ்

(க) இது சிதம்பரச்செய்யுட்கோவையினும் உள்ளது.

சொல்வன்மை யின்றெனி னென்னாகு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து. (ரு)

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லா
ரவையஞ்சா வாகுலச் சொல்லு - நவையஞ்சி
யீத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. (சா)

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினு
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் - மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மாற்றிவர் செய்யு முடம்பு. (எ)

நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி - கடும்பக
லேதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால். (அ)

வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல் - கருந்தனங்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல். (கூ)

வினைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவா - மனைத்தக்காண்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல். (க0)

இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்வி னல்லது வாய்திறவா - வென்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற. (கக)

(கக) கைத்து - பொருள்.

இவறன்மை கண்டு முடையாரை யாருங்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப - பெரிதுந்தா
முற்பக லொலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று. (கஉ)

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லான்
மற்றோ ரணிகலம் வேண்டாவா - முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரோ
யழகுக் கழகுசெய் வார். (கங)

முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க - சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால். (கச)

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
யம்மா பெரிதென் றகமகிழ்க - தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லா
மெற்றே யிவர்க்குநா மென்று. (கரு)

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படு - மில்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமுந்
தலைவணங்கித் தாழப் பெறின். (கசா)

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்பு - தூக்கின்
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு. (கஎ)

விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யு
நலத்தகையார் நல்வினையுந் தீதே - புலப்பகையை

(கஉ) இவறன்மை - உலோபத்தன்மை. (கச) கூடம் - சம்மட்டி.

வென்றன நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின். (௧௮)

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றாற் - றன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்ப
நயவாமை யன்றே நலம். (௧௯)

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டு
மறவாமே நோற்பதொன் றுண்டு - பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். (௨௦)

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை - சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல். (௨௧)

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார் - திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல். (௨௨)

கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றாத்தைவா யங்காத்தன் - மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல். (௨௩)

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொ ணகையினர் வாய்ச்சேரா - தாக்கணங்கு

மாணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில். (௨௪)

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉங்
குற்றந் தமதே பிறிதன்று - முற்றுணர்ந்துந்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
வேதிலரை நோவ தெவன். (௨௫)

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார் - மாத்தகைய
வந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு. (௨௬)

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயு - மறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வ
மிலைமுகப் பைம்பூ ணிறை. (௨௭)

கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினுந் - தண்ணளியான்
மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு. (௨௮)

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்ற
மடிகொன்று பால்கொளலு மாண்பே - குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல். (௨௯)

---

(௨௪) பேடு - பெண்டன்மையை அவாவி ஆண்டன்மையை இழந்தது. ஆண்டன்மையை அவாவிப் பெண்டன்மையை இழக்குமேல், அது அலியெனப்படும். இக்கருத்துப்பற்றியே, கந்தபுராணத்தாரும் தேவரையேவல்கொள்படலத்தில் "பெண்ணோ வலிதானோ பேடோ வெனவுரைப்பார்." என வேறுபிரித்து ஓதியருளினாரென்க.

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொரு
ளின்று குறையிரப்ப நேர்படான் - சென்றொருவ
னுவன கூறி னெயிறலைப்பா னுறலைக்கும்
வேடலன் வேந்து மலன். (௩௦)

மூடிப்ப மூடித்துப்பின் பூசுவ பூசி
யுடுப்ப வுடுத்துண்ப வுண்ணு - விடுத்திடுத்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம். (௩௧)

ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றேறு டுணையாத் தெரிதந்துங் - குற்ற
மறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று. (௩௨)

ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு - நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு. (௩௩)

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகு - மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து. (௩௪)

நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுத - றக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி. (௩௫)

---

(௩௨) சிறைப்புறம் - மறைவிடம்.

(௩௪) கண்கூடு - கண்ணுக்குத்தோன்றுவது; எனவே பிரத்தியக்ஷம்.

பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பிறற் றாழ்வார்க் - கணிய
திளையாண் முயக்கெனினுஞ் செய்த்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல். (௯௬)

கண்ணேக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
வின்மொழியின் வாய்மையே தீங்காயா - வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு. (௯௭)

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பிற்
றூங்குங் களிறோ துயருறா - வாங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமா
லாருங் கிளையோ டயின்று. (௯௮)

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
யீகையி னெக்கழுத்த மிக்குடைய - மாகொல்
பகைமுகத்த வெள்வேலான் பார்வையிற் றீட்டு
நகைமுகத்த நன்கு மதிப்பு. (௯௯)

களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார் - தளர்நடைய
தானுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்க டாம். (௱)

தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்த
மின்னுயி ரோம்பினு மோம்புக - பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின். (௱௧)

கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்தர்
புலனெருங்கப் பொய்யொழிந் தாருங் - கொலைஞாட்பின்

மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும். (சஉ)

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும் - விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டுதற்கு. (சக)

இகழி னிகழ்ந்தாங் கிறைமக னென்று
புகழினு மொக்கப் புகழ்ப - விகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யு
நீர்வழிப் பட்ட புணை. (சச)

செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா - கவிழ்மதத்த
கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்து
மம்மாண் பினவே யமைச்சு. (சரு)

கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க - வொவ்வொருகா
லெண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னான். (சசா)

பழைமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார் - வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரு
மார்வலரு மில்லை யவர்க்கு. (சஎ)

மன்னர் புறங்கடைக் காத்து வறிதேயா
மெந்நலங் காண்டுமென் றெள்ளற்க - பன்னெடுநாட்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும். (சஅ)

உறுதி பயப்ப கடைபோகா வேனு
மிறுவரை காறு முயல்ப - விறுமுயிர்க்கு
மாயுண் மருந்தொழுக்க றீதன்று லல்லனபோ
லாவனவு முண்டு சில. (சகூ)

முயல்ாது வைத்து முயற்றின்மை யாலே
யுயலாகா வூழ்த்திறத்த வென்னூர் - மயலாயு
மூற்ற மிறுவிளக்க மூழுண்மை காண்டுமென்
றேற்று றெறிகான் முகத்து. (ருo)

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே - யுலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி. (ருக)

காலமறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து - மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும். (ருஉ)

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சா
ரெவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி
யருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (ருங)

சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர் - நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது. (ருச)

(ருo) உயல் - ஒழிதல். ஊற்றம் - மறைவு.
(ருக) பால் - ஊழ்.

புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சா
ரகப்பகை யொன்றஞ்சிக் காப்ப - வனைத்துலகுஞ்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை. (௫௫)

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறாதல் வேண்டுங் - கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து. (௫௬)

நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத் - திட்பமா
நாளுலந்த தன்றே நடுவெ னடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து. (௫௭)

மனத்த கறுப்பெனி னல்ல செயினு
மனத்தெவையுந் தீயவே யாகு - மெனைத்துணையுந்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர். (௫௮)

இனியவ ரொன்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே - யனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும். (௫௯)

பொய்க்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கு
மெய்தாமை சொல்லின் வழுக்காது - மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்று
நலமன்றே நல்லா றெனல். (௬௦)

நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து
மல்லன செய்தற் கொருப்படார் - பல்பொறிய

(௫௭) எய்யாமை - அறியாமை.

செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். (௬௧)

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவுந் - தவம்விற்றூங்
கூனோம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉந்
தாநோம்பிக் காத்த றலை. (௬௨)

இடைதெரிந் தஞ்சுறுத்து வஞ்சித் தெளியா
ருடைமைகொண் டேமாப்பார் செல்வ - மடநல்லார்
பொம்மன் முலைபோற் பருத்திடினு மற்றவர்
நுண்ணிடைபோற் றேய்ந்து விடும். (௬௩)

பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளுஞ்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா - முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
வெரிதழன் மாயா திரா. (௬௪)

தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
யொத்த கடப்பாட்டிற் றாளூன்றி - யெய்த்து
மறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள். (௬௫)

பொதுமகளே போல்வ தலையாயார் செல்வங்
குலமகளே யேனையோர் செல்வங் - கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம் பயன்படுவ தில். (௬௬)

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோ
னல்குரவே போலு நனிநல்ல - கொன்னே
யருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான். (௬௭)

---

(௬௪) விராய் - விறகு. (௬௫) நிலை - ஆச்சிரமம். தாள் - முயற்சி.

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்த
லோகோ கொடிது கொடிதம்மா - நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்பூட் டிடப்படின்மற்
றுவா விவனொன்செய் வார். (௬௮)

சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழித
னல்வினை கோறலின் வேறல்ல - வல்லைத்தம்
மாக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர். (௬௯)

சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் றாழ்வரோ தாழா - ரறனல்ல
வெண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினு
மொண்மையிற் றீர்ந்தொழுக லார். (௭௦)

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னுஞ் - செயிர்த்துணைப்பி
னெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோ
லெஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று. (௭௧)

அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்
டொல்காதார் வாய்விட் டுலம்புப - வல்லாற்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டுநிற்பா ரார். (௭௨)

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனாக் கொள்வான் - பயமின்று [போற்
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்
கைவிதிர்த் தஞ்சப் படும். (௭௩)

தெய்வ முளதென்பார் தீய செயப்புகிற்
றெய்வமே கண்ணின்று நின்றுறுக்குந் - தெய்வ

(௭௧) நாகரிகம் - கண்ணோட்டம்.

மிலதென்பார்க் கில்லைதம் மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன். (எச)

தீய செயற்செய்வா ராக்கம் பெருகினுந்
தீயன தீயனவே வேறல்ல - தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமா போல். (எரு)

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயுஞ்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர் - முன்னைத்தம்
மூழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில. (எசு)

பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேற
லறனன்றே யாயினு மாக - சிறுவரையு
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய். (எஎ)

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே - பெரிதுந்த
மின்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்த லலம். (எஅ)

கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார் - பழியொடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார். (எகூ)

திருவினு நல்லாண் மனைக்கிழத்தி யேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பார் - நறுவிய
வாயின வேனு முமிழ்ந்து கடுத்தின்னுந்
தீய விலங்கிற் சிலர். (அ0)

கற்புடைத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு. (அக)

ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம். (அஉ)

கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர் - மற்றுத்தங்
கேள்வற்கு மேதிலற்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார். (அங)

முறையுங் குடிமையும் பான்மையு நோக்கார்
நிறையு நெடுநாணும் பேணார் - பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவங்
கற்பின் மகளிர் பிறப்பு. (அச)

பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார் - பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார். (அரு)

அயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லா
மயிற்சுவையி னுருவவென் றெண்ணி - யயிற்சுவையும்
பித்துணக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போன்
மொத்துண மொய்ம்பி னவர். (அசு)

அன்பொ டருளுடைய னேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார் - புன்புலாற்

பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றும்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார். (௮௭)

சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடுப - முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில். (௮௮)

எவ்வினைய ரேனு மினைவிழைச்சொன் றில்லெனிற்
றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉ - மவ்வினை
காத்த விலரோ லெனைத்துணைய ராயினும்
தூர்த்தருந் தூர்ப்பா ரலர். (௮௯)

பரபரப்பி னோடே பலபல செய்தாங்
கிரவுபகல் பாழுக் கிறைப்ப - வொருவாற்றா
னல்லாற்றி னூக்கிற் பதறிக் குலைகுலைப
வெவ்வாற்று னுய்வா ரிவர். (௯0)

இளைய முதுதவ மாற்றாது நோற்றென்
றுளைவின்று கண்பாடு மூழே - விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரோற் காண்பாருந்
தாழாமே நோற்பார் தவம். (௯௧)

நல்லவை செய்யத் தொடங்கினு நோனாமே
யல்லன வல்லவற்றிற் கொண்டுய்க்கு - மெல்லி
லியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல். (௯௨)

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே - கஞ்சுக
மெப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது. (௯௩)

(௯௧) நோற்று - பொறுத்து.

வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின் - வஞ்சித்த
வெங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
யங்கங் குலைவ தறிவு. (கூச)

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும் - கழிமுடைப்
புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினுஞ்
சென்றுதைக்குஞ் சேயார் முகத்து. (கூரு)

மெலியார் விழினு மொருவாற்றா னுய்ப
வலியார்மற் றொன்றானு முய்யார் - நிலைதப
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினு
முய்யுமா லுய்யா பிற. (கூசா)

இசையாத போலினு மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லாற் - பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பானை யொப்பவே
யூனோம்பி யூன்றின் பவர். (கூஎ)

எவவெவ ரெத்திறத்த ரத்திறத்த ராய்நின்
றவரவர்க் காவன கூறி - யெவவெவர்க்கு
முப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையா
னெப்பாலு நிற்ப தெனை. (கூஅ)

மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார் - மெய்யுணர்ந்தார் [சி
காப்பே நிலையாப் பழிநாண நீள்கதவாச்
சேர்ப்பார் நிறைத்தாழ் செறித்து. (கூகூ)

---

(கூஅ) உப்பால் - புறம்பு. இதில் உகரச்சுட்டு புறத்தையுணர்த்திற்று. "ஊழையும் உப்பக்கங் காண்பர்." என்னும் திருக்குறளிற்போல.

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போன் - முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்ப
மிறந்தவெலாந் துன்பமலா தில். (க௦௦)

கற்றாங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப் - பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரோ நீணெறிச்சென் றார். (க௦க)

ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார் - தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள். (க௦உ)

நீதிநெறிவிளக்கம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருவாரூர் நான்மணிமாலை.

காப்பு.

நாடுங் கமலேசர் நான்மணிமா லைக்குமிகப்
பாடுங் கவிதைநலம் பாலிக்கும் - வீடொன்ற
முப்போ தகத்தின் முயல்வோர்க்கு முன்னிற்குங்
கைப்போ தகத்தின் கழல்.

நேரிசைவெண்பா.

நீரூர்ந்த முந்நீர் நிலவலய நீள்கொடிஞ்சித்
தேரூர்ந்த செல்வத் தியாகனே - யாரூர
வீதிவிடங் காவடங்கா வேலைவிடம் போலுமதிப்
பாதிவிடங் காகடைக்கண் பார்த்து. (௧)

கட்டளைக்கலித்துறை.

பார்பெற்ற வல்லிக்கும் பாகீ ரதிக்குமெய்ப் பாதியுமத்
தார்பெற்ற வேணியுந் தந்தார் தியாகர் தடம்புயத்தின்
சீர்பெற்றி லேமென்று நாணால் வணங்கிச் சிலையெனவும்
பேர்பெற்ற தாற்பொன் மலைகுனித் தாரெம் பிரானென்பரே. (௨)

---

(௧) விடங்கர்-டங்கத்தினாலே செய்யப்படாதவர், எனவே, சுயம்பு என்றபடி. இப்பெருமான் ஏனைச்சுயம்புகள்போலாது வீதியின்கண்ணு மெழுந்தருளுதலால், வீதிவிடங்கரென்று வழங்குவர். டங்கம்-உளி.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்பாக நகுதலையோ டெழிலாக வணிந்தகம லேச மற்றுன்
றன்பாக மிடப்பாகத் தலைவிகரு விழிதோய்ந்துந் தலைவி பாகத்
தன்பாக நின்றிருநோக் கவைதோய்ந்துந் திருநிறம்வே றுகை யாலப்
பொன்பாக மிதுவெனவு நின்பாக மிதுவெனவும் புகலொ ணாதே. (ரு)

### நேரிசையாசிரியப்பா.

ஒண்கதிர் பரப்புஞ் செங்கதிர்க் கடவுள்
வெயில்கண் டறியா வீங்கிருட் பிழம்பிற்
புயல்கண் படுக்கும் பூந்தண் பொதும்பிற்
காவலர்ப் பயந்து பாதபத் தொதுங்கிய
விருவே றுருவிற் கருவிரன் மந்தி
பொன்னிறம் பழுத்த பூஞ்சுளை வருக்கை
முன்னுறக் கண்டலு முளையெயி றிலங்க
மடித்தலத் திருத்தி வகிர்ந்துவள் ளுகிராற்
றெடுத்தபொற் சுளைபல வெடுத்துவாய் மடுப்பது
மானுட மடங்க றாணிடைத் தோன்றி
யாடகப் பெயரி னவுணன்மார் பிடந்து
நீடுபைங் குடரி னிணங்கவர்ந் துண்டென
விறும்பூது பயக்கு நறும்பணை மருதத்
தந்த ணாரூ ரெந்தையெம் பெரும
சிங்கஞ் சுமந்த செழுமணித் தவிசிற்
கங்குலும் பகலுங் கலந்தினி திருந்தாங்
கிடம்வலம் பொலிந்த விறைவியு நீயு
நடுவண் வைகு நாகிளங் குழவியை
யொருவிரி னொருவி ருள்ளநெக் குருக
விருவிருந் தனித்தனி யேந்தினிர் தழீஇ
முச்சுடர் குளிர்ப்ப முறைமுறை நோக்கி
யுச்சி மோந்துமப் பச்சிளங் குழவி

நாறுசெங் குமுதத் தேறலோ டொழுகு
மெழுதாக் கிளவியி னேழிசை பழுத்த
விழுமென் குரல மழலைத் தீஞ்சொற்
சுவையமு தூண்ணூஉஞ் செவிகளுக் கையவென்
பொருளில் புன்மொழி போக்கி
யருள்பெற வமைந்ததோ ரற்புத முடைத்தே. (௪)

நேரிசைவெண்பா.

தேங்குபுக ழாரூர்த் தியாகர்க்கெண் டிக்குமொளி
வீங்கு பகற்போது வெண்படமாந் - தூங்கிருள்சூழ்
கங்குற் பொழுது கரும்படமாஞ் செம்படமாம்
பொங்குற்ற புன்மாலைப் போது. (௫)

கட்டளைக்கலித்துறை.

போதொன் றியதண் பொழிற்கம லேசர்பொன் மார்பிலெந்தாய்
சூதொன்று கொங்கைச் சுவடென்ப ராற்றெருள் களிற்றுரிவை
மீதொன் றுவகண்டு வெங்கோப மாமுகன் வெண்மருப்பா
லீதொன் றடுகளி றென்றெதிர் பாய்ந்த விணைச்சுவடே. (௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இணங்குகம லாலயமா லிதயத்திற் பொலிந்தியா கேச ரம்பொற், கணங்குழைமண் மகளிதய கமலத்தும் பொலிதலினக் கமல மான, மணங்கமழ்பங் கயத்தடஞ்சூழ் கமலைகம லாலயப்பேர் வாய்த்த தான்மற், றணங்கனையா ரிதயமுந்தம் மருட்கொழுந ரிதயமுமொன் றாகுந் தானே. (௭)

நேரிசையாசிரியப்பா.

தானமால் களிறு மாநிதிக் குவையு
மேனைய பிறவு மீகுந ரீக

(எ) கமலா லயம் மால் இதயம்-இலக்குமியொடுங்கும் திருமாலிருதயம்.
மானுதல் - ஒத்தல்.

நலம்பா டின்றி நாண்டுறந் தொரீஇ
யிலம்பா டின்றி யேற்குந ரேற்க
புரவலர் புரத்தலு மிரவல ரிரத்தலு
மிருவே றியற்கையு மிவ்வுல குடைத்தே
அதாஅன்று
ஒருகா லத்தி லுருவமற் றொன்றே
யிடப்பான் முப்பத் திரண்டறம் வளர்ப்ப
வலப்பா லிரத்தன் மாநிலத் தின்றே
விண்டொட நிவந்த வியன்றுகிற் கொடிகண்
மண்டலம் போழ்ந்து மதியக டுடைப்ப
வாணிலா வமுதம் வழங்கியக் கொடிகள்
வேனிலிற் பயின்ற வெப்பம தாற்றுபு
கொடியா ரொத்துணைக் கொடுமை செய்யினு
மதியார் செய்திடு முதவியை யுணர்த்தும்
பன்மணி மாடப் பொன்மதிற் கமலைக்
கடிநகர் வைப்பினிற் கண்டேம்
வடிவ மற்றிது வாழிய பெரிதே. (அ)

நேரிசைவெண்பா.

பெருமான் றமிழ்க்கமலைப் பெம்மான்கைம் மானுங்
கருமா னுரியதனுங் கச்சு - மொருமானுஞ்
சங்கத் தடங்காதுந் தார்மார்புங் கண்டக்கா
லங்கத் தடங்கா தவா. (௯)

கட்டளைக்கலித்துறை.

**வா**வியம் போருகஞ் சூழ்கம லேசர்புள் வாய்கிழிந்த
தூவியம் போருகந் தோறுநின் றோர்துணைத் தாளடைந்த
வாவியம் போருகந் தாயிரங் கூற்றுடன் றாலுமஞ்சே
னாவியம் போருக நன்னெஞ்ச மேயவர் நாமங்களே. (௧0)

(௧0) புள்வாய்கிழித்ததூவியம்பு - திருமாலாகிய அம்பு. தூவி - அம்பிற்பிணிக்கும் இறகு. நாவியம்போருக - நா + இயம்பு + ஒருக.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நாம வேற்படைக் கடவுளைப் பயந்தரு ணங்கைதென் கமலேசர்
வாம பாகத்தைக் கொளவலப் பாகநீர் மங்கைகொண் டனள்போலாந்
தாம நீற்றொளி தன்னிறங் காட்டவெண் டலைநிரை நுரைகாட்டக்
காமர் பூங்கொடி மடந்தையர் மதர்விழிக் கயலுலா வரலாலே. (கக)

நேரிசையாசிரியப்பா.

வருமுலை சுமந்து வாங்கிய நுசுப்பிற்
புரிகுழன் மடந்தையர் பொன்னெடு மாடத்
தொண்கதிர் வயிரமுந் தண்கதிர் நீலமுஞ்
சேயொளி பரப்புஞ் செம்மணிக் குழாமு
மாயிரு டுரந்து மழகதி ரெறிப்பன
சுரநதி முதல வரநதி மூன்றுந்
திருவநீண் மறுகிற் செல்வது கடுப்ப
வொள்ளொளி துளும்பு மொண்டமிழ்க் கமலைத்
தெள்ளமு திறைக்குந் திங்களங் கண்ணித்
தீநிறக் கடவுளின் காண்முறை வணங்குதுங்
கூற்றெனப் பெயரிய கொடுந்தொழி லுலைய
லூற்றமில் யாக்கை யுவர்நீர்க் கேணிப்
புலத்தலை யுயிர்மீ னலைத்தனன் பிடிப்ப
வைவளி பித்தென வமைத்துவைத் திருந்த
முத்தலைத் தூண்டி தூண்டியத் தலை~~வாழ்~~
வாழ்நாண் மிகுப்பு நோக்கித் தாழா
துயிறலைத் தொடங்கி யெயிறலைத் திருத்தலிற்
றள்ளா முயற்சி தவறுபட் டொழிந்தென
வெள்குறீஇ மற்றவன் விம்மித முறுக
வருட்பெருங் கடலினவ் வாருயிர் மீனங்
கருக்குழி கழியப் பாய்ந்து தெரிப்பரும்
பரமா னந்தத் திரையொடு முலாவி

---

(கஉ) சு. வரநதிமூன்று - கங்கை, யமுனை, சோணை.

யெய்தரும் பெருமித மெய்த
வையநின் கடைக்க ணருளுநதி யெனவே. (கஉ)

நேரிசைவெண்பா.

என்பணிந்த தென்கமலை யீசனார் பூங்கோயின்
முன்பணிந்த தெய்வ முனிவோர்க - ளன்பென்னும்
புண்சுமந்தோ நந்தி புடைத்தென்னார் புண்ணியனார்
மண்சுமந்தா ரொன்றுருகு வர். (கஙு)

கட்டளைக்கலித்துறை.

வரந்தந் தருள வரதம்வைத் தாலென் வரதமிடக்
கரந்தந்த தாலிவர் கையதன் றேபலி காதலித்துச்
சிரந்தந்த செங்கைக் கமலேசர் நாமந் தியாகவொன்ப
தரந்தந்த வாள்விழி யாடந்த தாங்கொ லறம்வளர்த்தே. (கச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வள்ளமுலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிர மாலை யாகக், கொள்ளுவது மலர்மடந்தை கொழுநர்தலை கிண்கிணியாக் கோத்துச் சாத்த, வுள்ளுவது மொழிவதுமற் றொழியாயே லடிமுடிக ளுணர்ந் தேமென்றே, கள்ளமொழி வான்புகிற்றென் கமலேச வவர்க்கவை யே கரியு மாமே. (கரு)

நேரிசையாசிரியப்பா.

கருந்தாது கடுத்த பெரும்புணை தாங்கும்
படர்மருப் பெருமை பைங்குவளை குதட்டி
மடிமடை திறந்து வழிந்தபா லருவி
கணைபொரு தலைப்பப் பெருகுபூந் தடத்து
ரு வெண்டோ டவிழ்த்த முண்டகத் தவிசிற்
பானீர் பிரித்துண் டுவெள் ளெகின
நாற்பெருங் கடலு ளுண்பொரு டெரித்து
நாற்பயன் கொள்ளு நாமகட் பொருவு

மென்பான் மருதத் தண்புனற் கமலைத்
தென்பான் மேருவிற் றிகழுங் கோயின்
மூவ ரகண்ட மூர்த்தியென் றேத்துந்
தேவ ரகண்ட தெய்வ நாயக
நின்னடித் தொழும்பி னிலைமையின் றேனுநின்
றன்னடித் தொழும்பர் சார்புபெற் றுய்தலிற்
சிறியவென் விழுமந் தீர்ப்பது கடனென
வறியா யல்லை யறிந்துவைத் திருந்துந்
தீரா வஞ்சத் தீப்பிறப் பலைப்பச்
சோரா நின்றவென் றுயரொழித் தருள்கிலை
புறக்கணித் திருந்ததை யன்றே குறித்திடிற்
கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மா
ருடல்சுமந் துழலுமக் கடவுளர்க் கல்லதைப்
பிறவியின் றுயர்நினக் கறிவரி தாகலி
னருளா தொழிந்தனை போலுங்
கருணையிற் பொலிந்த கண்ணுத லோயே. (௧௬)

நேரிசைவெண்பா.

கண்ணனார் பொய்ச்சூள் கடைப்பிடித்தோ தென்புலத்தா
ரண்ணலா ரஞ்சுவனொன் றஞ்சியோ - விண்ணோர்
விருந்தாடு மாரூரா மென்மலர்த்தா டேக்கா
திருந்தாடு கின்றவா வென். (௧௭)

கட்டளைக்கலித்துறை.

என்னுயிர்க் கொக்கு மிளஞ்சேயொ டேழல கீன்றவனை
மன்னுயிர்க் கொக்குங் கமலைப் பிரான்மணி கண்டங்கண்டு
மின்னுயிர்க் கும்புய லென்றுமென் கொன்றைபைந் தாதுயிர்க்கப்
பொன்னுயிர்க் கொண்கன் பொலன்றுகி லாமெந்தை பூந்துகிலே. ௧௮

---

(௧௬) ௨௦. கோள் - குணம். ௨௬. போலும் - ஒப்பில்போலி.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமாதி னிதயகமலத்து வைகும் பொலிவானு மரியணைமேற் புணரி யீன்ற, மாமாது வழிபடவீற் றிருத்த லானு மறைமுதலு நடுமுதலு முடிவி னின்ற, தாமாத ரெளிவிப்பார் போலு நீலத் தரங்கநெடுங் கடன்ஞால மொருங்கு வாய்த்த, கோமாது மனங்குழையக் குழைந்த வாரூர்க் குழகனார் கிண்கிணிக்கா லழக னாரே. (௧௧)

### நேரிசையாசிரியப்பா.

அழல்விர் சோதி முழுவெயி லெறிப்ப
விளநில வெறிக்குங் குளிர்மதிக் குழவியும்
வெஞ்சினம் பொதிந்த நஞ்சுமிழ் பகுவாய்
வெள்ளைமுள் ளெயிற்றுப் பிள்ளைவா ளரவுந்
தெண்டிரை கொழிக்குந் தீம்புனற் கங்கைத்
தண்டுறை மருங்கிற் றனிவிளை யாட
வுடன்வைத் தாற்றிய படர்சடைக் கடவு
ளெறுழ்வலித் தறுகட் டெறுசினக் கேழன்
முளையெயி றிலங்க முருகுகொப் பளித்துத்
தலையவி ழிதழித் தண்டார் மார்ப
திருவிழி யிரண்டினு மிருசுடர் வழங்கலி
னிரவுநன் பகலு மொருபுடை கிடந்தெனக்
கடங்கலுழ் கரடத் தடங்களிற் றுரிவையு
மடங்கலி னுரியு முடன்கிடந் தலமர
விண்பட நிவந்த திண்பு யாசல
நெட்டிலைக் கமுகி னெடுங்கயி றார்த்துக்
கட்டுபொன் னூசல் கன்னிய ராட்டவப்
பைங்குலைக் கமுகு பழுக்காய் சிந்த
வெண்கதிர் நித்திலம் வெடித்துகு தோற்றங்
கந்தரத் தழகு கவர்ந்தன விவையென
வந்தி லாங்கவ ரார்த்தன ரலைப்ப
வொண்மிட றுடைந்தாங் குதிரஞ் சிந்தக்

கண்முத் திருத்துக் கலுழ்வது கடுக்குந்
தண்டலை யுடுத்த வொண்டமிழ்க் கமலைப்
பொற்பதி புரக்கு மற்புதக் கூத்தநின்
சேவடிக் கொன்றிது செப்புவன் கேண்மதி
விலங்கினுண் மிக்கது விண்ணவர் தருவென
வொருங்குவைத் தெண்ணுவ தோர்வழக் கன்மையி
னெத்த சாதியி னுயர்புமற் றிழிபும்
வைத்தன ரல்லதை வகுத்தனர் யாரோ
யாருயிர்க் கமைத்த வோரெழு பிறப்பினுண்
முற்படு தேவருண் முதல்வனென் றெடுத்துக்
கற்பனை கடந்த கடவுணிற் பழிச்சுதுந்
தொன்மறைக் குலங்கண் முன்னிய தியாதெனப்
பன்முறை தெரிப்பினும் பயன்கொள வரிதாற்
றேவரி னொருவனென் றியாவரு மருளுற
நீயே நின்னிலை நிகழாது மறைத்துக்
கூறிய தாகு மாகலிற்
றேறினர் மறையெனச் செப்பினர் நன்கே. (௨0)

நேரிசைவெண்பா.

நல்லார் தொழுங்கமலை நாதனே நாதனெனக்
கல்லாதார் சொல்லுங் கடாவிற்கு - வெல்லும்
விடையே விடையாக மெய்யுணரா ரையுற்
றிடையே மயங்குமிது வென். (௨௧)

கட்டளைக்கலித்துறை.

இதுவே பொருளென் றெவரெவர் கூறினு மேற்பதெது
வதுவே பொருளென் றறிந்துகொண் டேனப் பொருளெவர்க்கும்
பொதுவேயென் றாலும் பொருந்துமெல் லோர்க்கும் பொதுவினிற்கு
மதுவேய் மலர்ப்பொழி லாரூரி னும்வைகும் வைகலுமே. (௨௨)

(௨0) ௩ரு. தெரிப்பு = ஆராய்வு. ௩௬. மறை - மறைக்கப்படுவது.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வைய முழுது முழுதுண்ண வல்லாற் களித்து நவநிதியுங்
கையி லொருவற் களித்தெமக்கே கதிவீ டளித்தோர் கன்னிகைக்கு
மெய்யி லொருகூ றளித்தனரால் விமலர் கமலைத் தியாகரென்ப
ரைய ரிவர்க்கே தகுமுகம னன்று புகழு மன்றுமே. (உ௯)

### நேரிசையாசிரியப்பா.

ஆமையோ டணிந்து தலையோ டேந்திக்
காமரு மடந்தையர் கடைதொறுங் கடைதொறும்
பலிதேர்ந் துண்ணினு முண்ணு மொலிகழற்
பைந்துழாய் முகிலும் பழமறை விரிஞ்சனு
மிந்திரா தியரு மிறைஞ்சினர் நிற்ப
மற்றவர் பதங்கண் மாற்றியும் வழங்கியும்
பற்றலர்ச் செகுத்து முற்றவர்த் தாங்கியும்
பாசுரர் பரசப் பணிகுநர் பணிய
வரசுவீற் றிருப்பினு மிருக்கு முறைசெயின்
யோக சாதனம் போகிகட் கின்மையிற்
செஞ்சடை விரித்து வெண்பொடி பூசி
யெருக்கங் கண்ணியுஞ் சூடி விருப்புடை
யிடப்பான் மடந்தை நொடிப்போழ்து தணப்பினு
மடலூர் குறிப்புத் தோன்ற விடலருங்
காமமீ தூர வேமுற் றிரந்தவ
டாமரைச் சீறடி தைவந் தம்ம
புலவியிற் புலந்துங் கலவியிற் களித்தும்
போகமார்ந் திருப்பினு மிருக்கும் யோகிகட்
கெய்தா வொண்பொருள் கைவந்து கிடைப்ப
ஞான முத்திரை சாத்தி மோனமோ
டியோகுசெய் திருப்பினு மிருக்கு மீகெழு
தபனிய மாடத் தரமிய முற்றத்
தைங்கணைக் கிழவ னரசிய னடாத்தக்

கொங்கைமால் களிறுங் கொலைக்கண்வாட் படையுஞ்
சில்கா ழல்குல் வெல்கொடித் தேரும்
பல்வகை யுறுப்பும் படையுறுப் பாகப்
பவக்குறும் பெறியுந் தவக்குறும் பெறிந்து
நுணங்கிய நுசுப்பி னணங்கனூர் குழுமிக்
கைவகுத் திருந்து கழங்கெறிந் தாட
மையுண் கண்கண் மறிந்தெழுந் தலமரல்
செம்முகத் தாமரைச் சிறையளிக் குலங்க
ளம்மென் காந்தளி னளிக்குல மார்த்தெழக்
கலந்துமன் றழீஇக் காமுற னிகர்க்கும்
பொலன்செய் வீதிப் பொன்மதிற் கமலை
யண்ணன் மாநகர்க் கண்ணுதற் கடவுள்
கற்பனை கழன்று நிற்றலி
னிற்பதிந் நிலையெனு நியமமோ வின்றே. (உ௪)

நேரிசைவெண்பா.

இன்னீ ருலகத்துக் கின்னுயிர்யா மென்றுணர்ந்து
நன்னீர் வயற்கமலை நாதனூர் - பொன்னூர்ந்த
சேவடிக்கா ளானோர் சிலரன்றே தென்புலத்தார்
கோவடிக்கா ளாகார் குலைந்து. (உ௫)

கட்டளைக்கலித்துறை.

குலைவைத்த செவ்விள நீர்குளிர் பூம்பொழிற் கொம்புக்கின்ப
முலைவைத்த தொக்குங் கமலேசர் வேணி முகிழ்நகைவெண்
டலைவைத்த வேனற் புனமொக்குங் கங்கையத் தண்புனத்தி
னிலைவைத்த மாதனை யொக்குங் கவணொக்கு நீள்பிறையே. (உ௬)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பிறையொழுக வொழுகுபுனற் கங்கை யாற்றின் பேரணையிற் றொடுத்துவிட்ட பெரும்பாம் பென்னக், கறையொழுகும் படவரவம் படரும் வேணிக் கண்ணுதலார் கமலையிற்பைங் கமலை போல்வீர்,

(உ௭) பாம்பு என்றது வெள்ளமடைத்தற்கிடும் வைக்கோற்புரியை.

நறையொழுகு மலர்ப்பொழில்குத் தகையாத் தந்நீர் நானிரண்டு மாவடுவு நாடிக் காணே, னிறையொழுகு மிளநீரு நிற்கக் காணே னீர்செய்த காரியமென் னிகழ்த்து வேனே. (உஎ)

நேரிசையாசிரியப்பா.

வேனிலா னுறுப்பின் மென்றசை யிறைச்சி
தீநாக் கறியத் திருக்கண் டிடந்தோய்
நான்மறை முனிவன் கான்முளை நிற்ப
விடற்கரும் பாசத்தொ டெற்பொறை நீங்க
வுயிருண் கூற்றுக்குத் திருவடி வைத்தோய்
கருங்கடல் வண்ணன் வெள்விடை யாகி
யடிக டாங்கிய வுதவிக் காங்கவன்
முழுவென்பு சுமந்த கழுமுட் படையோய்
தேவா சிரயன் றிருக்கா வணத்து
மேவா நின்ற விண்ணவர் குழாங்க
ளுருத்திர கணங்களென் றோடினர் வணங்கி
யருக்கிய முதல வகனமர்ந் தளிப்ப
வித்தலத் துற்றவ ரினித்தலத் துறுமெனக்
கைத்தலத் தேந்திய கனன்மழு வுறழு
மழுவுடைக் கைய ராகி விழுமிதின்
மாந்தர் யாவருங் காந்தியிற் பொலியும்
வரமிகு கமலைத் திருநகர்ப் பொலிந்தோ
யெழுதாக் கிளவியின் மொழியெனப் படுதலி
னின்பெருந் தன்மை நீயே நவிற்றுதன்
மன்பெரும் புலமைத் தன்றே யும்பரி
னின்னோ ரன்ன ரின்மையி னின்னிலை
கூறாய் நீயெனிற் றேறுந ரிலராற்
றன்னுடை யாற்றன் முன்னோர் முன்னர்த்
தற்புகழ் கிளவியுந் தகுமென் றம்ம

(உஎ) மலர் என்றது அவயவங்களை.

நிற்புகழ்ந் திசைத்தனை நீயே யாக
விருடீர் காட்சிப் பொருடுணிந் துணர்த்தா
னியங்கா மரபி னிதுவிது பொருளென
மயங்கக் கூறுதன் மாண்புடைத் தன்றே
யளவில் காட்சியை யையமின் றுணர்த்தலிற்
றளரா நிலைமைத் தென்ப வென்றலிற்
றன்னுடை மயக்கந் திசைமேல் வைத்துச்
சென்னெறி பிழைத்தோன் றிசைமயங் கிற்றென
மொழிகுவ தேய்ப்ப முறாக்குறை யின்மையிற்
பழமறை மயங்கிற் றென்றே முழுவது
மெய்யா திசைக்குநும் போலு
மையநின் றன்மை யளப்பரி தெமக்கே. (உஅ)

நேரிசைவெண்பா.

அள்ளற் கருஞ்சேற் றகன்பணைசூ ழாரூரர்
வெள்ளப் புனற்சடைமேல் வெண்டிங்கள் - புள்ளுருவாய்
நண்ணிலா தாரை நகைக்கு நகையையன்றோ
தண்ணிலா வென்னுஞ் சகம். (உக)

கட்டளைக்கலித்துறை.

தண்மல ரும்பொழிற் றென்கம லேசர்க்குச் சாத்துகின்ற
வொண்மலர் சொன்மலர்க் கொவ்வாது போலுமற் றோர்புலவன்
பண்மலர் சாத்திப் பணிகொண்ட வாபச்சை மால்சிவந்த
கண்மலர் சாத்தியுங் காண்பரி தானகழன்மலரே. (௩0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மல்லல்வளங் கனிந்தபுகழ்க் கமலேசர் திருவுருவும் வாம பாகத், தல்லமர்பைங் குழலுமையா டிருவுருவு மிருவருக்கு மமுத மான, கொல்லயில்வேற் பசுங்குழவி திருவுருவு மருவுருவாங் குணங்கண் மூன்று, நல்லுருவா தலினன்றே விவாகில காரணராய் நவில்கின் றுரோ. (௩க)

நேரிசையாசிரியப்பா.

நவமணி குயின்ற நாஞ்சில்சூழ் கிடக்கு
மூவளகங் கண்ணுற் றுவாக்கட லிஃதெனப்
பருகுவா னமைந்த கருவிமா மழையுஞ்
செங்கண்மால் களிறுஞ் சென்றன படிய
வெங்கண்வா ளுழவர் வேற்றுமை தெரியார்
வல்விலங் கிடுதலின் வல்விலங் கிதுவெனச்
செல்விலங் கிடவெதிர் சென்றனர் பற்றக்
காக மந்தரிற் கைநிமிர்த் தெழுந்து
பாகொடு முலாவிப் படர்தரு தோற்ற
நெடுவேல் வழுதி நிகளம் பூட்டிக்
கொடுபோ தந்த கொண்டலை நிகர்க்குஞ்
சீர்கெழு கமலைத் திருநகர் புரக்குங்
கார்திரண் டன்ன கறைமிடற் றண்ணல்
மூவொன் றெண்ணநின் முதற்றொழில் பூண்டு
மேவலிற் செய்துமென் றெண்ணு ராகி
யடங்கா வகந்தைக் கறிவெலாம் வழங்கி
யுடம்பு வேறு யுயிர்ப்பொறை சுமந்து
நாளு நாளு நேடினர் திரிந்துங்
காணு தொழிந்ததை நிற்க நாணு
தியாவரு மிறைஞ்ச விறுமாப் பெய்துபு
தேவொன் றிருக்குஞ் சிலர்பிறர் தவத்தினு
மிகப்பருந் தொண்டரொ டிகலிமற் றொன்றொடும்
பகைத்திறம் பூண்ட பாதகனே யெனினு
நின்றிருப் பாத நேர்வரக் கண்டு
பொன்றினு னேனும் புகழ்பெற் றிருத்தலி
னிமையா முக்கணெந் தாய்க்கு
நமனூர் செய்த நற்றவம் பெரிதே.

(௩௨)

நேரிசைவெண்பா.

நற்கரும்பு முக்கட் கரும்பென்னு நங்கைமீர்
விற்கரும்பன் கைக்கரும்போ வேம்பென்னுஞ் - சொற்கரும்பின்
வாமக் கரும்பு மனைக்கரும்பா மாரூரர்
காமக் கரும்புங் கரும்பு. (கூங)

கட்டளைக்கலித்துறை.

கரும்புற்ற செந்நெல் வயற்கம லேசர்கண் டார்க்குமச்சந்
தரும்புற்றி னிற்குடி கொண்டிருந் தாரது தானுமன்றி
விரும்புற்று மாசுணப் பூணணிந் தார்வெவ் விடமுமுண்டார்
சுரும்புற்ற கார்வரைத் தோகைபங் கான துணிவுகொண்டே. (கூச)

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொண்டலை யலைத்தபல தண்டலை யுடுத்தழகு கொண்டகம லைப்
பதியுளார்க், கண்டபி னெனக்கிதழி தந்தன ரெனப்பசலை கண்டுயிர்
தளிர்த்த மடவா, ளண்டரமு தொத்தவமு தந்தனையி ருட்கடுவி தன்ப
ருண் மிச்சில்கொ லெனு, வுண்டிடு முளத்திலவ ருண்குவரொன் மிச்
சிலென வுண்டதை மறுத்து மிழுமே. (கூரு)

நேரிசையாசிரியப்பா.

உமிழ்தேன் பிலிற்று மொள்ளிணர்க் கூந்த
லமிழ்துகு மழலை யம்மென் றீஞ்சொற்
சில்லரித் தடங்கண் மெல்லிய லொருத்தி
வரிசிலைத் தடக்கைக் குரிசின்முற் றொருவன்
ரு பொன்னெடு மார்பிற் பொலன்கல னிமைப்பத்
தன்னுருத் தோற்றந் தரிக்கல்ள் வெகுண்டு
மாலா யினனென வணங்கினை யிரத்தலிற்
றோலா மொழியை வாழிய பெரிதெனப்

---

(கூங) காமக்கு அரும்பும் கரும்பு - இன்பத்திற்கு அவாவிநிற்கும் கரும்புபோல்பவள்.

புலந்தன ளொழுதலுங் கலங்கினன் வெரீஇக்
கண்மலர் சிவப்ப மெய்பசப் பெய்தலிற்
றூஉ மாலாந் தன்மையள் கொல்லெனத்
தேறினன் றாழ்ந்து சிலம்படி திருத்திப்
பஞ்சியிற் பொலிந்த குஞ்சிய னிரப்பக்
கூடின ளல்லள் கூடா ளல்லள்
கைம்மிகு சீற்றமுங் காதலு மலைப்ப
வெள்ளப் புணர்ச்சியின் வேட்கையு ளடக்கி
யுள்ளப் புணர்ச்சிய ளூடின ணிற்பது
தாதவிழ் தெரியற் சாக்கியர் பெருமான்
காதலுட் கிடப்பக் கல்லெறிந் தற்றே
யித்திற மகளி ரிளைஞரோ டாடு
நித்தில மாட நீண்மறு குடுத்தமைம்
மாமுகி றவழு மணிமதிற் கமலைப்
பெம்மா னருமைப் பெருமா னாயினு
மூனுண் வாழ்க்கைக் கானவர் குரிசில்
செஞ்சிலை சுமந்த கருமுகி லேய்ப்ப
வுண்டமிழ் திரீ ருவந்தன ராடியும்
விருப்படிக் கொண்ட மிச்சிலூண் மிசைந்துஞ்
செருப்படிக் கடிகள் செம்மாந் திருந்துந்
தொல்புகழ் விசயன் வில்லடி பொறுத்து
மருந்தமிழ் வழுதி பிரம்படிக் குவந்து
நள்ளிருள் யாமத்து நாவலர் பெருமான்
றள்ளாக் காத றணித்தற் கம்ம
பரவை வாய்தலிற் பதமலர் சேப்ப
வொருகா லல்ல விருகா னடந்து
மெளியரி னெளிய ராயின
ரளியர் போலு மன்பர்க டமக்கே. (௩௪)

நேரிசைவெண்பா.

தம்மேனி வெண்பொடியாற் றண்ணளியா லாரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே - யம்மேனி
மானே யமுனையந்த வாணிநதி யுங்குமரன்
றானே குடைவேற் றனித்து. (௧௭)

கட்டளைக்கலித்துறை.

தன்னெருக்குஞ் செல்வக் கமலைப் பிரான்செஞ் சடாடவிமற்
றென்னெருக்கு மென்னி லெரியொக்குங் கொன்றை யெரியிலிட்ட
பொன்னெருக்கும் வண்டு கரியொக்குங் கங்கையப் பொன்செய்விக்கு
மின்னெருக்கும்பொன்செய் கிழக்கொல்லனெருக்குமவ்வெண்பிறையே.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வெண்ணிலவு கொழித்தெறிக்குஞ் செஞ்சடைமோ லியர்வீதி வி
டங்க ராரூர்க், கண்ணுதல்பொற் புயவரைசேர் தனவரைக ளிரண்ட
வற்றுட் கனக மேரு, வண்ணல்புய வரைக்குடைந்து குழைந்துதலை
வணங்கிடுமெம் மன்னை பார, வண்ணமுலைத் தடவரையவ் வரைகு
ழையப் பொருவதல்லால் வணங்கி டாதே. (௧௯)

நேரிசையாசிரியப்பா.

வண்டுகெட் டுண்ண நுண்டுளி பிலிற்றித்
தண்டே னுறைக்குந் தடமலர்ப் பொதும்பரின்
விழுக்குலை தெறிப்ப விட்புலத் தவர்க்குப்
பழுக்காய் தூக்கும் பச்சிளங் கமுகிற்
செடிபடு முல்லைக் கொடிபடர்ந் தேறித்
தலைவிரித் தென்னக் கிளைதொறும் பணைத்து
மறிந்துகீழ் விழுந்த நறுந்துணர்க் கொடிக
ளாற்றிசைப் புறத்து நான்றன மடிந்து
தாற்றிளங் கதலித் தண்டினிற் படரவப்
பைங்குலைக் கமுகிற் படர்சிறை விரித்தொரு

(௧௭) வாணிநதி - சோணைநதி. (௨0) உ. உறைத்தல் - துளித்தல்.

கண்செய் கூந்தற் களிமயி னடிப்ப
நெடுந்தாண் மந்திகள் குடங்கையிற் றூக்கி
முட்புறக் கனிக டாக்கக் கொட்புறும்
வானர மொன்று வருக்கைத் தீங்கனி
தானெடுத் தேந்துபு தலைமேற் கொண்டு
மந்திக டொடர மருண்டுமெற் றந்தப்
பைந்துணர்க் கொடியிற் படர்தரு தோற்றம்
வடஞ்சூழ்ந்து கிடந்த நெடும்பெருங் கம்பத்
தணங்களு ளொருத்தி யாடின ணிற்பப்
பெரும்பணை தாங்கி மருங்கினர் கொட்டக்
குடந்தலைக் கொண்டொரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனி னடக்கும் வண்ணம தேய்க்கும்
பூம்பணை மருதத் தீம்புனற் கமலைத்
திருநகர் புரக்குங் கருணையங் கடவு
ளென்பெனு மந்தரத் தாசைநாண் பிணித்து
வண்டுழாய் முகுந்தன் மதித்தனன் வருந்த
வருட்பெருங் கடலிற் றோன்றி விருப்பொடு
மிந்திரன் வேண்ட வும்பர்நாட் டெய்தி
யந்தமி றிருவொடு மரசவற் குதவி
யொருகோ லோச்சி யிருநிலம் புரப்பான்
றிசைதிசை யுருட்டுந் திகிரியன் சென்ற
முசுகுந் தனுக்கு முன்னின் றுங்குப்
பொன்னுல கிழிந்து புடவியிற் றோன்றி
மன்னுயிர்க் கின்னருள் வழங்குதும் யாமென
மேவர வழங்குமான் மன்ற
யாவிரு நமர்கா ளிறைஞ்சுமின் னீரோ. (௪௦)

திருவாரூர்நான்மணிமாலை
முற்றிற்று.

---

கணபதிதுணை.

வைத்தீசுரர்கோயில்

# முத்துக்குமாரசுவாமி

## பிள்ளைத்தமிழ்.

### விநாயகக்கடவுள்.

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான் பொருப்பிற் பிறந்து தவளப், பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர் போர்க்களிற் றைப் புணர்ந்து, — தென்பூத்த பாட்டளி துதைந்த பைங் கூந்தற் செழும்பிடி பயந் தளித்த, சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றினிரு செஞ்சரணை யஞ்ச லிப்பா, — மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள் வேழங் கடம்படு படா, வெம்முலைக் கோடுகொண் டுழுதுழு துழக்கமுகை விண்டுதெண் டேன் றுளிக்கும், — கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக் குரிசிலைப் பொரு சிலைக் கைக், குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென் கொழிதமிழ்க் கவி தழையவே.

---

### காப்புப்பருவம்.

#### திருமால்.

பூமேவு கற்பகப் பொங்கரிற் செங்கட் புலோமசை வளர்த்த கும்பப், புணர்முலைக் களியானை விளையாடு பன்னிரு பொருப்பனை விருப் பனைத்துங், — கோமேவு சாரற் குறச்சிறுமி மேல்வைத்த குழக

ளைக் கழகந் தொறுங், கொத்துமுத் தமிழ்மொய்த்த கந்தபுரி முத்துக் குமாரனைத் தனி புரக்க, — தேமேவு கடவுட் பொலங்கிரி திசைக்கரி கடிகிரிகிரி குலகிரி யொடுந், திரியத் திரித்துமத் தெறியத் தடங்கடற் றெண்டிரை முகட் டுதித்த, — பாமேவு மதுரம் பழுத்தமுத மொழுகும் பசுங்குதலை மழலை யஞ்சொற், பங்கயச் செல்வியிரு கொங்கைக் குவட்டுவளர் பச்சைப் பசுங் கொண்டலே. (௧)

வைத்தியநாதர்.

வேறு.

ஒருபுறத்துமர கதமிமைப்பவொளிர் மாமேருமற்றொரு மேருவைச் சாய்த்தென, வுலகளக்கநிமிர் வடபொருப்பையொரு தோளால்வளைத் தபி ரூகியைத் திக்கன, லுமிழுமுக்குடுமி யயிறிரித்துவரு வாய்வாண் மழுப்படை வீரனைப் பார்த்தனே, டெலுமற்றொழிலி னறவிளைத்து மெதி ரோடாதுடற்றுகி ராதனைக் கூக்குரல், — விரிகடற்புடவி முழுதுமைச்சமையு மோர்காளைகட்டுப்ர தாபனைக் கார்க்கடு, விடமெடுத் தரிய திருமிடற்றிலிடு காமாரியைக்கவு மாரியைப் போற்றிரு, விழிமுனிற்கும்வடி வழகுடைக்கடவுண் மாமோகினிக்கும ணாளனைச் சூக்குமம், வெளியினிற்பரம நடநவிற்றுதிறல் வேளூர்வயித்திய நாதனைப் போற்றுதும், — குரவுசெச்சையொடு நறவுயிர்ப்பவிரி தேனூறுவட் டெழு மார்பனைப் பேய்த்திரள், குரவையிட்டவுணர் தடிசுவைத்திட வொர் கூர்வேல்விடுத்தகு மாரனைப் பார்ப்பதி, குமரனைச்சமரி லுருமுகக்குளிறு காலாயுதக்கொடி யாளனைக் கோட்டிய,குறுநகைக்குமன முருகவெற்பவர்த மாதோடுமற்பொரு தோளனைத் தாக்கிய, — திரண்மருப்பினமர் பொருதுனிக்கடவுண் மால்யானையைப்புணர் காளையைச் சாற்றிய, செழுமறைப்பொருளி னுரைவிரித்துமெனும் வேதாமுடித்தலை மோதுங்கைக் காய்ப்பொடு, திருவடித்துணையின் முடிபதித் தவடு வாருதமெய்ப்புக ழாளியைப் பூட்டிய, சிறைவிடுத்தமரர் குறைமுடித்துதவு சேனாபதிப்பெரு மாடனைக் காக்கவே. (௨)

தையனாயகியம்மை.

வேறு.

குழையடர்ந்துவடி கணைதுரந்துசெறி குமிழ்மறிந்தவிழி நவ்வி யைக் கோட்டொடு, குவடெறிந்தமுத கலசம்வென்றதட முலைசுமந்தம லை வல்லியைச் சேற்றுளிர், குமுதம்விண்டசுவை யமுதமுண்டினிய கொழுநர்கொஞ்சுசிறு கிள்ளையைத் தாட்டுணைக், குறுகுதொண்டர்பி ழை யறமறந்துபிறர் குணமிகழ்ந்ததக வில்லியைச் சேட்செலு, — மெ ழுபெரும்புவன முழுதொருங்குதவு மிறைவியென்றுமறை கையெடுத் தார்க்கவு, மிடைநுடங்குமட நடையிளங்குமரி யெனவிருந்தகன கள் வியைப் பூத்தவென், னிநயபுண்டரிக மலரிலெந்தையொடு மினிதமர்ந் தவொரு செல்வியைப் பாற்றுகு, மிருவர்கண்கள்கது வரியசெஞ்சு டரினிடமருங்குடைய தையலைப் போற்றுது, — முழுதுணர்ந்துமு ணர் வரியதொன்மையொரு மொழியின்விண்டசிறு பிள்ளையைச் சூர்ப் பெயர், முதுபழம்பகையை யறவெறிந்தவுணர் முதறடிந்ததனி வில்லி யைப் பாட்டளி, முரலவிண்டதரு நிழறுழும்புகுடி புகவழங்குகொ டை வள்ளலைப் போற்றடி, முடியுமின்றிவெறு வெளிகடந்துமறை முடியினின்றுநிறை செல்வனைக் காத்தொறு, — மழலைவண்டுநட மல ர்குடைந்துபுது மதுவருந்திநறு மல்லிகைச் சேக்கையின், வடிபசுந்தமி ழி னிசைபயின்றபெடை யொடுதுயின்றினிய செவ்வழிப் பாட்டினை, வருவிபஞ்சிபயி றருமதங்கர்தெரு மரமுரன்றுநெடு வைகறைப் போ ய்ச்செழு, மலரிலஞ்சிதொறு முலவுகந்தபுரி மருவுகந்தனையெம் மை யனைக் காக்கவே. (ங)

கற்பகவிநாயகக்கடவுள்.

வேறு.

கடாமுமிழ் கைக்கதக் கிம்புரிக் கோட்டொரு, கராசல மிட்டமெ ய்க் கஞ்சுகிக் கேற்பவொர், — படாமணி மத்தகத் தந்தியைத் திர்த்தர்

(ங) தொழும்பு என்பது அர்விகுதி குறைந்துநின்றது. அரசு அமைச்சு என்பனபோல.

கள், பராவரு கற்பகக் கன்றினைப் போற்றுதும், — வடாதுபொருப் பினிற் றுன்றுபுத் தேட்கெதிர், மனோலய முற்றமெய்ப் பண்பினைக் காட்டிய, — சடானன னைத்தலைச் சங்கம்வைத் தாற்றிய, சடாயுபுரத்தருட் கந்தனைக் காக்கவே. (ச)

## பிரமதேவர்.

### வேறு.

பைங்காய்க் கமுகு செம்பழுக்காய்ப் பவள முதிர்ப்பக் கதிர்ச்செந்நெல், பணிமுத் துகுக்குஞ் சோணாட்டின் பரிசு பாடி ஞிமிறிரப்பக், — கொங்கார்த் திறைக்கு நறைக்காந்தள் குறிஞ்சி மலரோடணிந்தநறுங், குஞ்சிப் பெருமாள் வேதபுரி குமரப் பெருமா னைக்காக்க, — செங்காற் கருங்கட் பைந்தொடியார் சிற்றூய்ப் பாடிப் பெருங்குடியிற், றீம்பா றிருடிக் கட்டுண்டு திரியா வண்ணந் திருத்தாதைக், — கங்காப் படங்கப் பாறயிர்நெ யருந்தேன் கடலோ டிருந்துண்ண, வகிலம் படைத்துத் தனக்கேற வன்னம் படைத்த பெருமானே. (ரு)

## தேவேந்திரன்.

### வேறு.

காறுறு கற்பகக் காவுமூ வுலகுமக் காவென நிழற்று மொற்றைக், கவிகையுங் குணதிசைக் காவலும் பிறவுமுள காணியுங் காணியாக, — வாறுறு கோட்டிமய மலைவயிறு வாய்த்ததலை மகளுக்கு மணமகற்கு, மருமகனை யுரியதன் றிருமக ளெனப்பெற்ற மாலடிகளைத் துதிப்பாம், — பாறுறு செந்நெற் பசுங்கதிர் கறித்துமென் பைங்குவளை வாய் குதட்டும், பணைமருப் பெருமைமடு மடிமடை திறந்ததீம் பாலாறு பங்கயச்செந், — தேறுறு டன்கடவுள் வாறு றெனப்பெருகு சித்தாமிர் தஞ்சிவ பிரான், சீர்த்திப்ர தாபமிகர் தினகர புரித்தேவ தேவனைக் காக்க வென்றே. (சு)

## திருமகள்.

வேறு.

**மா**னிறக் கடவுடரு மறுமார்பி னறவிரி வனத்துழாய்க் காடுமூடி, மாயிருள் வழங்குதன் றிருமாளி கைக்கந்தண் மணிவிளக் கிட்டுமூட் டாட், — கானிறைக் குங்கமல வீட்டுக்கு நெட்டிதழ்க் கதவந் திறந் தளித்துங், காதன்மை காட்டுங் கவுத்துவத் துடன்வந்த கன்னிகை யை யஞ்ச லிப்பா, — மீனிறப் புணரியை விழுங்குங் கடற்றானை வெ ள்ளமொடு கள்ள மனமு, மெய்யுமிரு ளத்திரளு மவுணக் கருங்கங்குல் விடியக் கடுங் குரல்விடுந், — தீநிறக் குடுமிவெண் சேவலை யுயர்த்து வண் சிறைமயிற் பரி நடாத்துஞ், சேவகப் பெருமானை வேதபுரி வரு மிளஞ் சேயைப் புரக்க வென்றே. (எ)

## கலைமகள்.

**ஆ**றைபட்ட மறையவன் செந்நாப் படிந்துதன் சுவைநிறஞ் சிதை வுறாமே, தொன்மறை கனிந்தூறு மன்பனீ ரூறலிற் றூத்துகி னனைப் புறாமே, — நறைபட்ட வெண்டோட்டு நளினப் பொகுட்டேமது ந ன்னெஞ் செனக் குடிபுகு, ஞானப் பிராட்டியைச் சொற்கடற் றெள் ளமுதை நாத்தழும் பத்துதிப்பாஞ், — சிறைபட்ட தண்டுறைச் சித் தாமிர் தப்பெருந் தீர்த்தந் திளைத் தாடிய, செஞ்சுடர்க் கடவுளும் வெ ண்சுடர்க் கடவுளிற் றெள்ளமுத மய மாகலா, — றுறைபட்ட சுதை நிலவொ டிளவெயிலு மளவளா யுண்ணச் சகோரம் வெஃகு, மோங் கெயிற் பரிதிபுரி முருகனைச் சண்முகத் தொருவனைக் காக்க வெ ன்றே. (அ)

## சத்தமாதர்கள்.

வேறு.

**ப**யிறரு முதுமறை நூலைத் தெரித்தவள் பகைதொகு புரமெரி மூளச் சிரித்தவள், பனிவளை பகநெடு வேலைப் பணித்தவள் படுகடல் புகையெழ வார்விற் குனித்தவ, — ளெயிறுகொ டுழுதெழு பாரைப் பெயர்த்தவ ளெறிதரு குலிசம்வி டாமற் றரித்தவ, ளிடுபலி கொளு

மொர்க பாலக் கரத்தின ளெனுமிவ ரொழுவர்க டாளைப் பழிச்சுது ங், — கயறிரி சரவண வாவிக் கரைக்குரை கழலொடு பரிபுர மோ லிட் டிடக்கட, களிறெருடு களிறெதிர் மோதத் திசைத்திசை கடந டை யுளதக ரேறச் சமர்த்தனை, — மூயறரு கறையொடு தேய்வுற் றிளைத்தொரு முழுமதி குறைமதி யாகத் துகிற்கொடி, முகிறெரு தடமதில் வேதப் பதித்தனி முதல்வனை யறுமுக வேளைப் புரக்கவே.

முப்பத்துமுக்கோடிதேவர்கள்.

வேறு.

மூறுக்குடை நறைச்சத தளத்திரு மலர்த்தவிசு சொர்க்கத் தலத் தோடு சேடசயனத்தையு, முடித்தலை யடித்தலை பதித்தெதிர் துதித்த வர்த மக்குக் கொடுத்தானை மாதிரமொரொட்டையு, — மிறைப்பொழு தினிற்பொடி படுத்தருள் கொடுக்கவல சத்திக் கரத்தானை யூதியமெ னத்தனை, யிருப்பினு நடப்பினு நினைப்பவ ரிருக்கவெமர் சித்தத் திரு ப்பானை யாறிருபுயத்தனை, — வெறுப்பொடு விருப்பினை யறுத்தவ ருளத்துமலர் பத்மப்பதத்தானை வேதபுரியிற்சின, விடைக்கொடி வல த்தினு மடக்கொடி யிடத்துமுள முக்கட் டிருத்தாதை யார்பணிகுரு க்களை, — மறைக்கிழ வனைத்தலை புடைத்துல கனைத்தினையு மொக்க ப் படைத்தானை மூவிருமுகத்தனை, மருத்துவர் வசுக்கதி ருருத்திர ரொனப்பொலியு முப்பத்து முக்கோடி தேவர்கள்புரக்கவே. (கo)

காப்புப்பருவம் முற்றிற்று.

---

## செங்கீரைப்பருவம்.

---

இருக்கோ லிடும்பரி புரக்கோல முந்நுதலி லிட்டபொட் டுஞ்சுட் டியு, மெரிமணிப் பட்டமுங் கட்டுபொன் னரைஞாணு மிளஞாயி றுத யஞ் செயு, — முருக்கோல முஞ்சூழி யக்கொண்டை யும்முச்சி யுச்சி யும் வாளி முத்து, மொள்ளொளி ததும்புங் குதம்பையுங் கண்டுகண்

டோடரிக் கண் களிக்கு, — மருக்கோல நீலக் குழற்றையை லாட்கரு மருந்தா யிருந்த தெய்வ, மகக்கோல மேமுதிர் கிழக்கோல மாய்க்குற மடந்தைமு னடந்து மற்றத், — திருக்கோல முடனொரு மணக் கோல மானவன் செங்கீரை யாடி யருளே, செத்துப் பிறக்கின்ற தெய் வங்கண் மணவாள செங்கீரை யாடி யருளே. (க)

சும்பாதி காரிய மெனத்தமை நிமித்தமாக் கொண்டவகி லாண்டங் களின், குழுவுக்கு மற்றுத்த மிருவர்குறி யுந்தலைக் கூடினுந் தான் றனைக்கச், — சொம்பாதி யன்மைக் கனைத்துந்தன் மயமெனுஞ் சுருதிகரி யாவைத்து மச், சுருதிக்கு மெரிசுடர்ப் பரிதிக்கு மிரவிகுல தோன்ற ற்கு மிளவ லுக்குஞ், — சம்பாதி யொடுநற் சடாயுவுக் கும்பெருந் தவமுனிவ ரொழுவ ருக்குந், தண்ணளி சுரந்திட்ட தீராத வினைதீர்த்த தம்பிரான் றிருமே னியிற், — செம்பாதி யுங்கொண்ட தையனு யகி குமர செங்கீரை யாடி யருளே, செத்துப் பிறக்கின்ற தெய்வங்கண் மணவாள செங்கீரை யாடி யருளே. (உ)

கைக்கெட்டு மெட்டுக் களிற்றைப் பிடித்தக் களிற்றோடு முட்ட விட்டுக், ககனவட் டத்தினொடு பரிதிவட் டத்தைவளை திகிரிவட் டத்தி விட்டு, — முக்கட் டிருத்தாதை கோதண்ட மெனவைத்த வே தண்ட மாதண்ட மா, மூதண்ட கூடந்த்ரி கூடத் தொடுஞ்சாடி மூரிக் கடாசல மவன், — மெய்க்கிட்ட சட்டைக்கு நேரிட் டிடப்பட்ட மேகபட லத்து மொண்டு, மேல்கட லினைப்பெருங் கீழ்கடல் புகப் பெய்து விளையாட்டு வீரர்க ளொடுந், — திக்கெட்டும் விளையாடு சே னு பதிக்கடவுள் செங்கீரை யாடி யருளே, செத்துப் பிறக்கின்ற தெய் வங்கண் மணவாள செங்கீரை யாடி யருளே. (ங)

மைவிழிச் செங்கமல வல்லிக்கு நேமியான் மணிமார்பு வாணிக் கு நான், மறைமுதலி செந்நாத் தடந்தைய லாளொடும் வயித்தியக் க டவு ளார்க்கு, — மெய்விரிக் குந்தொண்ட ருள்ளத் தடத்தினொடு வே தச் சிரங் கடுப்ப, வேதபுரி கந்தபுரி புள்ளூ ரெனப்பொலியும் வேளூர

(உ) சொம் - உரிமை.

## தாலப்பருவம்.

பில்கும் பசுந்தேனசும்பிருந்த பின்று ழளகத் தரமகளிர், பேதைக் குறும்பு விளையாடும் பேரா யத்துச் சிறுமருங்குற், — கொல்குங் கொடிபோய் நுடங்கியிட வோங்கும் பளிக்கு நிலாமுற்றத், துயர்சூ ளிகையின் மரகதத்தி னொளிகால் வீசத் தெளிவிசும்பிற், — பல்குஞ் சுரபி தரங்கநெடும் பாகீ ரதியின் கரைகிளைத்த, பசும்புல் லெனச்செந் நாவலைக்கும் பைம்பொற் றலங்கள் பலகோடி, — மல்குஞ் செல்வக் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலேலோ. (க)

தொடுக்குந் தொடைவெண் டுகிற்கொடிக டொடுநீர்ப் பரவை முகம் புழுங்கத், தோன்றும் பரிதி மணித்திண்டேர் தூண்டுங் கலின வாம்பரியை, — முடுக்குஞ் சுடர்ப்பொற் றலத்திழைத்த முழுநீ லத்தி னெழுகொளியின், முழுகுங் கடவுண் மால்யானை முகிலிற் றோன்ற வகலிடநின், — றடுக்குங் களிறென் றரமகளி ரையுற் றிடத்தன் வெளிறுமுடம், பளறு படிந்த தெனக்கங்கை யாற்றுப் பசும்பொ னசும்புனன், — மடுக்குஞ் செல்வக் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலேலோ. (உ)

தீற்றுஞ் சுதைவெண் ணிலவெறிப்பத் திரண்மா மணிகள் வெயில் விரிக்குஞ், செம்பொற் றலத்துப் பேரமர்க்கட் சிறியார் நறிய வகிற்புகையிட், — டாற்றுங் குழற்காட் டினைப்புயலென் றாடு மயில்கண் டம்பவளத், தரும்பு நகையைச் சகோரப்புள் ளருந்த விரிந்த முழுநகைவிண், — டேற்று நிலவுக் கிந்துசிலை யொளிர்மா ளிகையுஞ் சூளிகையு, முருகிப் பெருகுங் கலுழிவெள்ள முவரோ டெரிக் கடற்புலவு, — மாற்றுங் கடவுட் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய்த்தமுழு மணியே தாலோ தாலேலோ. (௩)

கிளைக்குஞ் சகரர் தொட்டபெருங் கிடங்கென் றிடங்கர் மாவியங் குங், கீழ்நீ ரழுவக் குண்டகழி கெழூஉ புனற்றெண் டிரைமேய்ந்து,— திளைக்குங் கமஞ்சூ னெடும்புயலைச் சிறுகட் பெருங்கைப் பகடென் ஞேர்,செங்கட் களிறு பிளிறதிமிர் திகிரி கிரியென் றிவர்ந்துடல, — மி ளைக்கும் படிவிண் டொடநிவந்த வெழிற்பொற் புரிசை விண்டுபதத், தேறு மேணி பொற்றருவுக் கிடுவே லியுமா யெழுலகும்,— வளைக்குங் கடவுட் கந்தபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய் த்தமுழு மணியே தாலோ தாலேலோ. (சு)

சோலைப் புறமுப் புடைக்கனிக ளெக்கு முடத்தெங் கிமையவர்தந், தோன்றற் றிருமேயோ லக்கத்துத் தோகை மயிலி னடங்குயிற்று,— மே லைக் கருங்கொந் தளவளகத் திளமா தருக்கு முதிர்வேனி, லிளைப்பாற் றுதற்குத் தாற்றெருடுஞ்செவ் விளநீர் கொடுப்ப வீற்றுளைந்த,— காலப் புயலின் முகந்துடைக்குங் கமுகு பழுக்காய்ப் பவளமுடன், கதிர்முத் திட்டுச் செழும்பாளைக் கற்றைக் கவரி புடையிரட்டு,— மாலைப் பழ னப் பரிதிபுரி வாழ்வே தாலோ தாலேலோ, மலையாள் வயிறு வாய்த் தமுழு மணியே தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

மாலி மயத்து மடப்பிடி பெற்று வளர்த்த விளங்களிறே, மழவி டை யேறிரு மாமடி கட்டெனை வைத்த கவுத்துவமே,— மூல மெனக் குல நான்மறை யோலிடு முழுமுத லேமூவா, முக்கட் கனிகனி யுஞ்சு வை யேதனி முத்திக் கொருவித்தே,— காலை யிளங்கதி ருக்கெதிர் முதிருங் கதிர்செம் பவளமுடன், கதிர்முத் திட்டுவணங்கக் கன்னல் கொல் கமுகுகொ லெனவளருஞ்,— சாலி வயற்றமிழ் வேளூ ரடிகே ள் தாலோ தாலேலோ, சங்கத் தமிழின் றலைமைப் புலவா தாலோ தாலேலோ. (எ)

கட்டளைக்கலித்துறை.

வன்னஞ் செறிவளைக் கைச்சிற காற்றன் வயிற்றினுள்வைத்
தின்னஞ் சராசர வீர்ங்குஞ் சணைத்தினை தேர்ந்தருத்திப்
பொன்னம் பலத்துளொ ரானந்த வாரிபுக் காடும்பச்சை
யன்னம் பயந்தன கொல்லாம்பல் லாயிர வண்டமுமே. (கo)

நேரிசைவெண்பா.

அண்டந் திருமேனி யம்பலத்தார்க் கென்பதனை
கொண்டங் குணர்தல் குறைபாடே—கண்டளவில்
விண்ணம் பொலிந்ததொரு மின்கொடியே சொல்லாதோ
வண்ணம் பொலிந்திருந்த வா. (கக)

கட்டளைக்கலித்துறை.

வாய்ந்தது நின்மனை வாழ்க்கையென் றேதில்லை வாணரம்மே
காய்ந்தது வென்றிவிற் காமனை யேமுடிக் கங்கையைப்பின்
வேய்ந்தது பாவநின் மென்பதந் தாக்கவவ் வெண்மதியுந்
தேய்ந்தது பெண்மதி யென்படு மோவச் சிறுநுதற்கே. (கஉ)

நேரிசைவெண்பா.

சிறைசெய்த நாரீர்த் திருத்தில்லைத் தொல்லை
மறைசெய்த வீர்ந்தண் மழலைப்—பிறைசெய்த
வொண்ணுதலைக் கண்ணுதலோ டுள்ளத் திருத்தியின்ப
நண்ணுதலைக் கண்ணுதலே நன்று. (கங)

கட்டளைக்கலித்துறை.

நீங்காய் திருத்தில்லை நன்னுத லாய்நுத னூட்டமொத்தன்
செங்காவி யங்கண் சிவப்பதென் னேசெழுங் கங்கையைநின்
பங்காளர் நின்னைப் பணியுமப் போதுகைப் பற்றிமற்றென்
றங்கா யெழுந்திரொன் றுலவட் கேது தலையெடுப்பே. (கச)

(கக) உரை - ஆகமப்பிரமாணம்.

நேரிசைவெண்பா.

தலைவளைத்து நாணியெங்கை தண்ணளிக்கே யொல்குங்
குலைவளைத்த கற்பகப்பூங் கொம்பர்—கலைமறைக
ளான்குமறி யார்க்கிந்த ஞாலமெலா மீன்றளித்துந்
தான்குமரி யாகியிருந் தாள். (௧௫)

கட்டளைக்கலித்துறை.

தாளிற் பதித்த மதித்தழும் புக்குச் சரியெம்பிரான்
றோளிற் பதித்த வளைத்தழும் பேதொல்லைத் தில்லைப்பிரான்
வாளிற் பதித்த முலைத்தழும் பங்கவர் மார்பினிலந்
நாளிற் பதித்ததொன் றேயெம் பிராட்டி நடுவின்மையே. (௧௬)

நேரிசைவெண்பா.

இன்றளிர்க்கைக் கிள்ளைக்கே யிரங்குதலை கற்பிக்கும்
பொன்றளிர்த்த காமர்ப் பொலங்கொம்பு—மன்றவர்தம்
பாகத் திருந்தாள் பதுமத்தாள் பாவித்தா
ளாகத் திருந்தா ளலள். (௧௭)

கட்டளைக்கலித்துறை.

அல்லிக் கமலத் தணைத்தாளி லென்றுமென் னாவிக்குள்ளே
புல்லிக் கிடந்தன போலுங்கெட் டேன்புன் மலக்கிழங்கைக்
கல்லிப் புலக்களை கட்டருள் பூத்தாட் கனிந்தமலை
வல்லிக் கிலைகொன் மருங்கென் றிரங்கு மறைச்சிலம்பே. (௧௮)

நேரிசைவெண்பா.

மறைநாறுஞ் செவ்வாய் மடக்கிள்ளாய் பிள்ளைப்
பிறைநாறுஞ் சீறடியெம் பேதாய்—நறைநாறு
நாட்கமலஞ் சூடே னறுந்துழாய் தேடேனின்
றாட்கமலஞ் சூடத் தரின். (௧௯)

கட்டளைக்கலித்துறை.

திருவற நாணத் திருவறச் சாலை சமைத்தம்மைநீ
பொருவறு நல்லறம் பூண்டதென் னேமெங்கை பொற்புலியூர்
மருவறு மத்த முடித்தாக் கடைப்பலி தேர்ந்துவம்பே
தெருவற வோடித் திரிதரு மான்மற்றுன் சீர்த்திகொண்டே. (௨௦)

இரட்டைமணிமாலைமுற்றிற்று.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

## தருமபுரம்

# பண்டாரமும்மணிக்கோவை.

---

### காப்பு.

நேரிசைவெண்பா.

எண்டிசைக்குஞ் சூளா மணிமாசி லாமணிசீர்
கொண்டிசைக்கு மும்மணிக் கோவைக்குக் - கண்டிகைப்பொற்
பைங்காகத் தானனத்தான் பாற்கடலான் போற்றவருள்
கைங்காகத் தானனத்தான் காப்பு.

நேரிசையாசிரியப்பா.

பூமலி சததளப் பொன்னந் தாது
ஞாமர்பீ டிகையிற் கருணையொடு பொலிந்து
வீற்றுவீற் றமைந்த விரிதலைப் புவனம்
பாற்பட வகுத்த பழமறைக் கிழவனு
மதுக்குட முடைந்தாங் கிதழ்க்கடை திறந்து
பிரசமூற் றிருந்து முருகுகொப் பளிப்ப
வண்டுமூ சுழக்குந் தண்டுழா யலங்கற்
புரவுபூண் டகிலம் பொதுக்கடிந் தளிக்குங்
கருணைபூத் தலர்ந்த கமலக் கண்ணனு
மஞ்சிறைச் சுதைநிறச் செஞ்சூட் டன்னமுஞ்
செம்மயிர்க் கருங்கண் வெள்ளெயிற் றேனமு

---

காப்புச்செய்யுளில் அனத்தான் பாற்கடலான்போற்றக் கண்டிகைப் பொற்பைங்காகத்தான் அருள் எனக் கூட்டி முடிக்க.

மாகுபு தனித்தனி யலமர நிவந்த
மீகெழு பரஞ்சுடர் வெளிப்பட் டம்ம
வெம்மனோர் போல வினிதெழுந் தருளிக்
கைம்மா றற்ற கணக்கில்பே ரின்ப
மோனவாழ் வளிக்கு ஞான தேசிகன்
விரிகதிர் பரப்பு மரகதத் தகட்டிற்
சுடர்செய் செம்மணி யிடையிடை பதித்தெனப்
பாசடைப் பரப்பிற் பதும ராசிகள்
சேயிதழ் விரிக்குஞ் செழுமல ரோடையு
மண்டகோ ளகையு மெண்டிசா முகமுங்
கோட்டுடைத் தடக்கை நீட்டியளந் தென்னச்
சேட்பட நிவந்த செண்பகா டவியுங்
கால்கிளர் விசும்பிற் கற்பகா டவிக்கு
வேலியிட் டன்ன வியன்மணிப் புரிசையு
மருங்குசூழ் கிடந்த வண்டமிழ்க் கமலைப்
பெரும்பதி புரக்கும் பேரருட் குரிசில்
நான்மறை நவின்ற நற்பொரு ளிவையென
மோனவா சகத்தான் முப்பொரு ளவிற்றுபு
நன்னலம் புரியு ஞானப்பிர காச
னின்னருள் பழுத்த செந்நெறிச் செல்வன்
றிருக்கிளர் ஞானத் திருந்திழைக் கணியா
மருட்பெருஞ் சைவத் தருங்கல னொப்ப
ஞசற விளங்கு மாசி லாமணி
யமன்மா சறுத்த கவுணியர் பெருந்தகை
பிள்ளைமை விடுத்த தள்ளரும் பருவத்
துள்ளதன் படிவ முணர்த்துவ கடுப்ப
மாநிலத் தமர்ந்த ஞானசம் பந்தன்
பொன்னடிக் கமலஞ் சென்னிவைத் திறைஞ்சுது
யிருகால் சுமந்த வொருபெருஞ் சேவகத்
தைம்புலக் களிறுந் தம்புலத் திழப்ப

ஊனுடைப் பிறவிக் கானகத் துழலா
தேனைய முத்திநா டெய்தவோர்
ஞான வாரண நல்குதி யெனவே. (௧)

நேரிசைவெண்பா.

என்வடிவ நின்வடிவாக் கொண்டா யெளியேற்குன்
றன்வடிவ நல்கத் தகுங்கண்டாய் - மன்வடிவால்
வெம்பந்த நீக்கும் விமலநீ மெய்ஞ்ஞான
சம்பந்த னென்பதனாற் றான். (௨)

கட்டளைக்கலித்துறை.

தானின் றெனைத்தனக் குள்ளே யொளிக்குமென் றன்மைநிற்க
யானின்ற போதெனைக் குள்ளே யொளித்திடு மிப்பரிசே
வானின்ற சின்மய மாமாசி லாமணி மன்னுந்தன்மை
நானின்று கண்டனன் காணே னிதற்கொத்த நன்மணியே. (௩)

நேரிசையாசிரியப்பா.

மணிவடஞ் சுமந்த புணர்முலைக் கொதுங்கி
யீயா மாக்க டமொழி கவர்ந்த
சிற்றிடை படைத்த பேரமர்க் கண்ணியர்
கனைகொண் டிரங்குங் கிளைசெய்நீர்ப் பட்டத்து
மைவிழி சேப்பச் செவ்வாய் விளர்ப்பக்
கருங்குழல் சரிய வெள்வளை கலிப்பச்
சீராட் டயரு நீராட் டயர்ந்து
புலவியிற் றீர்ந்து கலவியிற் றிளைக்கு
நீரர மகளிர் பொழில் காட்ட
மருதம்வீற் றிருந்து பெருவளஞ் சுரக்குந்
தருமையம் பதிவாழ் சற்குரு ராய
வொள்ளொளி பரப்பும் வெள்ளிவே தண்டத்
தொருபாற் பொலிந்த மரகதங் கவினச்
சுடர்விடு செங்கதிர்க் குடவுண்மா மணிக்கு

விளங்கெழின் மிடற்றோர் களங்கமுண் டென்பவக்
காசுலா மலினங் கரந்தகா ரணத்தான்
மாசிலா மணியென வண்பெயர் நிறீஇ
மேன்மையோ டமர்ந்த ஞானசம் பந்த
வீண்டுனைத் தமியனேன் வேண்டுவ தியாதெனி
னந்நிய மென்று மநநிய மென்று
மிந்நிலை யிரண்டு மெய்திற் றென்றும்
பல்வே றுரைக்குநர் சொல்வழிப் படாது
திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தத்
திறவா நிலைமைபெற் றின்பமார்ந் திருக்கும்
பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே
யங்கது புரிதற் கரிதெனி னிங்கொரு
சனனம்யான் வேண்டுவ தினிதரு ளெனக்கே

அதுவே

ஐந்தரு நிழற்கீ ழரசுவீற் றிருக்கு
மிந்திர னாகிவாழ்ந் திருப்பதோ வன்றே
மலரோ னாகி மன்னுயிர்த் தொகுதி
பலர்புகழ்ந் திசைப்பப் படைப்பதோ வன்றே
யடலரா வணையி லறிதுயி லமர்ந்த
கடவுளா யுலகங் காப்பதோ வன்றே

அவைதாம்

ஆரா வின்பமென் றரும்பெயர் பெறினும்
வாரா வல்வினை வருவிக் கும்மே
யன்னவை யொழியமற் றென்னைகொல் பிறவெனின்
விழுத்தகு கல்வியு மொழுக்கமு மிலராய்ப்
பழிப்புள ராயினு மாக வழுத்திநின்
பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த
பரிகல மாந்திப் பவக்கட லுழக்கும்

வரனுடை ஞமலி யாகிநின்
னருளையு மயரா தவதரிப் பதுவே. (௪)

நேரிசைவெண்பா.

அவமாசி லாமனத்தார்க் காருயிரா ஞானேற்
பவமாசி லாமணிச்சம் பந்தா - தவமார்
தநியருளத் தானேநின் சந்நிதிப்பட் டேற்குக்
கதியருளத் தானே கடன். (௫)

கட்டளைக்கலித்துறை.

கடல்பெற்ற தோர்மணி சிந்தித்த நல்குங் கருத்துக்கெட்டா
பிடல்பெற்ற பேரின்ப நல்கிய வாவருள் வேலைபெற்றென்
னுடல்பெற்ற கண்மணிக் குண்மணி யாகியொண் கூடல்வைகு
மடல்பெற்ற ஞானச் சுடர்மாசி லாமணி யானதொன்றே. (௬)

நிலைமண்டிலவாசிரியப்பா.

ஒன்றே தன்மை யுனக்குமற் றெமக்கு
மன்றென மொழியினு மாமெனப் படுமே
யங்ஙனங் கூறிய தெங்ஙனம் பிறவெனி
னெஞ்ஞான் றுளையுள மஞ்ஞான் றியாமே
யழியா நிலைமையை யனையம் யாமே
வியாபக நினக்குள தியாமுமஃ துளமே
யறிவெனப் பெயரிய பெயரினை யப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே
யிச்சா ஞானக் கிரியையென் றிசைக்குஞ்
சத்திக ளுளையுள தத்திற மெமக்கே
யிந்நிலை முழுவதூஉ மெமக்குமுண் டாகலி
னந்நிய மலநினக் கநநியம் யாமே
தருமையுங் கமலையும் விரிதமிழ்க் கூடலுந்
திருநக ராக வரசுவீற் றிருக்கு
மாசி லாமணித் தேசிக ராய

சம்பந் தப்பெயர் தரித்தமை யாலெமைச்
சம்பந் தஞ்செயத் தகுந்தகு நினக்கே
கருவிகட் கிறைமை காட்டுபு நிற்றலிற்
புருட நாமமும் புனைந்தன மாயினு
மத்தநிற் குறிப்பிற் சத்திகள் யாமே
புருடனைச் சத்தியிற் புணர்த்தனை யன்னதற்
கொருகாட் டென்ப புருடோத் தமனே
யுன்னுட னெம்மையு மொப்பனைப் படுத்து
முன்னர்க் கூறிய முறைமையிற் சிற்சில
முழுவது மொவ்வா தொழியினு மொழிக
வுயர்ந்தோன் றலைவ னுத்தோட் புணரினு
மிழிந்தோட் புணரினு மிழிபெனப் படாதே
யாதலின் யாமுனைக் காதலித் தனமாற்
காதலி னெமையருட் கைப்பிடித் தருளி
யொருவரு முணராப் பரம வீட்டி
லிருளறை திறந்த பெருவெளி மண்டபத்
துயர்நா தாந்தத் திருமல ரமளியிற்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
வுள்ளொலி நாதப் புள்ளொலி முழங்க
ஞானவா ரமுத பானம தருந்திக்
கருவிகள் கழன்று பரவச மாகிப்
பரமா னந்தப் பரவையுட் படிந்து
பேரா வியற்கை பெற்றினி திருப்ப
வாரா வின்ப மளித்தரு ளெமக்கே. (எ)

நேரிசைவெண்பா.

எம்மா ருயிரா மெழின்மாசி லாமணியை
யம்மா பெறுதற் கரிதென்றே - சும்மா
விருந்தாரோ பெற்றார்மற் றெவ்வுலகில் யாரோ
வருந்தாது பெற்றார் மணி. (அ)

### கட்டளைக்கலித்துறை.

மணிகொண் டவர்தம் பொருளாவ தன்றியம் மாமணியா, மணி கொண் டவனைக்கொண் டாள்வது டேயருட் கூடல்வைகுங், கணிகொண்ட கொன்றைத் தொடைமாசி லாமணி கண்டவுடன், பணிகொண்டு தொண்டுங்கொண் டாளுங்கொள் வோமென்று பார்க்குமுன்னே. (௬)

### நிலைமண்டிலவாசிரியப்பா.

முற்படு மாயை முதற்கனை நாட்டிற்
பற்பல புவனப் பகுதி பற்றி
யீரிரு கண்ணுற் றெழுதாம் வகுத்த
வாறே ழிரட்டி நாலு யிரத்த
செயற்படு செய்களி னுயிர்ப்பயி ரேற்றி
யூழெனப் பட்ட தாழ்புனற் படுகரிற்
றெய்விக முதலாச் செப்புமும் மதகு
மொவ்வொரு மதகா வுடனுடன் றிறந்து
தாக மென்னுந் தனிப்பெருங் காலிற்
போக மென்னும் புதுப்புனல் கொணர்ந்து
பாயுமைம் பொறியாம் வாய்மடை திறந்து
பருவம் பார்த்து வரன்முறை தேக்கலு
மிருந்துட னிருமெனுமிரண் டேற்றிற்
புதுப்புனல் பெருகிப் புறம்பலைத் தோட
வார்புன லதனை மந்திர முதலா
வோரறு வகைப்படு மேரிக ணிரப்பி
வினைவன விளைய விளைந்தன வறுத்தாங்

---

(௬) க. முற்படுமாயை — சுத்தமாயை. கனைதல் - சொல்லல். ௩. ஈரிரு கண் - அண்டசமுதலிய நால்வகைத்தோற்றம். எ. தெய்விகமுதலியமூன்று - தெய்விகம் பௌதிகம் ஆன்மிகம். இவற்றுள் தெய்விகம் தேவர்களால்வருவது; பௌதிகம் - பஞ்சபூதங்களால்வருவது; ஆன்மிகம் - தன்னாலும் பிறவான்மாக்களாலும் வருவது.

கொருகளஞ் செய்யு முழவ னாகி
மாநிலம் புரக்கு மாசி லாமணி
ஞானசம் பந்த ஞான தேசிக
நல்லருட் டிறத்தா னம்பி நீயே
பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண் டுய்கெனக்
குடிலை யென்னுந் தடவய னாப்ப
ணருள்வித் திட்டுக் கருணைநீர்ப் பாய்ச்சி
வேத மென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே

அவற்றுள்

இலைகொண் டுவந்தனர் பலரோ யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரோ தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரோ
யவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
வோரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
வாரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலை பெறுதற் கன்னிய னாயினு
மன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
விம்புன லமுத மார்ந்தன னதனால்
வெம்பெனக் கொண்டன்ன் விண்ணவ ரமுதே. (௧0)

நேரிசைவெண்பா.

விண்புரக்குஞ் சிந்தா மணியென்கோ மெய்ச்சுடரான்
மண்புரக்குஞ் சூளா மணியென்கோ - பண்பாற்
றிருமா முனிவர் சிகாமணியென் கோசீர்
தருமாசி லாமணியைத் தான். (௧௧)

## கட்டளைக்கலித்துறை.

தானவ னாகிய தன்மைபெற் றானடி தாழப்பெற்றாற்
றானவ னாகிய தன்மைபெற் றுய்வனத் தன்மையின்றித்
தானவ னாகிய தன்மைபெற் றேற்கரு டாழ்சடிலத்
தானவ னாகும் பெருமாசி லாமணிச் சம்பந்தனே. (௧௨)

## நேரிசையாசிரியப்பா.

பந்தனை தவிராச் சிந்தனை நிகர்ப்பப்
பாயிருள் பரந்த மாயிரும் பொழிலிற்
கொளற்குரி மாந்தர்க் களித்தல் செய்யா
தரும்பூண் சுமந்த வறிவி லாளரிற்
சுரும்பூண் வெறுத்த துதைமலர் வேங்கை
தன்மருங் குறீஇப் பொன்மலர் பிலிற்ற
விலையறப் பூத்த சுதைமலர்ப் புன்னையின்
மெய்ப்புல னைக்கார் கட்புலன் கடுப்ப
விமையா வறுங்கண் ணிமைத்தலைபங் கூந்தற்
பசுந்தார் மஞ்ஞை யசைந்தமர் தோற்றம்
பொற்றுணர் பொதுளிய கற்பகப் பொதும்பர்
பொறிவண் டுண்ணு நறுமலர் நாற்றப்
பாடல் சான்ற கோடுபல தாங்கிக்
கவளங் கொள்ளாத் தவளமால் களிற்றிற்
கண்பல படைத்த கார்முகில் வண்ணத்
திந்திரன் பொலியு மெழினலங் காட்டுந்
தண்பணை யுடுத்த தமிழ்ப்பெருங் கூடல்
வண்பதி புரக்கு மாசி லாமணி
தலைப்படு கலைமதி தாங்கா தாங்கத்
தலைப்படு கலைமதி தாங்கி நிலைப்படு
மானிட னாய வடிவுகொண் டருளாது
மானிட னாய வடிவுகொண் டருளி

(௧௩) ௰. தார் - கழுத்திலுள்ள வரை.

யெற்பணி பூணு தெற்பணி பூண்டு
பாரிடஞ் சூழாது பாரிடஞ் சூழ்தர
வாரூ ரமர்ந்த ஞானசம் பந்த
னிற்புகழ்ந் திறைஞ்சுங் கற்பின் மாக்கள்
விருப்பு வெறுப்பற் றிருப்ப ரொன்ப
பொருட்டணி புணர்ந்த புலமை யோரே
யிகபர மிரண்டினு மெதிர்நிறை கோளினுந்
தொகுதியுள் வேற்றுமைத் தொகைப்பொருள் கோளினு
முன்னவர் மொழிந்ததற் கன்னிய மாகலின்
விருப்பு வெறுப்புள வாய
கருத்தின ராகவுங் கண்டனம் யாமே. (க௬)

நேரிசைவெண்பா.

கண்ணிற் கணியாங் கதிர்மாசி லாமணியைப்
பண்ணிற் கணியாப் பகர்வரா - லெண்ணுங்காற்
பன்னூலிற் கோக்கப் படுமணியன் றிம்மணிமற்
றிந்நூலிற் கோக்குமணி யென்று. (க௭)

கட்டளைக்கலித்துறை.

என்வச மாகநில் லாதநெஞ் சாமிரும் பைக்குழைத்துத்
தன்வச மாக்கொண் டிழுக்கின்ற தாற்றொண்டர் தம்மையருண்
மன்வச மாகச் செயுமாசி லாமணி மாமணிக்குப்
பொன்வச மாகச்செய் காந்தமென் றேசொலப் போந்ததுவே. ()

நேரிசையாசிரியப்பா.

போந்தையங் கண்ணி வேந்தலிற் பொறித்த
மன்பெருங் கிரியின் மென்கரும் பெழுதித்
தேசுலாம் பசும்பொற் சிகரமந் தரத்தின்
வாசுகி பிணித்தென மணிக்கச் சிறுக்கிக்
கடாம்பொழி கரடக் களிநல் லியானை
படாம்புனைந் தென்னப் பைந்துகில் போர்த்துப்
பிதிர்சுணங் கலர்ந்த கதிர்முலை மடந்தையர்

விட்புலத் தவர்க்குங் கட்புலன் கதுவாச்
சூளிகை வகுத்த மாளிகை வைப்பிற்
சுவல்கைத் தாங்குபு மதியணைந்து பார்க்கச்
சேணிகந் தோங்கும் யாணர்செய் குன்றத்
தாடகத் தியன்ற கூடகக் கரந்தான்
மாடகத் திவவியாழ் மருமமீ தணைத்து
மூவகை நிலைபத் தேழுசுர நிரீஇக்
கொவ்வைவாய் திறந்து குயிலென மிழற்றுபு
மென்னரம் புகிரான் விரன்முறை நடவிக்
கின்னரம் வியக்குங் கீதம் பாட
நகைநில வெறிக்கு முகமதி காணூஉச்
சந்திர காந்தத்திற் சமைத்தசெய் குன்ற
மைந்தர்போன் றுருகி மழைக்கணீர் சொரியப்
பல்வளஞ் சுரக்கும் பைந்தமிழ்க் கமலை
நல்வளம் பதிவாழ் ஞானசம் பந்த
பாசமா மிருட்கோர் படர்மணி விளக்கெனு
மாசி லாமணித் தேசிக ராய
சாற்றுவன் கேண்மதி மாற்றமொன் றளதே
மெய்ம்மயிர் சிலிர்ப்பக் கண்ணீர் வார
மொழிதடு மாற வுழுவலன் பலைப்பச்
சத்திநி பாதத் தன்மைவந் தடைந்தோர்க்
கப்பொருள் புரிதற் கதுபொழு தாகலின்
மெய்ப்பொரு ளுணர்த்துதல் வியப்பெனப் படாதே
சொற்றமிழ் விரகன் றனைக்கண் சாத்த
முற்றுணர் கேள்வியர் பற்பல ராயினுங்
கைசொலக் கேட்குங் கட்செவி மூங்கைக்
குய்வகை புணர்த்த தொருவியப் பாகலி
னன்னது கடிப்பனின் சந்நிதி விசேடத்

(௧௬) ௧௪. மூவகைநிலையம் - எடுத்தல் படுத்தல் நலிதலென்னும் ஓசைகளையெழுப்புதற்குரிய மூவகைத்தானம்.

தின்னருள் பெறுதவர் யாவரு மிலனென
வியப்புள தாகவு நயப்பதொன் றுளதே
யனையதிங் கென்னென வினவுதி யாலெனிற்
கதலித் தண்டிற் பொதிதழல் கொளீஇப்
பற்று திருப்பினும் பைப்பைய மூட்டுபு
மற்றொரு சூழ்ச்சியிற் பற்றுவித் தாலென
வொருசிறி தெனினும் பருவமின் றாயினும்
பலவிரு டோந்தருள் பதியத்
தவமில் பேதையேன் றனக்கருள் வதுவே. (௧௬)

நேரிசைவெண்பா.

தன்னே ரிலாஞான சம்பந்தன் றாளடைந்தார்க்
கென்னே யிருள்வெளியா மென்பரா - லன்றே
யருளாத போது வெளியா யிருந்தவெல்லா
மிருளா யிருந்த வெனக்கு. (௧௭)

கட்டளைக்கலித்துறை.

என்செய லாவொன்றும் யான்செய்த தில்லை யெனக்கவமே
புன்செய லாம்வினைப் போகமுண் டாவதென் போதமில்லேன்
றன்செய லாயவெல் லாமாசி லாமணிச் சம்பந்தநின்
னன்செய லாயினு மென்செய லாச்செய்யு நானெனபதே. (௧௮)

நேரிசையாசிரியப்பா.

நான்மறைக் கிழவ நற்றவ முதல்வ
நான்முறை பயின்ற நுண்மைசா லறிஞ
சொற்சுவை பழுத்த தொகைத்தமிழ்க் கவிஞ
கற்றவர் வியக்குங் காவியப் புலவ
செவிதொறுஞ் செவிதொறுந் தெள்ளமு தூட்டுபு
கவிஞர்வயி னிரப்புங் கல்விப்பிர சங்க
வெள்ளிடைத் தோன்று முள்ளத் துணர்த்தவுஞ்
சேய்நிலை நின்று திருக்கண் சாத்தவுஞ்

சாயா மும்மலச் சகலரோ மூய்ய
வெம்முருக் கொண்டு மெம்மொடு பயின்று
மும்மலக் கிழங்கை முதலொடு மகழ்ந்து
சிற்பர முணர்த்துஞ் சற்குரு ராய
பளிங்கினிற் குயின்ற பனிநிலா முற்றத்து
விளங்கிழை மடந்தையர் விளையாட் டயர்தரக்
கொங்குவார் குழலுங் குவளைவான் விழியும்
பங்கய முகமும் பத்திபாய்ந் தொளிர்தலிற்
சைவலம் படர்ந்து தடங்கய லுகளுஞ்
செய்யபூங் கமலச் செழுமல ரோடையென்
றுடவர் சிற்சிலர் நாடினர் காணூஉ
வம்மின் வம்மின் மடந்தையர் நீவிர்மற்
றம்மெல் லோதி யரம்பைய ராதலி
னீர்நிலை நிற்றிரா ணீரவர் தங்களுள்
யார்கொல் யார்கொ லிசைமி னிசைமினென்
றிரும்பூ தெய்தி யிரந்தன ரிசைப்ப
மறுமொழி கொடாது குறுநகை முகிழ்த்தாங்
கையுற வகற்று மணிமதிற் கமலை
நன்னகர் புரக்கு ஞான தேசிக
வாசிலா வண்புக ழணிநிலா வெறிக்கு
மாசி லாமணி ஞானசம் பந்த
வென்பொருட் டாயினு மென்பொருட் டன்றிது
நின்பொருட் டொருபொரு ணிகழ்த்துவன் கேண்மோ
வறிஞ ரேம்பிய செறுவொன் றேய்ப்பப்
பருவ நோக்காப் பவந்தொறும் பவந்தொறு
மிருவினைப் போகமு மெற்கொண் டார்த்துபு
மற்றென் னுருக்கொடு முற்றனை யாலினித்
தாகமின் றாகலிற் பாகமின் றெனக்கென
வருளா தொழியினும் பரிபவ நினக்கே
சேய்முகம் பாராள் சினந்தன ளெனினும்

போயெடுத் தாற்றுமத் தாய்மீட் டன்றே
யாதலி னெனைப்போ லடிக்கடித் தோன்றலை
யீதியா லின்னரு ளின்னண மெமக்கே
சமையந் தீர்ந்த தனிப்பொரு டெரித்தற்
கமையந் தேர்கலை யருளுதி யாயினு
மெண்ணீ ராண்டைக் கிலக்கமிட் டிருந்த
வண்ணலங் குமாரற் காருயிர் தோற்றக்
கடாவிடை யூர்தியாற் கண்டு
மடாதென மொழிகுந ரார்கொன்மற் றனையே. (௧௯)

நேரிசைவெண்பா.

ஆரூரோ யூர்பே ரருண்மாசி லாமணியென்
இருளூர்பே ரில்லாற் குழைத்தேற்குப் - பாரோறப்
பொய்யென்றான் மெய்யென்றான் பொய்யான பொய்யுடலை
மெய்யென்றான் பொய்யென்றா னீண்டு. (௨௰)

கட்டளைக்கலித்துறை.

மீளா மணிமந் திரமருந் தாற்சென்ம வெவ்விடநோய்
வாளா மணியொன் றினான்மீண்ட வாவம் மணிபிறர்கொண்
டாளா மணியெமை யாட்கொள்சிந் தாமணி யைத்தவித்தோர்
சூளா மணிமெய்ச் சுடர்மாசி லாமணி சூழ்ந்திடினே. (௨௧)

நேரிசையாசிரியப்பா.

சூழ்போய் நிவந்த வாழ்கட லுலகத்
தின்னருட் டிறத்தா லிடைமரு தமர்ந்த
பொன்னவிர் கடுக்கைப் புரிசடைப் புங்கவ
னமையாக் காத லிமையவல் லிக்கும்
வழிபடன் முறைமை விழுமிதி னுணர்த்தத்
தானே தன்னைப் பூசனை புரிகென
வழுத்தியோ டெம்மைநம் முருத்திர கணங்க

(௧௯) ௪௯. கடாவிடை - நிகரில்லாதவிடை; கடுத்தல் - நிகர்த்தல்.

டெரித்துமற் றிவ்வா றருச்சனை புரிதொன்
றங்கயற் கண்ணி பங்கில்வீற் றிருந்த
செக்கர் வார்சடைச் சொக்கநா யகனை
யீரெண் டிறத்துப சாரமும் வாய்ப்பப்
பூசனை புரியுந் தேசிக ராய
மழைக்குலந் தழைப்பத் தழைத்தநீள் பலவின்
வேரிடைப் பழுத்துப் பாரினுட் கிடந்து
முட்புறக் கனிகள் விட்புறக் கமழ்தலுஞ்
சிறுகண் மந்தி குறிவழிச் சென்று
கீண்டுபொற் சுளைபல தோண்டுவ தம்ம
முற்பக லொருவர் பொற்குட நிரம்பப்
புதைத்தனர் வைத்த நிதிக்குழா மனைத்தும்
வஞ்சகம் பழகு மஞ்சனக் கள்வர்
கண்டுகண் டெடுக்குங் காட்சித் தன்ன
தண்டலை வளைஇத் தடமதி லுடுத்த
தேசுலாங் கமலைத் திருநகர் புரக்கு
மாசி லாமணி ஞானசம் பந்த
வாக்கு மனனும் யாக்கையு மொன்றாய்ச்
சொற்றரு கரண மற்றிவை மூன்று
நின்புகழ் நவிற்றியு நினைத்துநின் றனைத்தா
ளன்புட னிறைஞ்சியு மின்பமுற் றனவா
லவகர ணங்களே யல்லமற் றம்ம
சிவகர ணங்களாய்த் திரிந்தன வன்றே

அதனால்

திரிகர ணங்களொன் றுறைசெயு மப்பெய
ரொருபொருட் கிளவியெல் லோர்க்கு
மிருபொருட் கிளவியா யிருந்ததின் றெனக்கே. (௨௨)

---

(௨௨) ௪௫. விட்பு - வெடிப்பு.

நேரிசைவெண்பா.

ஏற்கமலஞ் செய்யு மெழின்மாசி லாமணிதன் றாட்
பொற்கமலஞ் சென்னி பொலிவித்தே - னற்கமலை
யூரிற் குறுகினே னோர்மாத் திரையளவென்
பேரிற் குறுகினேன் பின். (௨௩)

கட்டளைக்கலித்துறை.

பின்னம் படைத்த சமய விரோதப் பிணக்கறுத்தோர்
சின்னம் படைத்த முனிமாசி லாமணிச் சித்தரியா
மின்னம் படைத்தவ ரோதுபெ றாரமு திங்கெமக்கென்
றன்னம் படைத்தவர் பெற்றார் புவன மடங்கலுமே. (௨௪)

நேரிசையாசிரியப்பா.

அடங்கா வைம்புல னடங்கினர்க் கம்ம
வொடுங்கா வைம்புல லுளத்தினு முளவே
அவைதாம்
செவிப்புல னறியா வகத்தொலி யொன்றே
மெய்ப்புல னறியாத் தட்பமற் றொன்றே
கட்புல னறியாக் கதிரொளி யொன்றே
நாச்சுவை யறியா நறுஞ்சுவை யொன்றே
மூக்குயிர்த் தறியா முருகுமற் றொன்றே
பேரா வின்பமிப் பெற்றியிற் றிளைக்கு
மாரா வின்பமொன் றூர்ந்தனம் யாமே
அதுவே
கரையெறிந் தார்க்கும் பொருபுனற் படுகரிற்
பணிலமீன் றளித்த மணிநிலாப் போர்ப்பத்
தருணவெண் ணிலவினந் தன்னகத் தடங்க
வருண முண்டக மகவிதழ் முகிழ்ப்பது
தெண்டிரை யுடுத்த நீம்புனன் மடந்தை

(௨௩) ஓர்மாத்திரைபேரிற்குறுகல் - சிவனென்பது சிவனென்றாதல்.

வெண்டுகிற் படாஅம் விரித்தனள் போர்த்து
வுள்ளவாய்க் கமல மலர்க்கையால் வளைத்துப்
பிள்ளைவெள் ளெகினம் பிடிப்பது கடுக்குங்
காசுலாம் பசும்பொற் கடிமதிற் கமலை
மாசி லாமணி ஞானசம் பந்தனென்
றருந்தவர் துதிப்பவோர் பெரும்பெயர் நிறீஇப்
பரமா னந்தப் பரவையுட் டோன்றிய
வின்பவா ரமுதமவ் வமுத
மன்பருக் கெளிதெளி தரிதுவிண் ணவர்க்கே. (௨௫)

நேரிசைவெண்பா.

விண்மணியாய்க் காண்போர் விழிக்குட் பொலிந்ததுணைக்
கண்மணியாய் நின்றிறையுங் காட்டுமா - லொண்மணிச்சூட்
டம்மா சுணந்தன்னி யம்முடிமேற் கொண்டிருந்த
விம்மா சிலாமணிமற் றின்று. (௨௬)

கட்டளைக்கலித்துறை.

இன்றோர் வியப்புள தான்மாசி லாமணி யென்றிருப்ப
தொன்றோர் மணிகண் டவர்பல ராலதற் கோர்மருங்காய்
நின்றோர் பலபல பேதங்க ளாச்சொல்வர் நீக்கமறச்
சென்றோர்மற் றிம்மணி செம்மணி யேயென்று செப்புவரே. (௨௭)

நேரிசையாசிரியப்பா.

வீழுயர் மும்மதச் சூழிமால் யானை
தடம்புனல் குடைந்து படிந்தெழுந் துழக்கத்
தெண்டிரை சுருட்டுங் குண்டகழ் வாவியிற்
பங்கயத் தவிசிற் பசும்பொற் றுதளைந்
தங்கம் வேறுபட் டாசனம் பொலிதலு
மாவலிற் படர்ந்த சேவல்கண் டயிர்த்துநம்
பேடையன் றிதுமல ரோடையு மன்றாற்
படரும்வெண் டாமரை படர்ந்ததை யன்றிது

கடவுள ரமுதங் கடைந்தபாற் கடலே
காந்துவெங் கனற்கட் களிறுமன் றிதுகடற்
சாய்ந்தெழு மந்தரத் தடங்கிரி யதுவே
போகுவா லுறுப்பும் புழைக்கையுந் தைவரும்
பாகரோ வாசுகி பற்றும்வா னவரோ
பொங்கிவெண் ணிலவு பொழிந்தவெண் டரளமன்
றிங்கிது வங்கதி லெழுந்தவா ரமுதே
கொடிவிடு பாசடைக் குழாமன் றிங்கிதக்
கடலிடைத் தோன்றிய கற்பகா டவியே
சேயிதழ் விரிக்குஞ் செந்தா மரையிதன்
றாயதன் வடிவமா யமர்ந்தமா நிதியே
சங்கமன் றிதுவதன் றனிப்பெயர் நிதியே
செங்கிடை யன்றிது சிந்தா மணியே
யாதலி னமதுபேட் டன்னமு மன்றிதப்
போதிலங் குதித்த பொலங்கொம் பன்றே
யென்றுள மருளவோ ரெழினலம் பயக்கு
மன்றலம் பணைசூழ் மருதவேலிப்
பொன்மதிற் கமலை நன்னகர் புரக்குந்
தேசிக ராய சிற்பர முதல்வ
மாசி லாமணி ஞானசம் பந்த
வெனையாட் கொள்ளவந் தெய்தினை யாகலின்
முனியா தொன்றிது மொழிகுவன் கேண்மதி
கற்றன ராயினுங் கல்லா ராயினு
மற்றனம் யாமென வடைந்தனர் தமையெனிற்
காலம் பாரார் கருத்தினை யளவார்
சீல நோக்கார் தீக்குணங் கொள்ளார்
பரிசிலர் வேண்டிய பரிசுமற் றெல்லாம்
வரிசையோ டளிப்பது வள்ளியோர் கடனே
நன்னெறிப் படரா நலமிலி யாயினுஞ்
செந்நெறிப் படர்ந்துநின் சீர்புனைந் தேத்தலிற்
சத்தினி பாதநின் சந்நிதிப் பட்ட
வித்திறத் தெளிதினி லெய்திய தெனக்கே

அதனால்

சரியையிற் றாழ்க்கலை கிரியையிற் பணிக்கலை
யோகத் தாய்க்கலை பாகமு நோக்கலை
நாளையின் றெனவொரு வேளையு நவிற்றலை
யீண்டெனக் கருளுதி யிறைவ
பூண்டுகொண் டிருப்பனின் பொன்னடித் துணையே (௨௮)

நேரிசைவெண்பா.

பொன்னேயல் லாமற் பொருளோ டுடலுயிர்விற்
றென்னே மணிபொன் றெவர்கொள்வார் - கொன்னே
குருமாசி லாமணியைக் கொள்வோர் கொள்ளார்முன்
றருவார்மற் றிம்மூன்றுந் தாம். (௨௯)

கட்டளைக்கலித்துறை.

திருமணிக் கோவைத் தருஞ்ஞான சம்பந்தன் றண்கமலக்
குருமணிக் கோவை நிகர்மாசி லாமணி கோத்திடலா
லொருமணிக் கோவையிம் மும்மணிக் கோவையொண் சங்குகஞ்சம்
பொருமணிக் கோவைப் பொருளாக்கொள் ளாரிது பூண்டவரே. ௩௦

நூற்சிறப்பு.

தொடுத்த பிறவித் தளையாம் விலங்கு தனைமுறித்து
விடுத்த கருணைக் கடன்மாசி லாமணி மெய்ப்புகழாற்
றொடுத்த தமிழ்மும் மணிக்கோவை நித்தந் துதிக்கவல்லா
ரடுத்த சனனத்தி லெய்தாத பேரின்ப மெய்துவரே. (௩௧)

உள்ளத் தருணின் றுணர்த்தவென் றாவி லுறைந்தவெள்ளை
வள்ளக் கமலத் தவன்மாசி லாமணி வண்புகழி
லெள்ளத் தனையள வோர்தொடை யாக்கி யிசைத்தனளாற்
கள்ளப் புலன்கொண் டுளைத்தே னலனிக் கவிமுற்றுமே. (௩௨)

விரிக்குஞ் சரியையிற் பாமாலை சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிக்கின்று சாத்திய தேமற்றென் றண்டமிழ்நீ
தெரிக்கின்ற போதருள் செய்தது வேசிவ யோகமுண்மை
பரிக்கின்ற ஞானமொன் றேமாசி லாமணி பாவித்ததே. (௩௩)

பண்டாரமும்மணிக்கோவைமுற்றிற்று.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# காசிக்கலம்பகம்.

---

காப்பு.

நேரிசைவெண்பா.

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே - மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடியளித்த
வோரானை வந்தென் னுளத்து.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

நீர்கொண்ட கடலாடை நிலமகளுக் கணியான
கார்கொண்ட பொழிற்காசிக் கடிநகரங் குளிர்தூங்க
விடமருங்கிற் றிருமருங்குற் பெருந்தடங்க ணின்னமிர்தஞ்
சடைமருங்கி னெடுந்திரைக்கைப் பெண்ணமிர்தந் தலைசிறப்பக்
கண்கதுவு கடவுண்மணி தெரிந்தமரர் கம்மியன்செய்
விண்கதுவு பொலன்குடுமி விமானத்தின் மிசைப்பொலிந்தோய்.

நிற்பனவுந் தவழ்வனவு நடப்பனவு மாய்நிலத்துக்
கற்பமன விலகண்டு முறுகளைகண் காணுமே
பழங்கணுறு முயிர்கடுயர்க் கடனீத்துப் பரங்கருணை
வழங்குபர மானந்த மாக்கடலிற் றிளைத்தாட
வுரையாத பழமறையின் முதலெழுத்தி னொண்பொருளை
வரையாது கொடுத்திடுநின் வள்ளன்மை வாழ்த்துதுமே.

இவையிரண்டும் ஆறடித்தரவு.

நீரொழுத்துக் கொத்தவுட னீர்தார்க்கு நீநவில்வ
தோரொழுத்தே முழுதுமவ ரெவ்வண்ண முணர்வதுவே. (க)

என்பணிவ துடுப்பதுதோ லெம்பிரான் றமர்களவர்
முன்பணியும் பேறுடையார் திசைமுகனு முகுந்தனுமே. (உ)

செடிகொண்முடைப் புழுக்கூடே சிற்றடியோ மிடுதிறைமற்
றடிகளடி யார்க்களிப்ப தானந்தப் பெருவாழ்வே. (௩)

பற்பகலோற் றருந்தவரும் பெறற்கரிய பரந்தாம
மெற்புடல்விற் றளியேமுங் கொளப்பெறுவ திறும்பூதே. (௪)

நிணம்புணர்வெண் டலைக்கலன்கொ ணேரிழைமுத் தித்திருவை
மணம்புணர்வார்க் கையனருண் மணவாளக் கோலமே. (௫)

முடைத்தலையிற் பலிகொள்வா னூவுலகு மவரவர்நங்
கடைத்தலையிற் றிரிவதுகொல் யாம்பெறுநின் காணியே. (௬)

இவையாறும் ஈரடித்தாழிசை.

உளதெனி லிலதென வொருவரொ ரளவையி
னளவினி லளவிட லரியதொ ருருவினை. (க)

இதுவென லருமையி னெழுதரு மொழிகளு
மதுவல வெனுமெனி லெவருனை யறிபவர். (உ)

அவனவ ளதுவெனு மவைகளி லுளனல
னெவனவ னிவனென வெதிர்தரு தகைமையை. (௩)

அறிபவ ரறிவினு ளறிவுகொ டறிவுறு
நெறியல தொருவரு மறிவரு நிலைமையை. (௪)

இவைநான்கும் ஈரடியராகம்.

ஆணொடு பெண்ணுரு வமைந்து நின்றனை.
பூண்முலை கலந்துமைம் புலனும் வென்றனை.

எண்வகை யுறுப்பினோ டுருவெ டுத்தனை.
தொன்மறைப் பனுவலின் றொடைதொ டுத்தனை.

இவைநான்கும் நாற்சீரோரடியம்போதரங்கம்.

வடவரை குழைய வளைத்தனை.
மலைமகள் மூலைக டிளைத்தனை.
விடமமிர் தமர விளைத்தனை.
விசயனொ டமர்செய் திளைத்தனை.
வரிசிலை மதனை யெரித்தனை.
மதகரி யுரிவை தரித்தனை.
அருமறை நெறிய விரித்தனை.
அலகில்பல் கலைக டெரித்தனை

இவையெட்டும் முச்சீரோரடியம்போதரங்கம்.

அழல்வி ழித்தனை. பவமொ ழித்தனை.
ஆற ணிந்தனை. மாற ணிந்தனை.
மழுவ லத்தினை. முழுந லத்தினை.
மான டத்தினை. மானி டத்தினை.
அலகி றந்தனை. தலைசி றந்தனை.
அருள்சு ரந்தனை. இருடு ரந்தனை.
உலக ளித்தனை. தமிழ்தெ ளித்தனை.
ஒன்று மாயினை. பலவு மாயினை.

இவைபதினாறும் இருசீரோரடியம்போதரங்கம்.

அலகில்பல புவனங்க ளடங்கலுமுன் னொழிப்பாய்க்குக்
கொலைவிடமுன் டனையென்று கூறுவதோர் வீறாமே. (க)

பயின்மூன்று புவனமுங்கட் பொறிக்கிரையாப் பாலிப்பாய்க்
கெயின்மூன்று மெரிமடுத்தா யென்பதுமோ ரிசையாமே. (உ)

அடியவரோ டுக்குறும்பு மறவெறிந்தா ரனிலடிகள்
விடுகணைவிற் காமனைமுன் வென்றதுமோர் வியப்பாமே. (௩)

இக்கூற்றின் றிருநாமத் தொருகூற்றுக் கிலக்கென்று
லக்கூற்றங் குமைத்தனையென் றிசைப்பதுமோ ரற்புதமே. (ச)

இவைநான்கும் ஈரடித்தாழிசை.

எனவாங்கு, இது தனிச்சொல்.

உலகுசூற் கொண்ட தலைவியு நீயும்
மலைபக வெறிந்த மழவிளங் குழவியை
யயிர்துழற் றிருக்குங் குமுதவாய்த் தேறல்
வண்டுகி னனைப்ப மடித்தலத் திருத்திக்
கண்களிற் பருகியக் காமரு குழவி
யெழுதாக் கிளவி யின்சுவை பழுத்த
மழலைநா றமிர்தம் வாய்மடுத் தூண்ணச்
செஞ்செவி நிறைத்துநும் மஞ்செவிக் கடிகளென்
புன்மொழிக் கடுக்கொளப் புகட்டினை
னின்னருள் விழைகுவா யிறும்பூ துடைத்தே.

இது பத்தடிநேரிசையாசிரியச்சுரிதகம். (க)

நேரிசைவெண்பா.

உடையா ளகிலேசர்க் கோர்குழலைக் கோட்டி
னடையாள மிட்டுவையா ளாகேல் - கடையிலவர்
செவ்வண்ணம் பெற்றார் திரளொடுநிற் கின்றாளா
யெவ்வண்ணங் கண்டிறைஞ்சு வேம். (உ)

கட்டளைக்கலித்துறை.

இறைவனைக் காகம் பரித்தளித் தாரகி லேசர்கொன்றை
நறைவனைக் கும்முடி யாரடிக் கேகங்கை நன்னதியின்
றுறைவனைக் குங்குரு கேகுரு கேயொன்று தூமொழிகைக்
குறைவனைக் கும்முங்கள் பேரிட்ட தாற்சென்று கூறிடுமே. (௩)

---

(க) ச. இக்கூற்று - மேற்சொல்லிய புகழ்ச்சிக்கூறுபாடு. (உ) அகிலேசர் - விசுவேசர். (௩) குறை - இன்றியமையாப்பொருள். இது, "வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை - தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு." என்னும் திருக்குறளானுமுணர்க.

## புயவகுப்பு. இரட்டையாசிரியச்சந்தவிருத்தம்.

### முதலடி.

இடமற மிடைதரு கடவுளர் மடவிய
ரெறிதரு கவரியி ழற்கட் டுயின்றன
வினவலை கொடுமத னிடுசய விருதென
விறையவ னெழுதுசு வட்டுக் கிசைந்தன
விருவரு நிகரென வரிசிலை விசயனொ
டெதிர்பொரு சமரினி லைப்புற் றிருந்தன
விணையடி பரவிய மலடிமூ னுதவிய
விடியலி னுணைவொரு தட்டைப் பரிந்தன.

### இரண்டாமடி.

படவர வுமிழ்தரு மணிவெயில் விடவளர்
பரிதியொ டெழுமுத யத்திற் பொலிந்தன
பருகுமி னமிர்தென வுருகிரு கவிஞர்கள்
பனுவலின் மதுரவி சைக்குக் குழைந்தன
படரொளி விடுசுடர் வலயம தெனவொரு
பருவரை நெடுவிலெ டுத்துச் சுமந்தன
பரிபுர மெரியொடு புகையெழ மலர்மகள்
பணைமுலை தழுவுசு ரத்தைத் துரந்தன.

### மூன்றாமடி.

மடலவிழ் தடமல ரிதழியி னிழிதரு
மதுமழை யருவிரு ளிர்த்துக் கிளர்ந்தன
வழிதர வுதிரமு நிணமொடு குடர்களும்
வருகர கரியின்ம தத்தைத் தடிந்தன
மதகரி யுரியதன் குலவரி முதுகினின்
மழைமுகி றவழ்வெத னப்பொற் பமைந்தன
மலியுமிழ் நிலவொடு மதிதிறல் வெயிலெழ
மதிகதிர் வலம்வரு வெற்பொத்து நின்றன.

நான்காமடி.

குடவளை துறைதொறு முடுகிமா யெனவிரி
 குளிர்நில வெழுவுமிழ் முத்தைத் தடங்கரை
குலவிய படர்சிறை மடவன மொடுசில
 குருகுகள் சிலையொட லைத்துத் துயின்றன
குரைபுனல் வரநதி சுரர்தரு முருகவிழ்
 கொழுமலர் சிதறவி முத்தத் துவிண்டொடு
குலகிரி யுதவிய வளரிள வனமுலை
 கொழுநர்த மழகிய கொற்றப் புயங்களே. (சு)

நேரிசைவெண்பா.

புயலார் பொழிற்காசிப் பூங்கோயின் மேய
கயலார் தடங்கணாள் காந்தன் - செயலாவி
யுய்யத் துதியா ருதிப்பார் துதிப்பாரேல்
வையத் துதியார் மறுத்து. (ரு)

கட்டளைக்கலித்துறை.

மறைக்கோலங் கொண்ட வகிலேச ரேயின்று மாதர்முன்னே
பிறைக்கோலங் கொண்டு புறப்பட்ட வாமுன் பிறைமுடித்த
விறைக்கோல மோல மெனத்தேவ ரோல மிடவிருண்ட
கறைக்கோலங் கொண்டுநுங் கண்டத் தொளித்த கனல்விடமே. (சு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விடுத்த வாளிக்கும் விரகிலாக் கருப்புவில் வீணன்மீ ளவும்வாளாத்
தொடுத்த வாளிக்கு மேபகை மூண்டதித் தூயநன் மொழிக்கென்று

(சு) அவிமுத்தம் - என்பதில் முத்தம் - விடுகை; விமுத்தம் - மிகவும் விடுகை; அவிமுத்தம் - மிகவும் விடவேண்டியகாலத்தும் விடாமை எனப்பொருள்கொள்க. முன்னொருகாலத்திலே விசுவநாதர் இவோதாஸன்காரணமாக காசியையகலும்படி நேர்ந்தகாலத்தும் அருவுருவாக வீற்றிருந்தருளினராகலின் இத்தலம் அவிமுத்தமெனப் பெயர் பெற்றது. இதன்விரிவைக் காசிகாண்டத்துட்காண்க.

(ரு) தடங்கணாள் - விசாலாக்ஷி.

மடுத்த நான்மறை முனிவரர் நால்வர்க்கு மம்மறைப் பொருள்கூற
வெடுத்த கோலமா யானந்த வனத்துமெம் மிதயத்து மிருந்தோனே (எ)

கட்டளைக்கலித்துறை.

இருப்பா ரவிமுத்தந் தெங்கேகண் மூடுவ ரென்றும்வெள்ளிப்
பொருப்பாள ரோடித் திரிவதெல் லாமிப் புவனங்களை
யுருப்பாதி யிற்படைத் தோர்பாதி யிற்றுடைத் தூழிதொறும்
விருப்பா ருயிர்களின் மேல்வைத்துத் தாஞ்செயும் வேலைகண்டே. ()

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கண்ணென்று திருநுதலிற் கனலுருவ மாப்படைத்த காசி நாதா,
தண்ணென்று நறையிதழித் தாரொன்று ணெட்டுயிர்த்தா டனைமேல்
வீழ்ந்தா, ளொண்ணென்று முணராமே கிடக்கின்ற ளிதுகண்டா லெ
மூழ்த்தொன் றேநத்,தண்ணென்று வருவரெனத் துணிந்தனளோ வறி
யேனித் தோகை தானே. (௯)

நேரிசைவெண்பா.

தோகை யுயிர்முடிப்பான் றும்பைமுடித் தான்மதவேள்
வாகை முடித்திடவும் வல்லனே - யாகெடுவீர்
காமாந் தகர்காசிக் கண்ணுதலார்க் கோதீர்மற்
றேமாந் திராம லெடுத்து. (௧0)

கட்டளைக்கலித்துறை.

எடுக்கச் சிவந்த சிலம்படி யாரகி லேசர்நறைக்
கடுக்கைச் சடைமுடி யாரடி யார்க்குக் கலைகள்கொய்து
கொடுக்கக் கொடுக்க வளர்கின்ற வாவெறுங் கூட்டிலெரி
மடுக்கக் குறையுயிர் மாதனைத் தேடு மதிக்கொழுந்தே. (௧௧)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொழுதி வரிவண் டுழுதுழக்குங் குழலீர் நறுங்கட் கோதையிவ
ளழுத விழிநீர் முந்நீரா யுவர்நீ ராக்கு மதுகூறீ
ரொழுத வரிய திருமார்பி லிளஞ்சேய் சிறுசே வடிச்சுவடு
முழுது முடையான் முலைச்சுவடு முடையார் காசி முதல்வருக்கே. ()

நேரிசைவெண்பா.

வளைவளைக்கும் பொற்றடந்தோண் மைந்தர்க் கிவரார்
நினைவளைக்கை யார்நகைக்கு நேராக் - கனையில்
குவிமுத்தம் வெண்ணிலவு கொப்பளிக்குங் கங்கை
யவிமுத்தஞ் சென்றிறைஞ்சா தார். (கச)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆர்க்கும் படைவே ளாசிருப்பென் றஞ்சா தடிக ளருட்காசி, யூ
ர்க்கும் புதுத்தோ ரணம்வைத்தா லுமக்கிங் கிவள்பேச் சுனைப்பாரார்,
வார்க்குங் குமப்பூண் முலைச்சுவட்டை வளையென் றேடி வளைந்துசுற்
றிப்,பார்க்குந் தொளைமுள் ளெயிற்றுரகப் பணியீர் மோகந் தணியீரோ.

பிச்சியார். கட்டளைக்கலிப்பா.

தண்ணு லாம்பொழிற் காசித் தெருவினீர்
தரித்தி டுந்தவக் கோலமுஞ் சூலமும்
பெண்ணொ டாடுமெப் பிச்சனுக் கொத்தலாற்
பிச்சி யானொனும் பேர்தரித் தாடுவீர்
வெண்ணி லாமுகிழ்க் குங்குறு மூரலால்
வீணி லேயெம் புரத்தெரி யிட்டநீர்
கண்ணி னுலுமிக் காமனைக் காய்ந்திடிற்
கடவு ணீரொன் றிறைஞ்சுதுங் காணுமே. (கரு)

கட்டளைக்கலிப்பா.

காணுங் காணு நதிகளெல் லாம்புனற்
கங்கை யேயங் குளதெய்வம் யாவையுந்
தாணு வெங்க ளகிலேச ரோமற்றிறத்
தலங்கள் யாவுந் தடமதிற் காசியே
பூணு மாசைமற் றென்றே யுடல்விடும்
போது நன்மணி கர்ணிகைப் பூந்துறை
பேணு மாறு பெறவேண்டு மப்புறம்
பேயொ டாடினு மாடிப் பெறுதுமே. (கசா)

இதுவுமது.

பெற்ற மூர்வதும் வெண்டலை யோட்டினிற்
பிச்சை யேற்றுத் திரிவதும் பேய்களே
சுற்ற மாகச் சுடலையில் வாழ்வதுந்
தோலு டுப்பதுந் தொண்டர்க் கரிதன்றால்
கற்றை வார்சடைக் காசிப் பதியுளீர்
கற்பந் தோறுங் கடைநா ளுலகெலாஞ்
செற்று மீளப்ப டைக்கவும் வேண்டுமே
தேவ ரீர்பதஞ் சிந்திப்ப தில்லையே. (கஎ)

நேரிசைவெண்பா.

இல்லாளே முப்பத் திரண்டறமுஞ் செய்திருப்பச்
செல்லார் பொழிற்காசிச் செல்வனார் - மெல்லப்
பரக்கின்ற புண்ணீர் படுதலைகொண் டைய
மிரக்கின்ற வாறென்சொல் கேள். (கஅ)

கொச்சகக்கலிப்பா.

சொல்லா வதுமறையே சொல்லுவது நல்லறமே
யில்லா வதுமுத்திக் கேதுவா மித்தலமே
யல்லார் குழலளவு மாகொன் மணம்வயிரக்
கல்லா யிருந்தவா காசிப் பிரானார்க்கே. (கக)

கட்டளைக்கலித்துறை.

பிரானென் றவர்க்கொரு பெண்ணோடு மோடிப் பெருங்கருணை
தராநின்ற காசித் தடம்பதி யார்வந்தென் றன்னகத்தே
யிராநின் றனைாம் புலக்கள்வர் கொள்ளையிட் டேகுதற்கே
வராநின்ற போதுள்ள மாதனங் காத்து வழங்குதற்கே. (உ0)

கொற்றியார். அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வழுத்துமவர்க் கானந்த வாழ்வையருள் வார்காசி வளமை யெல்லாங்
கொழுத்ததமி ழாற்பாடித் துளசிமணி தரித்தாடுங் கொற்றி யாரோ

பழுத்ததவக் கோலமுங்கைச் சங்கமுமா ழியுங்கண்டு பணிந்தே மாகின்
முழுத்ததவத் தால்யாமு மாலாயி னேங்கூடி முயங்கு வீரே. (உ௧)

கட்டளைக்கலித்துறை.

முயலாம லேதவ முத்தித் திருவை முயங்கநல்குங்
கயலார் பெருந்தடங் கண்ணிபங் காரருட் காசியிலே
செயலாவ தொன்றிலே வாளா நெடுந்துயில் செய்யு முங்கள்
பயலாக வேபணி செய்வார் புவனம் படைப்பவரே. (உ௨)

கட்டளைக்கலிப்பா.

படுத்த பாயுட னேபிணி மூழ்கினும்
பல்வி ழுந்து நரைத்தற மூப்பினு
மடுத்த திங்கிவர்க் கேபெரு வாழ்வெனு
மப்பெ ரும்பதி யெப்பதி யென்பிரேல்
விடுத்து விட்டிந் திரதிரு வும்புவி
வெண்கு டைக்கு ளிடுமர சாட்சியுங்
கடுத்த தும்பு களத்தரைத் தேடுவார்
காத லித்து வருந்திருக் காசியே. (உ௩)

கட்டளைக்கலித்துறை.

திருக்கோலங் கொண்டநற் றேன்மொழி யாளெண் டிசையினுநின்
னுருக்கோல மேகண்டுங் கண்டிலள் போலு மொழுகுநறை
மருக்கோல நீலக் குழல்சே ரவிமுத்த வாணதொல்லை
யிருக்கோல மிட்டுண ராயெங்கு மாகி யிருப்பதுவே. (உ௪)

இதுவுமது.

இருகுங் குமக்குன்றும் பீரூப்பக் காம வெரியினினின்
றுருகும் பசும்பொன்னுக் கோர்மாற்றுண் டேனுரை யாய்தொடுத்துச்
செருகு நறுங்கொன்றை தேன்பிழிந் தூற்றச் சிறைச்சுரும்பர்
பருகும் பொலஞ்சடை யாய்காசி வாழ்முக்கட் பண்ணவனே. (உ௫)

விருத்தக்கலித்துறை.

பண்ணேர் வேதம் பாடிய காசிப் பதியாயிப்
பெண்ணே ரொருவ னெய்கணை யைந்தும் பெய்தானு
ளுண்ணேர் நின்று யின்னரு ளாலென் னுயிரன்னாள்
கண்ணேர் நிற்றற் கொல்கி யொழிந்த கழுநீரோ. (உசு)

கட்டளைக்கலித்துறை.

கழியுந் தலைக்கலன் பூண்டாடுங் காசிக் கடவுணுதல்
விழியு மிடக்கண்ணும் வெண்ணெருப் பேயவ் விழியிரண்டிற்
பொழியுங் கனல்விழி காமனைக் காய்ந்ததப் போரிலுடைந்
தொழியும் படைகளென் றேவெமைக் காயுமற் றோர்விழியே. (உஎ)

மடக்கு. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விழைகுவ தன்பர கஞ்சுகமே வெங்கரி யின்னுரி கஞ்சுகமே
தொழிலடி கட்குள மாலயமே தூமுனி வோருள மாலயமே [யே
யழகம ரும்பணி யென்பணியே யாட்கொள மேற்கொள்வ தென்பணி
மழகளி றீன்ற வளம்பதியே வாழ்வது காசி வளம்பதியே. (உஅ)

மடக்கு. கட்டளைக்கலிப்பா.

வண்ண மேனி யரும்பு வனங்களே
வாசம் வாச மரும்பு வனங்களே
நண்ணு மாலய மாதவ ரங்கமே
ஞால மேழ்தரு மாதவ ரங்கமே
தண்ணென் மாலை தருமருக் கொன்றையே
தருவ தையர் தருமருக் கொன்றையே
கண்ணி னிற்பர் மனத்திருக் கோயிலே
காசி யேயவர்க் கோர்திருக் கோயிலே. (உகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருகுசினக் கூற்றினெயிற் றிடைக்கிடந்துங் கடைநாளிற் றினை
யே யொன்றாய்ப், பெருகுமுழு நீத்தத்திற் றிளைத்தாடப் புணைதேடும்

பேதை நெஞ்சே, யுருகிலைநெக் குடைந்திலைமொண் டானந்த வனத்
தேனை யோடி யோடிப், பருகிலைகண் ணரும்பிலைமெய் பொடித்திலை
மற் றுனக்கென்ன பாவந் தானே. (௬௰)

நேரிசைவெண்பா.

பாவலரு நாவலரும் பண்மலரக் கண்மலருங்
காவலரு மேடவிழ்க்குங் காசியே - இவளருங்
கஞ்சக் கரத்தான் கலைமறைக்கு நாயகமா
மஞ்சக் கரத்தா னகம். (௬௧)

இதுவுமது.

அகமே யவிமுத்த மையரிவர்க் காகஞ்
சகமேழு மீன்றெடுத்த தாயே - மிகமேவு
மெண்ணம் பரமே யெமக்களித்தன் முச்சுடருங்
கண்ணம் பரமே கலை. (௬௨)

அம்மானை. மடக்கு. கலித்தாழிசை.

கலைமதியின் கீற்றணிந்த காசியகி லேசர்
சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனர்கா ணம்மானை
சிலைமதனைக் கண்ணழலாற் செற்றனரோ யாமாகின்
மலைமகட்குப் பாகம் வழங்குவதே னம்மானை
வழங்காரோ வப்பாலு மாலாறு லம்மானை. (௬௩)

கட்டளைக்கலித்துறை.

அம்மனை தம்மனை யாத்திருக் கோயி லவிமுத்தமா
வெம்மனை யாய்த்தந்தை யாயிருந் தாரடிக் கீழிறைஞ்சீர்
நம்மனை மக்களென் றேக்கறுப் பீருங்க ளூலந்தாற்
சொம்மனை வைத்தெப் படிநடப் பீர்யமன் றூதரோடே. (௬௪)

கட்டளைக்கலிப்பா.

தூது கொண்டுந் தமைத்தோ ழமைகொண்ட
தொண்டர் தண்டமிழ்ச் சொற்கொண்ட குண்டலக்

(௬௪) சொம் - சொத்து.

காது கொண்டெங் கவிதைகொண் டாட்கொண்ட
காசி நாதர் கருத்தே தறிகிலேம்
போது கொண்டொரு பச்சிலை கொண்டுதாம்
பூசை செய்திலர் புண்டரி கப்பத
மேது கொண்டு கொடுப்பர் கொடுப்பரோ
விருவ ருக்குமற் றென்படு நெஞ்சமே. (௩௫)

சித்து. நேரிசைவெண்பா.

ஏடவிழ்பொற் கொன்றையங்கி லேசரன்பர்க் கேயிருப்பை
யாடகமாக் கிக்கொடுத்தோ மவ்வளவோ - நீடுதிறல்
காட்டுமிமை யோர்க்கிருப்புக் கற்கனக மாக்கியண்ட
வோட்டினையும் பொன்னாக்கி னேம். (௩௬)

நேரிசையாசிரியப்பா.

பொன்னுருக் கன்ன பூந்துணர்க் கொன்றையும்
வெள்ளிமுளை யன்ன விரிநிலாக் கொழுந்துங்
காந்தண்மலர்ந் தன்ன பாந்தளின் னிரையுந்
திரைசுழித் தெறியும் பொருபுனற் கங்கையில்
வெள்ளிதழ்க் கமலம் வள்ளவாய் விரித்தென
முழுநகை முகிழ்க்குங் கழிமுடை வெண்டலை
தோலடிச் செங்காற் பால்புரை வரிச்சிறைக்
கிஞ்சுக மலர்ந்த செஞ்சூட் டெகினத்
தாருவெடுத் தகல்வான் றுருவியுங் காணாத்
தொன்மறைக் கிழவ சென்னிமற் றியானே
கண்டுகொண் டனனிக் கடவுண்மா முடியெனப்
பெருமகிழ் சிறப்பக் குரவையிட் டார்த்து
வெள்ளெயி றிலங்க விளைவிற் சிரித்தெனப்
பெருவியப் பிழைக்கு மெரிபுரை சடையோ

(௩௭) ௧௦. சென்னிமற்றியானே - தலையாகியயானே,

யான்வழக் கறுக்கும் வாளமர்த் தடங்கண்
மின்னிழை மருங்குற் சின்மொழி மகளி
ரொழுகொளி மிடற்றி னழகுகவர்ந் துண்டெனக்
கயிறுகொண் டார்க்குங் காட்சித் தென்ன
மரகதங் காய்த்துப் பவளம் பழுக்குங்
கமஞ்சூற் கமுகின் கழுத்திற யாத்து
வீசொளிப் பசும்பொ னூசலாட் டயர்தரப்
பருமணிக் கமுகின் பசுங்கழுத் துடைந்து
திரைபடு குருகித் திரடெறித் தென்ன
முழுக்குலை முரிந்து பழுக்காய் சிதறு
மங்குல்கண் படுக்கு மதுமலர்ப் பொதும்பர்
கங்கைசூழ் கிடந்த காசி வாணா
வைவளி பித்தெனு மவைதலை யெடுப்ப
மெய்விட் டைவருங் கைவிடு மெல்லையின்
மாமுத றடிந்த காமரு குழவியும்
பொழிமதங் கரையு மழவிளங் களிறு
மூண்டெழு மாணம் பூண்டழக் கறுப்ப
விடக்கையி னணைத்துநின் மடித்தலத் திருத்தி
யுலகமோ ரேழும் பலமுறை பயந்து
முதிரா விளமுலை முற்றிழை மடந்தை
யொண்டொடித் தடக்கையின் வீச நுண்டுகிற்
றோகையிற் பிறந்த நாகிளந் தென்றன்
மோகமுந் தளர்ச்சியுந் தாகமுந் தணிப்ப
மறைமுதற் பொருளி னிறைசுவை யமுதினை
யஞ்செவி மடுத்துண வூட்டிடுநின்
குஞ்சித வடிக்கீழ்க் குடியிருத் துகவே. (௩௭)

---

௧௫. வழக்கறுத்தல் - சஞ்சரித்தலையகற்றல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சூடியிருக்கும் புன்குரம்பை குலைந்திடுநாட் கொலைக்கூற்றங் குமைத்த செம்பொ, னடியிருக்கும் பரந்தாமப் புக்கில்புகுந் தானந்த வமுத மாந்திக், கடியிருக்கு நறைக்குழன்மூத் தித்திருவை முயங்கிடவுங் கடவேன் கொல்லோ, தூடியிருக்கு மிடையவளோ டவிமுத்தத் திருந்தபரஞ் சோதி யானே. (கஅ)

களி. சந்தத்தாழிசை.

சோதியொன்றிலொரு பாதிசத்தியொரு பாதியும்பரம சிவமெனத், தொகுத்துவைத்தவவி முத்தநாயகர் துணைப்பதம்பரவு களியரோ, மோதியோதியுமி ளைப்பர்வேதமு முணர்த்துதத்துவமு ணர்கிலா,ருணரும்வண்ணமநு பவத்தில்வந்திடுமொ ருண்மைவாசகமு ணர்த்துகே, மேதினிலுற மனைத்திலும்பசுவி னைப்படுத்தனல்வ ளர்த்திடும், யாகமேயதிக மென்பதன்பர்ந மிறைச்சிமிச்சிலதி லிச்சையா, ராதியாரறிவ ரதுகிடக்கமது வருந்திலப்பொழுதி லேபெறற், கரியதோர்பரம சுகம்விளைந்திடுவ துதுமறுத்தவவை யில்லையே. (கக)

கட்டளைக்கலித்துறை.

இல்வாழ்க்கை விட்டுக் கதிவேட் டடைபவர்க் கேழைபங்க
னல்வாழ்க்கை யேதருங் காசிப் பிரானறும் பூங்கடுக்கை
வல்வார் முலைக்கொம்ப ரெய்தற்கை தாண்மழு வாலெறிந்து
கொல்வா ரொருவருக் கல்லா தெவர்க்குங் கொளற்கரிதே. (சo)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கொள்ளையிடச் சிலர்க்குமுத்திச் சரக்கறையைத் திறந்துகொடுத் தனந்த கோடி, பிள்ளைகள்பெற் றுடையபெருமனைக்கிழத்திக் கேகுடும்பம் பேணு கென்று, வுள்ளபடி யிருநாழி கொடுத்ததிலெண் ணான்கறமு மோம்பு கென்று, ரள்ளல்வள வயற்காசி யாண்டகையார் பெருந்தகைமை யழகி தாமே. (சக)

குறம். மேற்படி வேறு.

அழகு துயில்கும் குமக்கொங்கை யணங்கே யெங்க ளருட்காசிக்
குழகர் மகற்கு மகட்கொடுத்த குடியிற் பிறந்த குறமகள்யா
னெழுகு தொடிக்கைக் குறியுமுகக் குறியுந் தருமொள் வனக்குறியும்
புழுகு முழுகு முலைக்குறியு முடையா ரவர்பொற் புயந்தானே. (௬௨)

கட்டளைக்கலித்துறை.

புயல்வண்ணக் கண்ணற் கொளித்தவக் கள்வன் புணர்ப்பையெண்ணு
கயல்வண்ணக் கண்ணிதன் கண்ணினுட் புக்கது கண்டிருந்துஞ் [ள்
செயல்வண்ணங் கண்டிலள் வாளாப் புறத்தெங்குந் தேடுகின்றா
வயல்வண்ணப் பண்ணை யவிழ்த்தத் தானை மனத்துள்வைத்தே. (௬௩)

மறம். அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வையமுழு தொருங்கீன்ற விடப்பாக ரானந்த வனத்தில் வாழும்,
வெய்யதறு கண்மறவர் குலக்கொடியை வேட்டரசன் விடுத்த தூதா,
கையிலவன் றிருமுகமோ காட்டிருகண் டொட்டுமுட்டைக் கதையி
ற்றூங்கிச், செய்யகொடி றுடைத்தகல்வாய் கிழித்தரிவோ நாசியொடு
செவியுந் தானே. (௬௪)

மேற்படி வேறு.

தாக்கு படைவேள் கணைமழைக்குத் தரியா திருகண் மழையருவி
தேக்கு மிவட்கா னந்தவனத் திருந்தா ருள்ளத் திருந்தார்கொல்
காக்க வரிய விளவாளைக் காற்றுக் குடைந்து கரந்தவச்சை
மாக்க ளனையே முடவலவன் வளைவா யடைக்கு மழைநாளே. (௬௫)

தழை. கட்டளைக்கலித்துறை.

மழைவளைக் கும்பொழிற் காசிப் பிரான்வெற்பில் வண்டறைபூந்
தழைவளைக் கைக்கொடுத் தேன்கண்ணி லொற்றித் தளரிடைதன்

---

(௬௪) முட்டு - பிணிப்புக்களாயுள்ள எலும்புகளின் திரட்சி.

னிழைவளைக் குங்கொங்கை யூடணைத் தாளித் தழையினுள்ளே
கழைவளைக் குன்றிலே வேளனை யாயுளங் கண்டுகொள்ளே. (௬௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கண்ணிருக்குந் திருநுதலுங் கனலிருக்குந் திருக்கரமுங் கலந்தோ
ர் பேதைப், பெண்ணிருக்கு மிடப்பாலும் பிறையிருக்கு மவுலியுமா
ய்ப் பிரிக்க லாகா, வெண்ணிருக்குங் கணத்தொடுமா னந்தவனத் திரு
ப்பாரை யெங்கே காண்பார், பண்ணிருக்கு மறைகளுமெண் கண்ண
னுங்கண் ணனுமமரர் பலருந் தாமே. (௬௭)

கட்டளைக்கலித்துறை.

பல்லாண்டு தம்மைப் படைத்தவத் தேவனைப் பார்த்துப்பைம்பொன்
வில்லாண்ட தோள்கொட்டி யெக்கையர் கோல விடம்பழுத்த
வல்லாண்ட கண்டத்தெம் மானைப் பிரானவி முத்தத்திலே
சில்லாண் டிருந்து சிவமாய்ச் செறுஞ்சிறு செந்துக்களே. (௬௮)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

செந்தேனொழுகும் பொழிற்காசிச் சிறுநுண் ணுசுப்பிற் பெருந்த
டங்கட், பைந்தேனொழுகு மிடப்பாகர் படைவீ டென்ப துணராய்
கொல், வந்தேன் வினைக்கு மெமைப்பாவி மருளு வினையே விளைந்த
போதுங்தே ருடையிங் கரிதனற்க ணுடையார் மழுவாட் படையாரோ.

மதங்கியார். மேற்படி வேறு.

படலைநறுங் குகிக்கைமுடிப் பாகுசடா ரிசைபாடிப் பசுந்தேன்
பில்கி, மடலவிழ்பூம் பொழிற்காசி மணிமறுகில் விளையாடு மதங்கி யா
ரோ, யுடலுமெமக் குயிருமொன்றே யொடரிக்க ணவாளிரண்டு மொ
ழிய வென்னே, தொடலைவளைத் தடக்கையில்வா ளிரண்டெடுத்து
வீசிடநீர் தொடங்கு மாறே. (௭௦)

---

(௭௦) தொடலைவளை - மாலைபோலும் அணிபெற்ற வளை; அல்லது,
தொடுத்தலையுடைய வளை.

ஊசல். கலித்தாழிசை.

தொடங்காமே பணிமலரும் தூவாமே நல்குங்
கடங்கால் களிற்றுரியார் காசிவளம் பாடி
விடங்கான் றகன்றுகுழை மேற்போய்க் குடங்கைக்
கடங்காத வுண்கணீ ராடுகபொன் னூசல்
வம்பொன்மலர்க் கொம்பன்னீ ராடுகபொன் னூசல். (ருக)

நேரிசைவெண்பா.

பொன்னந்தா தென்னமலர்ப் பூந்துறையிற் புண்டரிகத்
தன்னந்தா தாடு மவிமுத்த - மின்னமிர்தா
முன்னங் கடுக்கை முகந்துண்டார் நல்காரோ
யின்னங் கடுக்கை யிவட்கு. (ருஉ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குன்றிரண்டு சுமந்தொசியுங் கொடியன்னீ ரவிமுத்தங் குடிகொ
ண்டாக, மொன்றிரண்டு வடிவாளுர் திரள்புயத்து மார்பகத்து முமி
ழ்தேன் பில்கி, மின்றிரண்ட தெனப்புரளும் பொலங்கடுக்கைத் தாம
த்தின் விழைந்தா தாடிப், பொன்றிரண்ட தெனவிருக்கும் பொறிவ
ண்டு செய்தவமென் புகலு வீரே. (ருங)

கொச்சகக்கலிப்பா.

புகுமே மதிக்கொழுந்தும் புன்மாலைப் போது
நகுமே கிளையு நகைத்தா ளமக்கென்னே
யுகுமே யுயிர்காசி யுத்தமனார் கானைத்
தகுமேயப் போதிழுதுந் தாரும் பெறலாமே. (ருச)

இதுவுமது.

ஆமோ வவிமுத்தத் தையரோ பெண்பழிவீண்
போமோ வயிரவர்தஞ் சாதனமும் பொய்யாமோ

(ருரு) சாதனம் - அவமிருத்தியுமுதலியவை கலவாத ஆக்கினை.

தேமோது கொன்றைச் செழுந்தாம நல்காநீர்
தாமோ தருவீ ருமதுபரந் தாமமே. (ருரு)

விருத்தக்கலித்துறை.

பரந்தா மத்தைப் பல்லுயிர் கட்கும் பாலிப்பார்
வரந்தா மத்தைத் தருவதை நீர்பின் வழங்காரோற்
புரந்தா மத்திற் பொலிதரு காசிப் புரமானார்க்
கிரந்தா மத்தை யெனப்புக லீரோ இழையீரோ. (ருசா)

பாண். நேரிசையாசிரியப்பா.

இழுமென் மழலை யின்னமு தூறைப்பப்
பிழிதே றொழுக்கி னொழுகுமின் னரம்பின்
வள்ளுகிர் வடிம்பின் வான்முறை வருடித்
தெள்விளி யெடுக்குஞ் சிறியயாழ்ப் பாண
வாழிய கேண்மதி மாற்றமொன் றியானு
மேழிசைப் பாணன்மற் றிறைமக னலனே
பலவுடன் பழிச்சுவ தொழிகமற் றம்ம
சிலபகல் யானுநின் னிலைமைய னாகி
நலம்பா டறியா விலம்பா டலைப்ப
நீர்வாய்ச் சிதலையு நூல்வாய்ச் சிலம்பியுஞ்
சிலவிட மெய்த்த சிறுபுன் குரம்பையின்
மசகமு முலங்கும் வாய்ப்படைக் குடவனும்
பசையில் யாக்கைத் தசைகறித் துண்ண
வரும்பசிக் குணங்கியும் பெரும்பிணிக் குடைந்துஞ்
சாம்பல்கண் டறியா வாம்பி பூத்த
வெலிதாயி லடுப்பிற் றலைமடுத் தொதுங்கிச்
சிறுசிறா ரலறப் பெருமனைக் கிழத்தி
குடங்கையிற் றாங்கிய கொடிற்றினள் குடங்கைக்
கடங்கா வுண்க ணறலைத் தொழுக

வழுகுரல் செவிசுட விழுமநோய் மிக்குக்
கனிகன் காறு நலமரு மெல்லையிற்
கடவு ளெல்லாம் பிடர்பிடித் துந்தக்
குரைபுனற் கங்கைக் கரைவழிச் சென்றாங்குத்
தேம்பழுத் தழிந்த பூம்பொழிற் படப்பையிற்
கடவுட் கற்பகக் கொடிபடர்ந் தேறி
வான்செறி கரும்பின் மடற்றலை விரிந்த
நான்றன இசைசெறு நறவிறற் கவலித்
தேங்கனி பழுத்த புன்றலை யீர்ப்ப
வம்மலர்க் கொடியிற் செம்முக மந்தி
மூடவுப் பலவின் முட்புறக் கனியைப்
புன்றலை சுமந்து சென்றிடங் காட்டி
குடமிசைக் கொண்டொரு கூன்மிடை கிழவ
னொருவிலைக் கம்பத்தின் மேலிசை நடக்கென
விரும்புற பயந்து நோக்கினர் மருகக்
கன்னிமதி லுடுத்த காசிமா நகரம்
பெருவளஞ் சுரக்க வாசனிற் றிருந்து
மழுவல னுயர்த்த வழனிறக் கடவுள்
பொன்னடி வணங்கி யின்னிசை பாடலு
மந்திலைக் கண்ணேனை யகல்விசும் பொரீஇச்
சாமியுந் தருவும் பெருவளஞ் சாப்ப
விருமையும் பெற்றனன் யானே யீயுமத்
திருநகர் வளமை பாடி யிருநிலத்
திருநிதிக் கிழவனைக் கறுப்பத்
திருவொடும் பொலிக பெருமகிழ் சிறந்தே. (௮௭)

வண்டுவிடுதூது. அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சிறைவிரிக்கு மதுகரங்கா டேம்பிழிபூம் பொழிற்காசித் திருநா டாளு, மறைவிரிக்குஞ் சிலம்படியார் திண்புயத்துப் புரளுநறு மலர்ப்

பூங் கொன்றை, நறைவிரிக்கு மிதழ்க்கரத்தா லூட்டுமது விருந்துண்டு நயந்து மற்றென், குறைவிரித்தோ ரிருவரிசை கூட்டுண்ணுந் திருச்செவிக்கே கூறு வீரே. (௫௮)

கட்டளைக்கலித்துறை.

கூற்றாடிக் கஞ்சிக் குலையுநெஞ் சேயஞ்சல் கோச்செழியன்
மாற்றாடிக் கஞ்ச மிடப்பா கனைமன்னர் கொன்றகருஞ்
சேற்றாடிக் கஞ்ச மலர்வயற் காசிச் சிவக்கொழுந்தைப்
போற்றாடிக் கஞ்சலி செய்பற்று வேறு புகலில்லையே. (௫௯)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இலைமுகங் குழைத்த பைம்பூ ணேந்திள முலையோ டாடு
மலைமுகங் குழைத்த காசி வாதுர்கண் டலர்கொண் மாரன்
சிலைமுகக் கணைக்கெம் மாவி செகுத்தனை வருந்தத் திங்கட்
கலைமுகம் பொழிந்த காயங் களங்கமாய் விளங்கு மாறே. (௬௦)

கட்டளைக்கலித்துறை.

விளங்கனி யொக்கெறி வெள்விடை யோனெம் விழிக்கணுழைந்
துளங்கனி யாப்புகுந் தாய்விர கானலைத் தூற்றதென்றும்
வளங்கனி பண்ணை வயல்சூ ழவிமுத்த வாணநறுங்
குளங்கனி யென்றுமை கைக்கிளி பார்க்குங் கறைக்கண்டனே. (௬௧)

சந்தத்தாழிசை.

கண்டமட்டு மிருண்டபாதி பசந்தபாதி சிவந்துளார், காசிநாதர் காத்துவைத்த கபாலமொன்றலை இல்லையா, — உண்டுகோடியின் மேலுமைமார் பதம்பெறக்கட வாரவர்க், கொவ்வொருத்தர் கரத்திலெவ்வொர் கபாலம்வேண்டு மதற்கெலாம், — பண்டிருந்த விரிஞ்சன்மார்தலை மாலையுஞ்செல வாய்விடிற், பாரமென்றலை மேல்வருங்கொலெழுங்கடற்றியி ருப்பகன், — கொண்டல்வண்ணர் தாயிலவுந்தயி லார்பிதாமக னுமெனுங், கொள்கைகண்டும் விழைந்தவாவவர் பதஞ்சமீரகுமாரனே. (௬௨)

(௬௨) சமீரகுமாரன் - அநுமன்.

வழுகுரல் செவிசுட விழுமநோய் மிக்குக்
கலாகன் காணு தலமரு மெல்லையிற்
கடவு ளல்லூழ் பிடர்பிடித் துந்தக்
குறைபுணர் கங்கைக் கரைவழிச் சென்றாங்குத்
தேம்பழுத் தழிந்த பூம்பொழிற் படப்பையிற்
கடவுட் கற்பகக் கொடிபடர்ந் தேறி
வான்றொடு கழுகின் மடற்றலை விரிந்து
தான்றன திசைதொறு நறுமிழற் கதலித்
தேங்கனி பழுத்த பூங்குலை யனைப்ப
வம்மலர்க் கொடியிற் செம்முக மந்தி
மூடவுப் பலவின் முட்புறக் கனியைப்
புன்றலை சுமந்து சென்றிங் காட்சி
குடமிசைக் கொண்டொரு கூன்மிசை கிழவ
னொருதிலைக் கம்பத்தின் வடமிசை நடந்தென
விரும்புந பயக்கு நறும்பணை மருதக்
கன்னிமதி லுடுத்த காசிமா நகரம்
பெருவளஞ் சுரக்க வளவிற் றிருக்கு
மழுவல னுயர்த்த வழனிறக் கடவுள்
பொன்னடி வணங்கி யின்னிசை பாடலு
மந்திலைக் கண்டனை யகல்விசும் பொரீஇச்
சுரபியுந் தருவும் பெருவளஞ் சுரப்ப
விருமையும் பெற்றனன் யானே நீயுமத்
திருநகர் வளமை பாடி யிருநிலத்
திருநிதிக் கிழவனைக் கறப்பத்
திருவொடும் பொலிக பெருமகிழ் சிறந்தே. (௬௭)

வண்டுவிடுதூது. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சிறைவிரிக்கு மதுகரங்கா டேம்பிழிபூம் பொழிற்காசித் திருநா
டாளு, மறைவிரிக்குஞ் சிலம்படியார் திரள்புயத்துப் புரணுநறுமலர்ப்

பூங் கொன்றை, நறைவிரிக்கு மிதழ்க்கரத்தா லூட்டுமது விருந்துண்டு நயந்து மற்றென், குறைவிரித்தோ ரிருவரிசை கூட்டுண்ணுந் திருச்செவிக்கே கூறு வீரே. (ருஅ)

கட்டளைக்கலித்துறை.

கூற்றடிக் கஞ்சிக் குலையுநெஞ் சேயஞ்சல் கோச்செழியன்
மாற்றடிக் கஞ்ச மிடப்பா கனைமன்னர் கொன்றகருஞ்
சேற்றடிக் கஞ்ச மலர்வயற் காசிச் சிவக்கொழுந்தைப்
போற்றடிக் கஞ்சலி செய்பற்று வேறு புகலில்லையே. (ருகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இலைமுகங் குழைத்த பைம்பூ ணிளங்கிள முலையோ டாடு
மலைமுகங் குழைத்த காசி மைந்தர்கண் டிலர்கொன் மாரன்
சிலைமுகக் கணைக்கெம் மாவி செருத்துணை வருத்தத் திங்கட்
கலைமுகம் போழ்ந்த காயங் களங்கமாய் விளங்கு மாறே. (சு0)

கட்டளைக்கலித்துறை.

விளங்கனி யொன்றெறி வெள்விடை யோயெம் விழிக்கணுழைந்
துளங்கனி யப்புகுந் தாய்விர கானலந் தூற்றவென்றும்
வளங்கனி பண்ணை வயல்சூழ் மலிமுத்த வாணைநறுங்
களங்கனி யென்றுமை கைக்கிளி பார்க்குங் கறைக்கண்டனே. (சுக)

சந்தத்தாழிசை.

கண்டமட்டு மிருண்டபாதி பசந்தபாதி சிவந்துளார், காசிநாதர் கரத்துவைத்த கபாலமொன்றலை யில்லையா, — ணுண்டுகோடியின் மேலுமையர் பதம்பொறக்கட வாரவர்க், கொவ்வொருத்தர் கரத்திலொவ்வொர் கபாலம்வேண்டு மதற்கெலாம், — பண்டிருந்த விரிஞ்சன்மார்தலை மாலையுந்தெல வாய்விடிற், பாரமென்றலை மேல்வருங்கொ லெனுங்கவற்சியி ருப்பதாங், — கொண்டல்வண்ணர் துயிலவுந்துயி லார்பிதாமக ருமொழுங், கொள்கைகண்டும் விழைந்தவாவவர் பதஞ்சமீரகுமாரனே. (சுஉ)

---

(சுஉ) சமீரகுமாரன் - அநுமன்.

அறசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கும்ப மிரண்டு சுமந்தொசியுங் கொடிநுண் மருங்கு லிறுமிறுமெ
ன், றம்பொற் பசுங்கொம் பன்றுளை யாகத் தணைத்த வகிலேசர், செம்
பொ னிதழித் தெரியலையே சிந்தித் திருப்பத் திரண்முலையும், பைம்
பொ னுருவும் பீர்பூத்த பவளச் செவ்வாய்ப் பசுங்கிளிக்கே. (௬௩)

கட்டளைக்கலித்துறை.

கிள்ளைக் கமிர்த மொழிசாற் றிடுங்கின் சுகவிதழ்ப்பெண்
பிள்ளைக் கிடந்தந்த காசிப் பிரான்பிறை யோடுமுடிக்
கொள்ளைச் சிறைவண்டு கூட்டுண்ணுங் கொன்றையுங் கூடவைத்தார்
வள்ளைக் கலச முலைக்கங்கை யாளுயிர் வாழ்வதற்கே. (௬௪)

கலிவிருத்தம்.

வாட்ட டங்கண் மழைப்புனன் மூழ்கியே
சேட்டி ளங்கொங்கை செய்தவ மோர்கிலார்
நோட்டி ளங்கொன்றை சூடிப்பொ னம்பலத்
தாட்டு வந்த வவிமுத்த வாணரே. (௬௫)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நரைமு திர்ந்தன கண்கள்பஞ் சார்ந்தன நமன்றமர் வழிக்கொண்
டோர், திரைமு திர்ந்துட லிரங்கின இரங்கலை செயலிது மடநெஞ்சே,
யுரைமு திர்ந்தவர் குழாத்தொடு மடைதியா லொழுகொளி முடிக்கங்
கைக், கரைமு திர்ந்திடாக் கலைமதி முடித்தவர் காசிநன் னகர்தானே.

வஞ்சித்துறை.

நகர மாய்மறைச், சிகர மானதான்,
மகர மாயினு, னிகரில் காசியே. (௬௭)

கட்டளைக்கலித்துறை.

இல்லொன் றெனவென் னிதயம்புக் காய்மத னெய்கணைகள்
வல்லொன்று பூண்முலை மார்பகம் போழ்வன மற்றென்செய்கே

---

(௬௭) அகரமாயினான் என்றும்பாடம்.

னல்லொன்று கூட்டித லணைங்கர சோடுமொ ராடகப்பொன்
வில்லொன்று கொண்டவி மூத்தத்தி லேகின்ற விண்ணவனே. (௬௮)

கைக்கிளை மருட்பா.

விண்ணமிர்து நஞ்சாம் விடமு மமிர்தமா
முண்ணமிர்த நஞ்சோ டுதவலாற் - றண்ணென்
கடலொடு பிறந்தன போலுந் தடமலர்க்
கடிநகர்க் காசியுண் மேவு
மடலவிழ் கோதை மதர்நெடுங் கண்ணே. (௬௯)

வஞ்சிவிருத்தம்.

கன்றுடை டாவி கருத்துமா, யுன்னரி றைந்தநொ ரொண்பொரு
ணன்றுமா நக ரானதா, லன்ன லாயவி மூத்தமே. (௭௦)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மூத்தாடி மடித்தலத்தோ ரிளஞ்சேயை யுலகின்ற முதல்வி யோடும், வைத்தாடு வீர்பொதுவி னின்றுமூ மூமக்கிந்த வார மென்னே, கொத்தாடு சடையொடுமா னந்தவனத் தேகுறுந்தா ணைடும்பூ தத்தோ, டொத்தாடு வீரடிகட் கெல்லோமும் பிள்ளைகளென் றுணர்ந்தி டீரோ.

சம்பிரதம். பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உண்டநில கோடியு மூமிழ்ந்திடுவன் மூகிலேழு மொக்கப் பிழிந்து கடலே, மூடன்வாய் மடுத்திடுவன் வடமேரு மூலத் தொடும்பிடுங் கிச்சு ழற்றி, — யண்டபகி ரண்டமு மடித்துடைப் பன்புவன மவை யேழு பிலமே ழுமா, யடைவடை வடுக்கிய வடுக்கைக் குலைப்பனிவை யத்துணையும் வித்தை யலவாங், — கொண்டன்மணி வண்ணனும் மூண்டகக் கன்னனுங் குஞ்சிதச் செஞ்ச ரணமுங், குடிலகோ டீரமுந் தேடியுத லுமண்ட கோளமுந் துருவி யோடப், — பண்டைமறை யோலமிட வெளியினட மாடும் பரஞ்சுடர் பொலிந்த காசிப், பதியிலடை யாமலிப் பல்லுயிர்த் தொகுதியும் பரமபத மடைவிப் பனே. ௭௨

௩௩. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

விரைகுழைக்கு மழைமுகில்காள் விண்டலர்தண் டுழாய்ப்படலை விடலையென்ன, வரைகுழைக்கும் பொழிற்காசி யணிநகருக் கேகுதிரோ லறன்மென் கூந்தல், வரைகுழைக்கு முலைகுழைப்பக் குழைதிரடோ ளழகின்முடி வணங்கி யென்னக், கரைகுழைக்கு மலைகுழைத்த கண்ணுதற்கென் பேதைதிறங் கழறு வீரோ. (௭௩)

கட்டளைக்கலித்துறை.

கறைக்கரும் பைக்குழைத் தான்மத வேளக் கணைத்திலம்பொற்
குழைக்கரும் புங்குழைந் திட்டதந் தோகுளிர் தூங்குதளி
மழைக்கரும் பும்பொழிற் காசிப் பிரான்மலை யாண்முலைபோழ்
முழைக்கரும் புற்றர வாடநின் றாடிய முக்கண்ணனே. (௭௪)

இதுவுமது.

கண்ணைந் தனத்தைக் கரைத்தோடு நீர்கடல் செய்யநின்ற
றுண்ணைந் தனத்துக்கு மருந்தவைத் தாரும்ப ரோட்டெடுப்பப்
பண்ணைந்த நச்சமிர் தாக்கொண்ட காசிப் பரமர்பச்சைப்
பெண்ணைந்த நச்சர வார்த்துநின் றுமெப் பிஞ்ஞகரோ. (௭௫)

கட்டளைக்கலிப்பா.

கருகு கங்குற் கரும்பக டூர்ந்துவெண்
கலைம திக்கொலைக் கூற்றங் கவர்ந்துயிர்
பருகு தற்குக் கரத்தால் விரிநிலாப்
பாசம் வீசி வளைத்திடி னென்செய்கேன்
முருகு நாறு குழற்பொலங் கொம்பனீர்
முத்தர் வாழவி முத்தமு கைக்குடைந்
திருகு பத்தர்கஞ் சித்தமுங் கோயிலா
வுடைய நாதற் குரைத்திடு வீர்களே. (௭௬)

---

(௭௫) பிஞ்ஞகர் - தலைக்கோலமுடையவர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உரைத்த நான்மறைச் சிரத்துமைந் தவித்தவ ருளத்தும்வண் டொருகோடி, நிரைத்த பூங்குழ லிரைவளை யவளொடு நின்றவ ருறைகோயில், குரைத்த தெண்டிரைக் கங்கைமங் கையர்துணைக் கொங்கைமான் மதச்சேற்றைக், கரைத்தி ருங்கடல் கருங்கட லாச்செயுங் காசிமா நகர்தானே. (எஎ)

கட்டளைக்கலிப்பா.

மான மொன்று நிறையொன்று நாணொன்று
மதிய மொன்று குயிலொன்று நீங்குழற்
கான மொன்று கவர்ந்தனு மாமதன்
கணைக்கி லக்கென் னுயிரொன்று மேகொலாம்
வான மொன்று வடிவண்ட கோளமே
மறுவி பாதல மேழ்தாண் மலையெட்டு
நான மொன்று புயமுச் சுடருமே
நயன மாப்பொலி யும்மதி லேசனே. (எஅ)

நேரிசைவெண்பா.

அகிலாண்ட மாயகண்ட மானவகி லேசா
முகிலாண்ட சோலையவி முத்தா - நகிலாண்ட
மின்னவிடைப் பாகா திருநயனஞ் செங்கமல
மன்னவிடைப் பாகா வருள். (எகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அருகுமதன் குழைத்ததழை தெறித்தமுத்தே றுண்டெழுவண் டாற்று மோதை, பெருகுசிறு நாரைவியெள் றறிவழிந்து பேதுறுமிப் பேதைக் கென்றே, முருகுபசும் பொன்னசும்பு தசும்புவிசும் பிரவியென வுடைத்த கந்த, முருகுயிர்க்கும் பொலங்குடுமி விமானத்திற் பொலிந்தவிமுத் தனாரே. (அ0)

கட்டளைக்கலித்துறை.

முத்திக்கு வேட்டவர் மோட்டுடற் பார முடைத்தலையோ
டத்திக்குஞ் சாம்பற்கு மோம்பின ராலிவை யன்றியப்பாற்
சித்திப் பதுமற் றிலைபோலுங் காசிச் சிவபெருமான்
பத்திக்குக் கேவல மேபல மாகப் பலித்ததுவே. (அக)

விருத்தக்கலித்துறை.

பல்வே றுருவாய் நின்றருள் காசிப் பதியுள்ளீர்
வில்வே றில்லைப் பூவல தும்பும் வேறில்லை
யல்வே றல்லாப் பல்குழ லாளை யலைக்கின்றான்
சொல்வே றென்னே பாரு மனங்கன் றொழிலூனே. (அஉ)

கட்டளைக்கலித்துறை.

தாதென் றவர்முன் றெளித்தோடித் தன்னை யிழந்தவர்முன்
யாதென்று சென்றிடுங் காசிப் பிரானுடம் பென்பதென்போ
டேதென்று விட்டொழிந் தார்களிப் பாருவட் டாதவின்பத்
தேதென் றடைந்தவர்க் குண்ணக் கிடைப்பது நிவிடமே. (அங)

கட்டளைக்கலிப்பா.

தீவி டங்கொடுத் தேயமு துண்டவத்
தேவ ருக்கொளித் துத்திரி கின்றநீர்
பாவி டும்மலர்ப் பஞ்சணை மேலிவள்
பவள வாயமிர் துண்டாற் பழுதுண்டோ
நாவி டங்கொண் டொருவன் முகங்கர
நான்கி னுங்கடிக் குந்தார கத்தைவிட்
டாவி டங்கொண் டருட்காசி வீதிக்கே
யாடல் செய்திடு மானந்தக் கூத்தரோ. (அச)

நேரிசைவெண்பா.

ஆனந்த வல்லியுட னானந்தக் கானகத்தே
யானந்தக் கூத்தா டருட்கடலை - யானந்தங்

கொள்ளத் தினைத்தாங் கூடாதே லிப்பிறவி
வெள்ளத் தினைத்தாடு வீர். (௬௫)

கலிவிருத்தம்.

வீர மென்பது வின்மதற் கேகுணங்
கோர மென்பது கொண்டிருந் தாவதென்
னீர மென்ப திலையிவர்க் கென்றதால்
வார மென்பதி வாழவி முத்தரோ. (௬௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முத்து நிரைத்த குறுநகையீர் முளரிக் கணையான் கணைகடிகைப்
பத்து நிரைத்தா னினித்தொடுக்கிற் பாவைக் கொருதிக் கிலைபோலு
மொத்து நிரைத்த வுடுநிரையோ டொன்றோ பலவோ வெனவரும்பூங்
கொத்து நிரைத்த பொழிற்காசிக் குழகற் கொருவர் கூறீரோ. (௬௭)

கட்டளைக்கலித்துறை.

கூற்றடிக் கஞ்சி முறையோ வெனக்குல நான்மறையும்
போற்றடிக் கஞ்சம் புகலடைந் தேமுனைப் போலவைத்தாற்
சேற்றடிக் கஞ்ச வயற்காசி நாத செருப்படிக்கும்
மாற்றடிக் குந்தொண்டர் வில்லடிக் கும்புகன் மற்றில்லையே. (௬௮)

மடக்கு. கட்டளைக்கலிப்பா.

இல்லை யென்ப திலையோர் மருங்கிலே
யெவ்வ றங்களு முண்டோர் மருங்கிலே
கொல்லு கின்ற நெழுதருங் கூற்றமே
கூறு மாற்ற மெழுதருங் கூற்றமே
வில்லு மேற்றிடு நாணும்பொன் னாகமே
விடுக ணைக்குண்டு நாணும்பொன் னாகமே
மல்லன் மார்பின் மணிமுத்த மென்பதே
வாச மையர்க் கவிமுத்த மென்பதே. (௬௯)

---

(௬௭) திகை - திக்கு.

கலிவிருத்தம்.

என்ப ணிக்கும் பணியென் றிரந்தபோ
தென்ப ணிக்கும் பணிதிக்கு மேக்கென்று
ஒன்ப ணிக்கும் பணியா யிருந்ததோ
வென்ப ணிக்குமின் பாமகி லேசர்க்கே. (கூ0)

நேரிசைவெண்பா.

சேயூர மூரக் கிளர்தோ ளகிலேசர்
மாயூர மூருமொரு மைந்தற்குத் - தீயூரு
மவ்வேலை யீந்தா ரடித்தொழும்பு செய்தொழுகு
மிவ்வேலை யீந்தா ரெமக்கு. (கூக)

கூஉ. அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒருகை விடுத்தா னெனக்குருகே கூறாய் சுகத்தை விடுத்தானென்
றருகு வளருஞ் சுகமேசென் றறையாய் நிறைநீர் தெரிந்துபால்
பருகு மனமே யனம்விடுத்த படிசென் றுரையாய் படிவருளந்
திருகு பசும்பொன் மதிற்காசி யுடையார் வரித்தோ லுடையார்க்கே.

இதுவுமது.

உடுத்த கலையு மேகலையு மொழுகும் பணியும் விரும்பணியுந்
தொடுத்த வளையுங் கைவளையுந் துறந்தா ளாவி துறந்தாளு
மடுத்த துமது பரந்தாம மதனு லிதழிப் பரந்தாமம்
விடுத்து விடுவா ளலளெனப்போய் விளம்பீர் காசி வேதியர்க்கே. கூ௩

நேரிசைவெண்பா.

வேதத் தாரகர் விரக ரகிலேசர்
பாதத் தாரகப் பரிபுரத்தார் - காதரிவர்
சேவடிக்கண் டாரோ திறம்பிழைத்துத் தென்புலத்தார்
கோவடிக்கண் டாரோ குலைந்து. (கூச)

---

(கூ௩) வளை - கங்கணம். (கூச) விரகு - அறிவு.

கட்டளைக்கலித்துறை.

குலைவளைக் கும்பழுக் காய்முழுத் தாறு கொழுங்கமுகின்
றலைவளைக் கும்பொழிற் காசிப் பிரான்றடங் கோட்டுப்பைம்பொன்
மலைவளைக் கும்புயத் தாண்மையென் ஞாந்தெவ் வளைந்துகழைச்
சிலைவளைத் துத்தன் படைவீ டமர்க்களஞ் செய்திடினே. (௬௫)

சந்தத்தாழிசை.

இடமருங்கினின் மருங்கிலாதவவள் குடியிருக்கவுநன் முடியில்வே, றிவளொருத்தியை யிருத்திவைத்துமதி மோகமோகினியி னுருவமாய், — நடமிடிங்கிவடன் மேலும்வைத்துள நயந்தொர்பிள்ளைமுன் பயந்தனீர், நங்குலத்திருவை மருவினின்றுபிறர் நாவளைக்கவிட மாகுமோ, — குடமுடைந்ததென வானினங்கண்மடி மடைதிறந்துபொழி பாலொடுங், கொழுமடற்பொதி யவிழ்ந்துகைதைசொரி சோறுமிட்டணி திரைக்கையாற், — கடல்வயிற்றினை நிரப்புகின்றசுர கங்கைகுண்டகழி யாநெடுங், ககனநீள்குடுமி மதில்களேழுடைய காசிமேவுமகிலேசரே. (௬௬)

மடக்கு. தாழிசை.

சரியோடொழுகுங் கரவளையே சரக்கோடொழுகுங் கரவளையே
தையற்கனமே தீவிடமே தவழுங்கனமே தீவிடமே
சொரிவதடங்காக் கண்ணீரோ துளிக்குந்தடங்காக் கண்ணீரோ
துயரோவிதனந் தினமே சூரற்கழுத்தி னந்தினமே
கருகிப்புலர்ந்த நாவாயே கரைவந்திழியு நாவாயே
கண்கணுறங்கா கழுநீரோ கடலேகழியே கழுநீரோ
யரிவையிவளுக் குருகீரோ யனத்தோடுறங்குங் குருகீரோ
யளியாரிதழி வனத்தாரோ யருளானந்த வனத்தாரோ. (௬௭)

உளர். எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வனத்தினுமோர் பொற்பொது முகப்பினு நினைப்பவர் மனத்தினு நடித்த ருள்செய்வார், சினக்கயல் விழிக்கடை கருக்கொள்கரு

ணைக்கொடி திளைத்தமரு மத்த ரிடமா, நணைக்கமல நெக்குடை தாக்குடை துறைச்சுர நதிக்கரையின் முட்டைகொ லெறுக், கனத்தபரு முத்திணை யணைத்தன மினத்தொடு களிக்குமவி முத்த நகரோ. (௯௮)

மேற்படி வேறு.

கருமுகில் வெருப்பவற விருளுமள கத்தினிவள் கதிர்முலை முகட்டணைய வணைமீதே, வருகில ரெனிற்செவியி லொருமொழி சொலச்சமையம் வருகென வழைக்கிலுடன் வருவார்காண், சுரநதி சுருட்டும்விரி திரைகளொரு முத்திமக டணைமுலை திளைக்குமவர் மணநாளின், முரசொடு முழக்குகுட முழவென விரைக்கவலை முரலுமவி முத்தநக ருடையாரோ. (௯௯)

நேரிசையாசிரியப்பா.

உடைதிரைக் கங்கை நெடுநதித் துறையின்
வலம்புரி யென்னவாங் கிடம்புரி திங்கள்
வெள்ளிவீ ழன்ன விரிநிலாப் பரப்பும்
பொன்வீ ழன்ன புரிசடைக் கடவுள்
முடவுப் படத்த கடவுட் பைம்பூண்
கறங்கெனச் சுழலுங் கால்விசைக் காற்று
துமிழ்தரு குருதித் திரடெறித் தாங்குத்
திசைதொறுந் தெறித்த திரண்மணிக் குலங்கள்
வானேறு கடுப்ப வொளிவிற் றுக்கலுங்
கையெடுத் தெண்டிசைக் களிறும் வீறிடத்
தெய்வநா டகஞ்செய் வைதிகக் கூத்தன்
வரைபகப் பாயும் வாரணக் குழாத்தொரு
கருமுக மந்தி கால்விசைத் தெழுந்து
பழுக்காய்க் கமுகின் விழுக்குலை பறித்துப்
படர்தரு தோற்றஞ் சுடரோன் செம்மல்
தசமுகத் தொருவன் றிரண்முடி பிடுங்கி

விசையிற் பாய்ந்தென விம்மிதம் விளைக்குந்
தடமலர்ப் படப்பைத் தண்டலைக் காசிக்
கடிநகர் புரக்குங் கண்ணுதற் செல்வன்
வேம்புங் கடுவுந் தேம்பிழி யாகச்
செஞ்செவி கைப்பயான் றெரித்த சின்மொழி
யஞ்செவி மடுத்தாங் களித்தன னதனால்
வேத்தவை வியப்ப விளைத்தேன் பில்குந்
தேத்தமிழ் தெளிக்குஞ் செந்நாப் புலவீர்
மண்மகள் கவிகைத் தண்ணிழ றுஞ்சப்
புரவுபூண் டிந்திர திருவொடும் பொலிந்து
முடிவிலா முடியா முழுநலங் கொடுக்குஞ்
செந்நெறி வினவுதி ராயி னின்னிசைப்
பாத்தொடுத் தடுத்த பரஞ்சுடரை
நாத்தழும் பிருக்க வேத்துமி னீரோ. (௧௦௦)

காசிக்கலம்பகம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

## சகலகலாவல்லிமாலையென்னும்

# சரசுவதிதோத்திரம்.

கட்டளைக்கலித்துறை.

வெண்டா மரைக்கன்றி நின்பதந் தாங்கவென் வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொ லோசக மேழுமளித்
துண்டா னுறங்க வொழித்தான்பித் தாகவுண் டாகும்வண்ணங்
கண்டான் சுவைகொள் கரும்பே சகல கலாவல்லியே. (க)

நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள் வாய்பங்க யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே கனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ் சுமக்குங் கரும்பே சகல கலாவல்லியே. (உ)

அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமு தார்ந்துன் னருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ லோவுளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங் கலாப மயிலே சகல கலாவல்லியே. (ங)

தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்வட நூற்கடலுந்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே சகல கலாவல்லியே. (ச)

பஞ்சப் பிதந்தரு செய்யபொற் பாதபங் கேருகமென்
னெஞ்சத் தடத்தல ராததென் னேநெடுந் தாட்கமலத்

இதை வெள்ளைக்கிழத்திமாலை எனவும் வழங்குவர்.

தஞ்சத் துவச முயர்த்தோன்செந் நாவு மகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசொத் திருந்தாய் சகல கலாவல்லியே. (௫)

பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யா
னெண்ணும் பொழுதெளி தெய்தநல் காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலுங் கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங் கருத்து நிறைந்தாய் சகல கலாவல்லியே. (௬)

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல் காயுளங் கொண்டுதொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பா லமுதந் தெளிக்கும்வண்ணங்
காட்டும்வெள் ளோதிமப் பேடே சகல கலாவல்லியே. (௭)

சொல்விற் பனமு மவதான முங்கல்வி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமைகொள் வாய்நளி னாசனஞ்சேர்
செல்விக் கரிதென் றொருகால முஞ்சிதை யாமைநல்குங்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே. (௮)

சொற்கும் பொருட்கு முயிராமெய்ஞ் ஞானத்தின் றோற்றமென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர் யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ டரசன்ன நாணநடை
கற்கும் பதாம்புயத் தாளே சகல கலாவல்லியே. (௯)

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய் வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ சகல கலாவல்லியே. (௧௦)

சரசுவதிதோத்திரமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

குமரகுருபரசுவாமிகள் திருவடிவாழ்க.

சிவசண்முகன்றுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிலஅருஞ்செய்யுளுரைக்குறிப்பு.

———ஃ———

## மீனாக்ஷியம்மைபிள்ளைத்தமிழ்.

### காப்புப்பருவம்.

௧௦-வது செய்யுள்:—கார்முகச்சூற்புயல்வர வருமிளையகுமாரி என உமாதேவியாரை விஷ்ணுமூர்த்திக்குத் தங்கையென்றது, ஓர் சிருட்டியில் விஷ்ணுமூர்த்தியையும் உமாதேவியையும் இடப்பாகத்திலும், பிரமதேவரையும் இலக்குமியையும் வலப்பாகத்திலும், உருத்திரமூர்த்தியையும் கலைமகளையும் உள்ளத்திலும், சிவபெருமான் றோற்றுவித்தமைநோக்கி. இதைக் காஞ்சிப்புராணம் வீராட்டகாசப்படலத்தில் "நிலையியற் பொருளு மியங்கியற் பொருளு நிலைபெறத் தொழிற்படுத் துடைய, தலைவனங் கவனே பணிவரைப் பிராட்டி தன்னையு நின்னையு மிடப்பான், மலரணைப் புத்தே டன்னையு மெனையும் வலப்புடைக் காலருத் திரனைக், கலைமக டனையு முளத்திடைத் தந்தான் காத்துயிர்த் தழிப்பது கருதி." என விஷ்ணுமூர்த்தியைநோக்கி இலக்குமி கூறியிருத்தலானும், கேசவருக்குப்பின்னுதித்தமையால் உபகேசியெனத் திருநாமம்போந்திருத்தலானு முணர்க.

### தாலப்பருவம்.

௬. கார்முதல் புனலிறுதியாகக் கூறப்பட்டவற்றிலே பொருகின்ற கயன்மச்சங்கள்போல, குழலினிடத்தும் குழையினிடத்தும் (இயற்கையாகவே) போர்புரிகின்ற கண்களாகிய கயல்கள், ஆடவர்மார்பினும் திருவினும் சிலையினும் புயமலையினும் தாரினும் பொருதிடமதுரையென்றவாறு. பொருகயலிற்பொருதிடமதுரை என இயையும்.

திரு - கண்டோரால்விரும்பப்படும் பெருஞ்சிறப்பு. எனவே, ஆடவரு லாப்போதுங்கால் அவரது மார்பழகுமுதலியவற்றை மங்கையர் கண் கள்பருகியக் கண்டுகளிக்கும் மதுரையென்பது கருத்து. இச்செய்யுள்மு தலியவற்றில் வருவித்துரைப்பனவெல்லாம் இசையெச்சமெனக்கொ ள்க.

எ. (தடாதகைப்பிராட்டியார் திக்குவிசயஞ்செய்தநாளில்) சே னாதிபதிகளும் திசைத்தலைவர்களும் யுத்தத்திலே, தங்களுடைய வில்லி னுனிகளைத் தேரிலுள்ளகொடிகளோடு இழக்கும்படி, (பிராட்டியாரு டைய) சேனைத்தலைவர்களால் கணைமழைசொரிய, பெருகியகுருதிக் கடல் எனக்கூட்டுக. சிந்தியிடுமென்பது சோனைக்குரிய அடை. என வே, சிந்தியிடுஞ்சோனைபோலும் கணைமழையென்பதுபொருள். அப் பெயர்மீனென்றது ஆனைமீன் குதிரைமீன் என்னும் இரண்டையும். இவை கடலின் கணுள்ளன.

## சப்பாணிப்பருவம்.

கூ. மன்னவர் தேவர்வாளின்மடிந்தவராகி (வீரசொர்க்கமடை ந்து) அங்குள்ள அரம்பையர்களின் பானற்கணையும் முலைக்குவடுமா கிய படையிற்பட எனக்கொள்க.

அ. கூளிகள்போலவும், காளிகள்போலவும், வைரவக்கடவுள் போலவும் செருமலைந்துநின்ற சேனாபதிமுதலியோரழியும்படி, (தடா தகைப்பிராட்டியாரால் விடுக்கப்பட்டுச்) சென்றவாளிகள் சிந்திடக்க ண்டு, நந்திபிரான் நின்றிலன் எனக்கூட்டுக.

## முத்தப்பருவம்.

கூ. தடாதகைப்பிராட்டியாருடைய வெற்றிக்கொடியானது, சேரனுடையவிற்கொடியும் சோழனுடையபுலிக்கொடியும் தோற் றோட மீனொடுவிளங்குதல்போல, துகிற்கொடிகள், மேகவில்லும் அம் புலியும் தாழ்ந்தோடும்படியுயர்ந்து, வான்மீனைமணந்து, பொலியுமெ னக்கொள்க. மேகச்சிலை போலிச்சிலையாகலின் முனைக்கணை நுனி பரி

சியாத செஞ்சிலையெனப்பட்டது. உகந்த என்பது வடவரைக்குரிய அடை.

எ. மதுக்கடலை அறப்பருகிப் பிறைமதியொடுதோன்றும் கருமுகில்களோடு மின்னல்கள் வெருவிப்பெயரவும், நக்ஷத்திரங்கள் வெருக்கொள்ளவும், (மதுரைப்பதியிலுள்ள) வெடிவரால் குதிகொள்ளும் விட்புலமெனவும்; குடத்திலுள்ளமதுவை அறப்பருகிய காருடலத்தையும் வெண்பிறைமதிபோலும் கூனிய அரிவாளையேந்திய கையையுமுடைய கடைஞர்களோடு கடைசியர்கள் வெருவிப்பெயரவும், மீன்கணம் வெருக்கொள்ளவும் வெடிவரால் குதிகொள்ளும் விளைபுலமெனவும் கூறியது உருவகம். மீனென்றது நக்ஷத்திரங்களையும் மீன்களையுமுணர்த்தலின் சிலேடை. வெடிவரால் - வெடிபோலத் துள்ளிச் செல்லும் வரால்; கடுந்தொனியையுடைய வராலெனினும் அமையும்.

அ. சூரியனுடைய இரதத்திற்பூட்டிய உயர்ந்தசக்கரமானது, சக்கரவாளகிரியிற் றிரிந்துநாணும்படி ஆஞ்ஞாசக்கரம் அச்சம்விளைத்தலாவது, சூரியன்முதலிய கிரகாதிபதிகள் உலகிற்குக் கெடுதிவிளையாவண்ணம் தினமும் தத்தங்கதிகளிலே தவறாதுசஞ்சரிக்குமாறு பணித்தல். திரிபுலம்ப என்பதை திரிபு + உலம்ப, திரி + புலம்ப எனப் பிரித்து, முந்தியதற்கு திரிந்துநாண எனவும்; பிந்தியதற்கு திரிந்துபுலம்ப எனவும் பொருளுரைப்பதுண்டு. ஆஞ்ஞாசக்கரமாவது வெற்றியால்விளையும் பிரதாபம்.

## அம்மானைப்பருவம்.

௯. அம்பிகையைத் தனிமுதல்வர்க்கு அம்மனையென்பதின்கருத்தைச் சிதம்பரச்செய்யுட்கோவை முப்பத்துமூன்றாவது செய்யுளுக்குக் குறிக்கப்படும் உரையிற்காண்க.

---

## மீனாக்ஷியம்மையிரட்டைமணிமாலை.

௧௨. வலிய விசாலமாகிய துதிக்கைக்குநேரொத்த வால்களையுடையனவாகி எட்டியானைகள் தாங்கப்படும் திருவாலவாயிலிலுள்ள

இந்திரவிமானத்திலுறையும் மருந்துபோல்பவளே, மலயத்துவசன் பெற்ற தெளிந்தவமிழ்தமே, பிறவியை அவாவிநொந்து மிகமெலிந்த வெனக்கு, இரண்டுதிருவடிமலர்களையும் பாலித்தருளுகின்ற கல்லால விருக்ஷத்தடியில்வீற்றிருக்கும் சிவபெருமானையடையுமாறு கருணை புரிவாயாக. எ-று. இவ்வாறுபிரார்த்தித்தது அருட்சத்தியால் சிவபெருமானையடையவேண்டுமென்னும் சித்தாந்தநோக்கி. கருவால் என்புழி மூன்றனுருபை இரண்டனுருபாகக்கொள்க. ஆலவாய் என்புழி வாயென்பது எழனுருபு. பிறவிப்பிணியையகற்றலின் மருந்தெனவும், அழியாநிலைமையையளித்தலின் அமிர்தமெனவும் கூறினார்.

---

## மதுரைக்கலம்பகம்.

உசு. தொடுத்து அணிந்துகொண்டதும் அழகிய தேவர்களுடைய எலும்பே, சுமந்துகொண்டிருப்பதும் அலைகளையுடைய கங்கையே, தாங்கிநிற்பதும் வாமனமூர்த்தியினுடைய சரீரமே, தந்தத்தைமுறித்ததும் (விஷ்ணுவினவதாரம்)ஆகிய பன்றியையே, (எப்பொழுதும்)ஏற்றுக்கொள்வதும் பிராமணர் முனிவர்களுடைய ஆசீர்வசனங்களே, தரித்துக்கொள்வதும் சில பாம்புக்கூட்டமே, (யாவர்க்கும் தாம்)பாலிப்பதும் முனிவர்களுடையவுலகத்தையே, சோமசுந்தரக்கடவுள் (தமக்குரிமையாகக்)கொள்வதும் கடம்பவனத்தையே. எ-று. விஷ்ணுமூர்த்தியின் வாமனவதாரத்தில் தோலைச்சட்டையாகத்தரித்து உடல்முழுவெலும்பைச் சூலத்திலேற்றதும், வராகாவதாரத்தில் தந்தத்தைமுறித்து மார்பிலணிந்ததும், கூர்மாவதாரத்தில் அதனோட்டைப்பெயர்த்து மார்பிலணிந்ததாகப் பின்னர்க்கூறுவதும் கந்தபுராணமுதலியவற்றுட்காண்க. முனிவர்கள் பன்னகசாலையில் வசிப்பவராதலின் பன்னகரெனப்பட்டனர். பன்னகம் என்பதில் க, பிரத்தியயம்; பாடகசாலை என்பதிற்போல. அல்லது, பல் நகர் அந்தணர் எனமாற்றிப் பலநகரங்களிலுள்ள அந்தணரெனினும் அமையும். பவனம் - உலகம். மடக்குகடோறும் ஏகாரங்களை ஏற்றபெற்றிகொள்க.

௯அ. சோமசுந்தரக்கடவுளுக்கு நடிக்குமிடமும் வெள்ளியம்பல மே, அந்தரங்கத்தானமாவது அன்னியமானவற்றை யிகழ்ந்தோர்களுடைய இதயமே, மார்பிலணியப்படும் பல ஆபரணம் எலும்பும் பாம்பும் ஆமையோடுமே, ஞானம்பெருமைக்குக்காரணமும் (அக்கடவுளை) யான் வழிபடாதிருத்தலே, விரும்பப்படும்பாடலும் பெருமைபெற்ற கவிகளிடத்துள்ள அன்பே, வீற்றிருக்கும்விமானமும் (இந்திரனால்) விண்ணினின்றும்வந்த விமானமே, திருந்திய மூலட்டானம் பெரிய மதிலையுடைய மதுரையே, வெள்ளியங்கிரியிற்றங்குவது செயற்கையே. எ-று. ஆலயம் - மறைவிடம். அருந்தவரிதயத்தைக் கடவுளுக்கு மறைவிடமாகவும், திருக்கோயிலை வெளிப்படுமிடமாகவும் கூறுவது நூற்றுணிபாகலின், அங்கமென்பது ஈண்டு இதயத்தையுணர்த்திற்று. "நண்ணுமாலய மாதவரங்கமே" எனக் காசிக்கலம்பகத்திலுணர்த்திய தும் இக்கருத்தே பற்றியென்க. அங்கமென்பதற்கு அழகியதலையென க்கொண்டு தலையென்பதற்கு பிரமரந்திரமென்றேனும், துவாதசாந்த மென்றேனும் பொருள்கொள்வதும்; விரும்புபாடலு மாகவிமானமே என்பதற்கு, விரும்பியபாடலும் இலக்கணவரம்புள்ள சிறந்தகவிகளே எனப் பொருள்கொள்வதும் உண்டு. மானம் - (இலக்கண) வரம்பு. வெள்ளியங்கிரியில்வீற்றிருப்பது செயற்கையெனவே இயற்கையாகிய மூலட்டானம் மதுரையென்றவாறு. இதை "மூளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" என்னும் திருநாவுக்கரசுநாயனார்தேவாரத்தா னும் உணர்க. மூலட்டானம் என்பது மூலஸ்தானம்என்பதின் மரூஉ.

௫௫. எமது தலைவனார் மதுரேசர்வாழும் வரையையகன்று செல்லும் இக்காலமானது, வெள்ளியமுல்லையினுடைய சிற்றரும்புகள் எங்கும் மணம்வீசத் தொடங்குங்காலமும், இளமகளிர் கொழுநரொடு கலந்துவக்குங்காலமும், எம்மவர்கள் வீதிதொறுநின்று (அன்னியரனு காவண்ணம்)சீறி அவமதிக்குங்காலமும், அநங்கனாகியமன்மதனும் வரிந்தவில்லைக்கொண்டு உருவொடுவெளிப்படுங்காலமும், இளஞ்சந்திரன் நம்முடைய பேரறிவினுவகையை அழிக்குங்காலமும், மெல்லிய இளந்தென்றலும் எமதுயிரழியச் சஞ்சரிக்குங்காலமும், மனமானது

கற்போடும் நாளோடும் மாறுபடுங்காலமும் (ஆகுமேல் எங்ஙனமுய் வது.) எ-று.

ருஅ. அழகிய அரதனங்கள்பதித்த ஆபரணங்கள் எலும்பின்கோவையே, அன்பமைய அங்கீகரிப்பது என்னுடையதொண்டே, திருமேனியிலணியுஞ் சந்தனமும் வெள்ளியவிபூதியே, யாசிக்கவிரும்புவதும் வெள்ளியபிச்சையே, (திரிபுரத்திலே) பாணத்தைவிடுக்கச் சுமந்தது ஒருபொன்மலையே, (காதலோடு) தாங்கியெடுப்பது ஒப்பற்றமுருகக்கடவுளென்னும் புதல்வனையே, (இத்தன்மையராகி) உலகங்களையீன்ற உமாதேவிமணாளராய்விளங்கும் சோமசுந்தரக்கடவுள்வாழ்வது கூடலென்னும் திவ்வியதலமே. எ-று. முதிர்வில்லாதது வெண்மையெனப்படுதல்போலச் சில்பலி, வெண்பலியெனப்பட்டது. சில்பலி-சிறுபிச்சை.

ருகூ. ஈரம் மதிக்கும் இளந்தென்றலுக்கும் இன்று - குளிர்ந்த சந்திரனிடத்தும் சிறிய தென்றலிடத்தும் (தமது செங்கோன்மையைச்) செலுத்தாமல், — எய்யும் மதன் கோரமது இக்கும் கொடுங்கோலுமே கொடுங்கோன்மை முற்றும் தீர மதிக்கும் செங்கோன்மை - எய்கின்ற மன்மதனுடைய அச்சத்தை விளைக்கும் கருப்புவில்லும் கொடிய அம்புமே கொடுங்கோன்மைமுழுமையும் தீரும்படி செலுத்திய செங்கோன்மையானது, — சில தேவர் மதி சோர மதிக்கும் கடல் தீ விடம் கொண்ட சொக்கருக்கு என்றும்-(விஷ்ணுமூர்த்திமுதலிய) சிலதேவர்கள் மனம்வருந்தக்கடைந்த பாற்கடலிற்றோன்றிய கொடியவிடத்தை உட்கொண்டகொத்த சோமசுந்தரக்கடவுளுக்கு யாதுசிறப்பைவிளைக்கும். எ-று. முத்தியநான்கனுருபிரண்டையும் ஏழனுருபாகக்கொள்க. கோரமது என்பதில் அது - பகுதிப்பொருள்விகுதி. ஏகாரம் பிரிநிலை. மன்மதனுக்குரிய குடையுந்தேருமாக இருந்துகொண்டு என்னைவருத்தும் சந்திரனையும் தென்றலையும் அடக்காத இவர்க்கு அவனுடைய வில்லம்புகளின்கொடுமையை வென்றனரென்னும்புகழ் யாதுசிறப்பைவிளைக்குமென்பது கருத்து. இது தலைவியிரங்கல்.

எரு. அறியாமையுடையகிளியே! சக்கரப்படையையுடைய விஷ்ணுமூர்த்தியின்புதல்வனாகிய மன்மதன் அநங்கனாகியிருந்துகொண்டே இரண்டதனங்களினும் மலர்போலுங்கண்களினும் தொடுத்த அம்புகளின்கொடுமைகளைமாத்திரமா? எனது தாய்தொடுத்த வீண்சண்டையையும் மதுராபுரியில்வாழும் சோமசுந்தரக்கடவுளுக்கு ஓதினாயில்லை: நீ வாழ்வாயாக. எ-று. வாழி என்பது ஈண்டு வருத்தமிகுதியால், வாழ்த்துவதுபோன்று வைதலையுணர்த்திற்று. "வாழ்ந்துபோதீரே" எனச் சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூர்த்தேவாரத்தில் அருளியவாற்றானுமுணர்க. ஊழிமுதல்வர்க்கு ஓதலையெனக்கூட்டுக. ஊழிமுதல்வர் - ஊழிக்காலத்தும் அழிவில்லாத முதற்கடவுள். அம்பு அதன்கொடுமையையுணர்த்தலின் ஆகுபெயர். அம்போ என்புழி ஓகாரம் வினாப்பொருட்கண்வந்தது. வம்பும் என்னும் உம்மை விகாரத்தாற்றொக்கது. அளவுகடந்ததுன்பத்தை தலையளவாயிற்றென்றேனும் தலைக்குமிஞ்சியதென்றேனும் கூறுவது வழக்கமாதலால் அவ்வாறே, அம்பால்விளையும்வருத்தமோ இரண்முலையும் கண்மலருமாகிய அளவில்நின்றன; தாய்தொடுத்த வம்பின்வருத்தமோ தலையளவாயிற்று. எனப் பொருள்கொள்ளினும் அமையும். இப்பொருட்கண் வாழியென்பது இடைச்சொல். கிளி முன்னிலை. உருவழிந்தேன் என்பதும்பாடம்.

அஎ. குண்டுநீர்ப்பட்டத்து ஒண்டுறைச்சங்கம், முத்தைத் தன்னுள்ளேபயிலப்பெற்று, காவின்கண்ணேயியங்குதலற்று, சிறந்த இசைக்கூறுபாடுகளை ஆராய்ந்து ஒலித்தனவாகி, சஞ்சரிக்குமெனக்கொள்க. நீர்த்துறைச்சங்கமாகலின் அதையகலாமைநோக்கி காவின்கண்ணேயியங்குதலற்று என்றார். இயங்கு முதனிலைத்தொழிற்பெயர். தேர்தல் அதன்காரியமாகிய ஒலித்தலையுணர்த்திற்று. வண்டமிழ்க்கடலின் தண்டுறைச்சங்கமோ, தனித்தனிமுற்றுப்பெறும் செய்யுளிற்பயின்று, காவியங்கற்று, சித்திரப்பாட்டிலக்கணங்களை ஆய்ந்தனவாகி, ஒழுகுமெனக்கொள்க. தமிழ்க்கடற்றுறை-அகமும் புறமுமாகிய பொருட்கூறுபாடு. சங்கம் - வித்துவசங்கம். சித்திரப்பாட்டியல் - அக்காலத்துவழங்கிய ஓர் இலக்கணப்பாட்டியலாகவுமிருக்கலாம். வெண்பாப்பாட்டியல்

என்பதுமுதலியனபோல. முத்தகத்தினிலக்கணம் "முத்தகச் செய்யுட் டனிநின்று முடியும்." என்னும் தண்டியலங்காரத்தானுமுணர்க.

---

## திருவாரூர் நான்மணிமாலை.

௩.௯. கமலேசர்திருவுருவும் உமையாள்திருவுருவும் முருகக்கடவுள் திருவுருவுமாகிய மூன்றும், உலகிற்குக்காரணமான அருவம் உருவம் அருவுருவமாகிய இலய போக அதிகாரமென்னும் முக்குணவடிவமாக இருத்தலினால் இவரை உலககாரணரென்று அறிஞர்கூறுகின்றனர். எ-று. இப்பொருள்கொள்ளுங்கால், அருவுரு என்பது அரு உரு அருவுரு என மூன்றாகப்பிரிக்கப்படும். இவ்வாறன்றி, சத்துவம் வெண்ணிறத்ததாய் ஆன்மாக்கட்கு ஞானத்தையும், தாமதம் கருநிறத்ததாய் போகத்தையும், இராசதம் செந்நிறத்ததாய் அவ்விரண்டன் பிரவர்த்தியையும் விளைவித்தலின் முக்குணங்களையும் மூவர்க்கும் உருவகித்ததெனக்கொள்வதும் ஒன்று. தியாகேசப்பெருமான் சோமாஸ்கந்த மூர்த்தியாகலின் இவ்வாறுகூறினார்.

---

## முத்துக்குமாரசுவாமிபிள்ளைத்தமிழ்.

### செங்கீரைப்பருவம்.

௧0. எந்தாயின் கொங்கலர் மைக்குழல்வாழ் பொறிவண்டே என்றது, திருவுத்தரகோசமங்கையிலே சிவபெருமான் உமாதேவியாருக் குபதேசிக்குங்கால் முருகக்கடவுள் வண்டுருக்கொண்டு கூந்தலிலிருந்து கேட்டனரென்னும் அத்தலபுராண சரித்திரம்நோக்கி.

### அம்புலிப்பருவம்.

உ. சந்திரனே, முருகக்கடவுள் பலநூல்களையுமருளிச்செய்த பெருமைபெற்ற சங்கப்புலவர்கள் கலைகளினுடையசுவைகளைக் கைக்கொள்ளுமாறு (அவர்களுக்குத் தலைவராக) வீற்றிருந்து உவந்தருளுமாறுபோல, நீயும், கீர்த்திபெற்ற பெரியதேவர்கள் உன்னுடைய கலைகளிற்பெருகும் அமுதத்தைநுகர விருந்துசெய்யும் உவகையைமேற்

கொண்டாய்; அக்கடவுள், முன்வெளிப்பட்டுச்சீறிக் கிரவுஞ்சமலையைப்போலவே சமுத்திரத்தையுந்தாக்கிய ஒளிபெற்ற அவ்வேற்படையை உயர்த்திவிளங்குமாறுபோல, நீயும் உதித்து, நினக்குமுன்னர்ப் பெருகி மலைபோல அலைகளைமோதுகின்ற அவ்வடவாமுகாக்கினிக்கு இடமாயுள்ள சமுத்திரத்தை விரும்பினாய்; அக்கடவுள், குற்றமில்லாத (தம்முடைய) அருட்குணங்களைத்தியானிக்கும் யாசகர்களுடைய முகங்கள் மாறுபடாவண்ணம் (வேண்டியவற்றை) அளிக்குமாறுபோல, நீயும், பழுதின்றி நிறமுதலியகுணங்களைக்கொண்ட குமுதமுதலியமலர்கள் முகங்குவியாவண்ணம் காக்கின்றாய்; அக்கடவுள், சூரியன்வரக்கூவிடும் கோழியைக் கொடியாகக்கொள்ளுமாறுபோல, நீயும், அதைக்கொடியதாகக்கொண்டாய்; அக்கடவுள் அதரமென்னும் குமுதம்விண்டு சொற்றேனொழுக ஒளிபெற்ற புன்முறுவலரும்புமாறுபோல, நீயும், குமுதங்களலர்ந்து தேன்பொழிய சந்திரிகையைப் பரப்புகின்றாய்; (இவ்வேதுக்களால்) அவரை நீ ஒப்பாய்; உன்னையுமவர் ஒவ்வாதிரார்: (ஆதலின்) விளையாடவா. எ-று. சொல் ஆகுபெயர். சந்திரனொளிமழுங்கும்படி சூரியனையழைத்தலால், குக்குடம் கொடியதாயிற்று.

## சிறுதேர்ப்பருவம்.

க. புணரிப்பெருந்தானைகளையுடைய அவுணப்படைத்தலைவர்கள் தம்வரவைநோக்கிக்கொண்டு வாயிலில்நிற்கும் மங்கையரைநோக்கி, பூதப்படைத்தலைவரெதிரே அவிழ்ந்த எங்களுடைய குஞ்சிமுதலியவற்றிற்கும், (இது நீங்குங்கொலோவென) அச்சத்தைவிளைத்துநின்ற உங்களுடையதாலிகட்கும் வேலியாய்நின்றுகாத்தவர் முருகக்கடவுளேயென்றுகூற; (அம்மங்கையர்கள் தம்முடைய கணவருயிரைத்தந்து தமதுதாலியைப் பாதுகாத்தமையையெண்ணித் தியானிக்குங்கால்,) அவர்களுடைய கண்கடோறும் பிரசன்னமாயினவரோ, சிறுதேருருட்டியருளுக. எ-று. அவுணப்படைத்தலைவர், வேலியெனு வளையவர்க்கோத அவர்விழிகடொறுநின்றவன் என இயையும். குஞ்சியவிழ்தல் விழியிமைத்தல் முதலியவுடையவரைக் கொல்வது அறமல்லாமையால், அத்தன்மையரைப் பூதப்படைத்தலைவர் கொல்லாமைக்குக்காரண

ம் முருகக்கடவுளாணையென்றபடி. வேலி-அரண். கொல்-அசைநிலை. இளம்பேதையர் = (முருகக்கடவுளிடத்தேகாதல்கொண்ட) மங்கையர். அவர்கள்கண்ணிற்கு எதிர்ப்பட்டுநிற்குமாறுபோல நின்றவனெனக் கொள்க.

---

## சிதம்பரமும்மணிக்கோவை.

காப்பு. மணி கோன் அஞ்சம் கரன் கற்பகத்தான் இறைஞ்சும் கஞ்சம் அஞ்சு கரம் எம் கற்பகம் - கௌஸ்த்துபமணியையுடைய விஷ்ணுமூர்த்தியும் அன்னக்கொடியையுயர்த்தியகரத்தையுடைய பிரமதேவரும் கற்பகமாலையையுடைய இந்திரனும் வணங்குகின்ற தாமரைமலர்போலும் ஐந்துதிருக்கரங்களையுடைய எமது கற்பகவிநாயகக்கடவுள்,—செம்மை மணி கோவை கதிர் சூழ் தில்லை சிற்றம்பலவன் மும்மணிக்கோவைக்கு உவந்து முன் நிற்கும்—செவ்விய அரதனக்கோவைகளின்கிரணங்கள் (எங்கும்) பரவுகின்ற தில்லையிலுள்ள சிற்றம்பலவனைச்சுட்டியியற்றும் மும்மணிக்கோவையென்னும் இப்பிரபந்தத்திற்கு முன்னின்றருளுவர். எ-று. சித் அம்பலம் சிற்றம்பலமெனத் திரிந்தது; ஞானசபையென்பதுபொருள். கற்பகமென்னும் எழுவாய்க்கியைய நிற்குமெனப் பயனிலை அஃறிணைமுடிபாயிற்று. மணிக்கோன் அஞ்சக்கரன் கற்பகத்தான் என்னுந்தொடர் "உயர்திணையும்மைத்தொகைபலரீறே." என்னுஞ்சூத்திரவிதிப்படி மணிக்கோவஞ்சக்கரக்கற்பத்தார் என்றாயிற்று; சேரசோழபாண்டியரென்பதுபோல. எம்மணிக்கோ அஞ்சு அக்கரக்கு அற்பு அகத்தார் எனப்பிரித்து, எல்லாமணிகளுக்கும் தலைமைபெற்ற உருத்திராக்கத்தினிடத்தும் பஞ்சாக்கரத்தினிடத்தும் அன்பை அகத்திலுள்ளவர் என்றுரைப்பதும் ஒன்று. இப்பொருள்கெல்லுநெடிநிமில் நான்கனுருபை எழனுருபாக்கி மணிக்கோ என்பதனோடுங்கூட்டுக.

கக. அமரரிற்சிலர் எனது பரிபாகமின்மைநோக்காராய், திருநடங்கும்பிட்டும் ஒருவனுய்ந்திலன் (இவன்) யார்கொல் என அஞ்சுவர்; அஞ்சாதருளுதி எனக்கூட்டுக.

உ௮. குடிலையிற்றோன்றியவை சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்தி சிவம்; இவ்வைந்தும் சிவதத்துவமெனப்படும். மோகினியிற்றோன்றியவை காலம், நியதி, கலை; கலையிற்றோன்றியவை வித்தை இராசம் மான்; இவ்வாறும் புருடதத்துவத்தோடுங்கூட்டி வித்தியாதத்துவமெனப்படும். மானிற்றோன்றியவை தன்மாத்திரையைந்து, பூதமைந்து, ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்து, அந்தக்கரணநான்கு; இவ்விருபத்துநான்கும் ஆன்மதத்துவமெனப்படும். குடிலை - சுத்தமாயை. மோகினி - அசுத்தமாயை. மான் - பிரகிருதிமாயை.

---

## சிதம்பரச்செய்யுட்கோவை.

௯௯. சிவபெருமானுக்கு உமாதேவியார் "மனைவி தாய் தங்கை மகள்" என்பதற்கு, போகசத்தியாயிருத்தலின் மனைவியென்றும், சத்தி சிவத்தையுதிப்பித்தலின் தாயென்றும், சிவஞ்சத்தியென்னும் வேறுபாட்டில் முன்னர்ச்சிவமும் பின்னர்ச்சத்தியுமாயுதித்தலின் தங்கையென்றும், சிவத்தினின்றும் சத்தியுதித்தலின் மகளென்றும் வழங்குவர்.

௮0. மேவரும் தில்லை சென்றும்-அடைதற்கரிய தில்லையையடைந்தோம்,—பரலோகமே ஒன்றினம் - (ஆதலால்,) சிவலோகத்திலேயே ஒன்றுதலையடைந்தேமாயினம்,—ஒன்றின் அம்பரலோகம் சென்றுமே வருந்து இல்லை - அதில் ஒன்றுதலையடைந்தால், (பின்னர்) விண்ணுலகங்களிற்சென்றுமே வருந்துதலில்லை. எ-று. சென்றபிறவிகளிலேசெய்த சிவபுண்ணியமேலீட்டால் தில்லையைத் தரிசிக்கப்பெற்றோர் அப்பிறவியிற்றானே சிவகதிபெறுவது திண்ணமாகலின் அத்துணிவுபற்றி ஒன்றினமென இறந்தகாலத்தாற் கூறினர். பரலோகமே என்பதிலுள்ள ஏகாரம் தேற்றம். சென்றும் என்னும் உம்மை உயர்வுசிறப்பு. ஏகாரம் பிரிநிலை. வருந்து முதனிலைத்தொழிற்பெயர். அம்பரலோகங்களினும் அசுரர்பகைமை நோயுடைமைமுதலிய துன்பமுண்டாகலின் அவற்றிற்சென்று வருந்துத லில்லையென்றார். எனவே, அவற்றிற்றாழ்ந்தனவாய் இன்பமின்றித் துன்பமேயதிகரித்துள்ள ஏனையுலகங்களிற்

சென்று வருந்துவில்லையென்பது வகுக்கவேண்டுவதில்லையாயிற்று.
இதுபற்றியே, உமாபதிசிவாசாரியசுவாமிகளும் கோயிற்புராணத்தில்
"மண்ணிலிரு வினைக்குடலாய் வானிரயத் துயர்க்குடலா, யெண்ணி
லுட லொழியமுய லிருந்தவத்தா லெழிற்றில்லைப், புண்ணியமன் றினி
லாடும் போதுசெய்யா நடங்காண, நண்ணுமுட லிதுவன்றோ நமக்குட
லாய் நயந்தவுடல்." என விளக்கியருளினாரென்க. எனை ஏகாரமூன்றும்
ஈற்றசை. இவ்வாறன்றி, மேவுதற்கரிய தில்லையிற்சென்று, பரலோக
வின்பத்தையே அடைந்தேமாயினம்; அடைந்தேமாதலால், (இனி)
விண்ணுலகங்களிற்சென்று, அநுபவிக்கும்போகாதிகள் (நமக்கு) இல்
லையெனினும் அமையும். இப்பொருள் கொள்ளுங்கால், ஒன்றின் வினை
யெச்சத்திரிபு. மேவு வினைத்தொகை. அருந்து முதனிலைத்தொழிற்பெ
யர். சிவபோகநுகரப்பெற்றோர் விண்ணுலகபோகம் விரும்பாரென்ப
து கருத்து.

---

## காசிக்கலம்பகம்.

அ. வெள்ளிப்பொருப்பாளர் அவிமுத்தத்து இருப்பார் - வெள்
ளியங்கிரியையாள்பவராய் அவிமுத்தத்தின்கண்ணே வீற்றிருக்கும்
விசுவநாதர்,—என்றும் ஆருயிர்களின்மேல் விருப்பு வைத்து - எக்கா
லத்தும் அரியவுயிர்களின்மீது காதல்வைத்து,—இப்புவனங்களை எல்
லாம் உரு பாதியில் படைத்து—இப்புவனங்களனைத்தையும் (தமது
திருமேனியிலுள்ள) சத்திபாகத்தாற் சிருட்டித்து,—ஊழிதொறும் ஒரு
பாதியில் துடைத்து - முடிவுதோறும் தமதுபாகத்தாலழித்து,—தாம்
செய்யும் வேலை கண்டே ஓடி இரிந்து - தாமியற்றும் இத்தொழில்களை
நோக்கிக்கொண்டே ஓடித்திரிதலால்,—எங்கே கண் மூடுவர்-(அவர்)
எங்கே கண்களைமூடி இளைப்பாறுவார். எ-று. எனவே, தாம் விசுவநாத
ராகலின் ஆன்மாக்களின்புறும்பொருட்டு விசுவங்களை ஆக்கலுமழித்
தலுமாகிய தொழில்களையியற்றுதற்கேயன்றி ஓய்ந்திருப்பதற்குக் கால
மில்லையென்பது கருத்து. தமது சந்நிதிமாத்திரத்தால் இத்தொழில்க
ளியங்கினும் அன்பர் பிரார்த்தித்தவழிப் பிரசன்னராய்க் காக்கவேண்

டியிருத்தலின் ஓடித்திரிவதும் உடன்கூறப்பட்டது. திரிவது - திரிதல். இறுதியேகாரம் தேற்றம்; பிரிநிலையெனினும் அமையும்.

கசு. காணப்படும் நதிமுதலியவைகள் கங்கைநதிமுதலியவைக ளாகுமா? ஆகா: ஆதலால்,) உடல்விடும்போது மணிகர்ணிகைத்துறையை அடையுமாறுபூணும் ஆசையொன்றே பெறவேண்டும்; பின்னர்ப் பேயோடாடவிரும்பினும் அத்தீர்த்தத்திலே மூழ்கிப் பெறுவேம். எ-று. ஏகாரம்மூன்றும் வினாவின்கணின்று எதிர்மறைப்பொருள்பயந்தன. பூணுதல் - விரதமாகக்கொள்ளுதல். மற்று வினைமாற்று. ஒன்றே என்னும் ஏகாரம் பிரிநிலை. பேணுதல் அதன்காரியமாகிய அடைதலையுணர்த்திற்று. ஆடினும் என்பதில் விரும்பலென்னும் தொழிற்பெயர் எஞ்சிநின்றது, "நின்றன நின்றன" என்னும் நாலடியார்ச்செய்யுளில் செயின் என்பதிற்போல. பேயோடாடவிரும்பல் சிவசாரூபம் பெறுதல்.

கஎ. கற்றைவார்சடைக் காசிப்பதியுள்ளீர் உமதுதொண்டர்க்குப் பெற்றமூர்தல் முதலியவற்றைச்செய்யும் சிவசாரூபம்பெறுதலரிதன்று; (பெற்றபின்) கற்பமுடிவுதோறும் எல்லாவுலகத்தையும் அழித்துப்படைக்கவும்வேண்டுமோ? (வேண்டுவதில்லை: அவர்க்குப் பின்னர்ப்பெறப்படும்பயன் ஒன்றுமில்லையாகலின்) தேவரீர்பதத்தைச் சிந்திப்பதுமில்லை எ-று இது "கூற்றங் குமைத்த குரைகழற்கால் கும்பிட்டுத், தோற்றந் துடைத்தேந் துடைத்தேமாற்—சீற்றஞ்செ,யேற்றினான் றில்லை யிடத்தினா னென்னினியாம், போற்றினா னல்கும் பொருள்." என்னும் சிதம்பரச்செய்யுட்கோவைபோன்று இகழ்ந்ததுபோலப்புகழ்ந்தது. எனவே, தொண்டர்க்கு எவற்றாலும் குறைபாடின்றென்பது கருத்து. வேண்டுமே என்னும் ஏகாரம் எதிர்மறை. வேண்டின் அவையும் எளியவேயென்றபடி. அவர்க்குப்பெறப்படுவது ஒன்றுமில்லையென்பது "வீடும் வேண்டா விறலின் விளங்கினார்." என்னும் பெரியபுராணத் திருக்கூட்டச்சிறப்பானுமுணர்க. சிந்திப்பதும் என்னும் உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

உஅ. தாம் விரும்புவது அன்பர்களுடையவுள்ளம் சுகித்தலையே, சட்டையாக அணிவது வெவ்விய யானைத்தோலையே, அக்கடவுளுக்குள்ள மிக்கதொழில் எவற்றையும் தம்மிடத்தில் ஒடுக்கிக்கொள்ளலே, வீற்றிருக்கும் அந்தரங்கஸ்தானம் சுத்தமாகிய முனிவருள்ளமே, அழகுசெறிந்த ஆபரணம் எலும்பின்கோவையே, (என்னை) அடிமைகொள்ளுதற்பொருட்டு அங்கீகரிப்பது என்னுடையதொண்டே, (இத்தன்மையராகி) விநாயகக்கடவுளைப்பெற்ற உமாதேவிமணாளராகிய விசுவநாதர் வீற்றிருப்பது காசியென்னும் திவ்வியதலமே. எ-று.

உகூ. அழகியதிருமேனி அரியபுவனங்களே, வசித்திருப்பது மணம்பெருகுகின்ற (ஆனந்தவனமுதலிய) வனங்களே, தங்கியிருக்கும் அந்தரங்கஸ்தானம் மாசுஅவர்களுடைய இருதயமே,அவர்திருமேனியிற் கலந்திருப்பது உலகமேழும்பெற்ற உமாதேவியே, குளிர்ந்தமாலை வாசனைவீசும் கொன்றையே, அக்கடவுள் தருமங்களையுடையவர்க்குத் தருவது ஒன்றாகிய மூர்த்தியையே, (இத்தன்மையராகியவிசுவநாதர்) மனத்திலுள்ள குற்றங்களொழியுமேல் பிரசன்னராவர்; அவர்க்கு, ஒப்பற்ற திருக்கோயிலாகவுள்ளது காசியே. எ-று.

௩௰. பாக்கள்விரிந்த நாவினையுடைய வித்துவான்களும், (வண்டுகளின்) இசைகள்பாம்பத் தேன்விரிந்துள்ள காக்களிற்றங்கிய மலர்களும் எடவிழ்க்குங்காசி என்னுந்தொடரில் வித்துவான்களுக்குத் திருமுறையேடும் மலர்களுக்கு இதழுமாகக் கொள்க.

௩௧. தமது திருமேனிச்சோதியொன்றிலே ஒருபாதிசத்தியெனவும் ஒருபாதி பரமசிவமெனவும் தெசண்டுவிளங்கும் விசுவநாதருடைய இரண்டுதிருவடிகளையும் பரவும்களியமோம்; (யாவரும் வேதங்களை) ஓதியோதியுமே இளைப்பார்; (ஆகுல்,) வேதமுணர்ந்தநின்ற (தத்துவாதீதநிலைமையையே யன்றித் தத்துவங்களையும் முணர்கின்றாரில்லை; (அத்தன்மையரும் பிறரும்) உணரும்படி அனுபவப்பட்டுள்ள ஒருஉண்மையாக்கியம் (உண்டு: அதை) உணர்த்துவேம்; எதனாலே தருமங்கள்பலவற்றுள்ளும் பசுவையழித்து அக்கினிவளர்க்கும்யாகமே அதிகமென்

பது? (இவ்விடயம்) அன்பருடைய இறைச்சியுச்சிட்டத்தின்கண்ணே இச்சையுடையவராகிய சிவபெருமானே அறிவர் அதுநிற்க; மதுவை யுண்டால், அப்பொழுதிலே பெறுதற்கரியதாகிய ஒரு பரமசுகம் உண்டாகின்றது; அம்மதுவைமறுத்தநூல் ஒன்றுமேயில்லை. எ-று. மது - கள்ளும்; தேனும். கள்ளை அருந்தவொண்ணாதென மறுத்தநூல்களும் தேனை மறுக்கவில்லையாகலின் அவ்வொற்றுமைபற்றி அதுமறுத்தநூல்கள் இல்லையென்றுரைத்ததென்க. அதுமறுத்த இரவில்லை என்பதும் பாடம்; இதற்கு, பகலிலே சிலவிடத்தில் மதுவுண்டலில்லாதிருப்பினும், இரவிலே பலவிடத்தும் உண்டாகலின், அதுமறுத்த இரவில்லையெனக்கொள்க. ஊனருந்துதலால் மறுமைக்கண்ணே பெறுதற்கரியதோர் பரமசுகமுண்டென்பதைப்பற்றி ஆகமவளவையால் சாதித்தலைவிடுத்து, மதுவருந்தில் அப்பொழுதிலே அப்பரமசுகமுண்டென்பதைக் காட்சியளவையானே உணர்த்தத்தொடங்கலின், அதுகிடக்க என்பது நேரோ வினைமாற்றிடைச்சொலன்றேனும் ஈண்டு அப்பொருளில்வந்தது.

௫௫. வைரவர்தம் சாதனமும் பொய்யாமோ என்பதற்கு, வைரவக்கடவுள் பெண்கொலைமுதலிய தோஷமுடையவரைத் தண்டிக்கும் நியதி உமக்குமாத்திரம் பொய்த்துப்போமோ? எனப்பொருள் கொள்ளினும் அமையும். விரகந்தணியாமைகாரணமாகக் கடவுளையும் இவ்வாறு வெறுத்துரைப்பது, 'மதுரைக்கலம்பகம் (உ௮) வது செய்யுளில் "செம்பாதி மெய்யுங் கரும்பாதி யாகத் திருத்தோளு மார்பும் வடுப்பட்ட தூங்கண், டெம்பாவை யைப்பின்னு மம்பாவை செய்வா ரொளியாரை நவியிற்பி னேதா மிவர்க்கே." எனச் சிலேடைப்பொருள்பட மிக்தாஸ்துதிகூறியவாற்றானு முணர்க.

௫௬. எந்து இழையீர் - ஏந்திய ஆபரணங்களையுடைய தோழியர்களே!—பரந்தாமத்தை பல்லுயிர்கட்கும் பாலிப்பார் - முத்தியைப் பல ஆன்மாக்களுக்கும் தந்தளிக்கும் விசுவநாதர்,—வரம் தாமத்தை பின்தருவதை வழங்காரேல் - மேன்மைபெற்ற கொன்றைமாலையை இற

ந்தபின்றருவதை (இப்பொழுது) கொடாரேல்,—நீர் தாமத்தில் பொலிதரு காசிப்புரம் புரமானுர்க்கு - நீவிர் (சென்று,) கீர்த்தியால்விளங்குகின்ற காசியென்னுந்தலத்தையே தலமாகக்கொண்டுவிளங்கும் அக்கடவுளுக்கு,—மத்தை இரந்தாம் என புகலீர் - ஊமத்தமாலையையேனும் யாசித்தோமெனக் கூறுவீராக. எ-று. அத்தலத்திலிறந்தோர்க்குச் சாரூபமளிப்பது திண்ணமாகலின் அத்துணிவுபற்றிப் பின்தருங்கொன்றைமாலை என்றுள். நீர்புகலீர் எனக்கூட்டுக.

கூஎ. ஆணவமலசத்தியை மாய்த்தருளிய சிவபெருமான்வீற்றிருக்கும் ஒப்பற்ற காசியானது, நகர்வடிவாகி வேதசிரசென விளங்காநின்றது. எ-று. வேதசிரசென உவமித்தமை எப்பொழுதும் அக்கடவுள் நீக்கமின்றி வீற்றிருப்பதுநோக்கி. மகரம் - ஆணவமலம். மாய்த்தான் என்னும் பிறவினை மாயினுனெனத் தன்வினைபோன்றுநின்றது. மகரமாயினுனென்னும் பாடத்தினும் அகரமாயினுனென்னும்பாடமே சிறந்ததுபோலும். இதன்பொருள் "அகரமுதல" என்னும் திருக்குறளானுணர்க.

அகூ. பதியெனக்கொண்டு அவிமுத்தத்தின்கண்வாழ்பவரோ! வீரமென்பது வில்மதனுக்கே உரியகுணமாகவிருக்கின்றது? (நீர் அவனிடத்திலே) விரோதத்தைக்கொண்டிருத்தலால் ஆவதுயாது? (யான் படும்வருத்தத்தைக்கண்டும் அவனையழித்து எனக்கின்பந்தராமைநோக்கி யாவரும்) இவருக்கு இரக்கமென்பதில்லையென்று சொல்லுதலால், (நுமக்கு என்னிடத்தில்வைத்த) உரிமைதான் யாது? எ-று. ஏகாரம் - பிரிநிலை. கோரமென்பது அகோரமூர்த்தத்தைக்குறித்துநின்றதெனினும் அமையும். இருந்து வினையெச்சத்திரிபு. தலைவியிரங்கல்.

அகூ. வீற்றிராநின்றுசொல்வது, (அல்லது ஒன்றும் கொடாது விடுவது) இன்மைச்சொல்லையுடையராகிய உலோபரிடத்திலே, எத்தருமங்களும் அம்பிகையின்கூருகிய ஓர்பாகத்திலே உண்டு, கொல்லுகின்றது (அன்பர்மேற்) சீறிவரும் இயமனையே, சொல்லும்வார்த்தைகள் எழுதாக்கிளவியாகிய வேதமே, வில்லும் பொன்மலையே, அதிற்

ஒருடுக்கும் நாணும் அழகிய அரவமே, (திரிபுரத்தையழிக்க) விட்ட கணைக்கு நாணுதலையுடைய இலக்குமியைத்தரித்த மார்பே உண்டு, வளப்பம்பொருந்திய மார்பிலணியப்பட்ட அழகிய முத்துவடம் எலும்பே, அக்கடவுளுக்கு வீற்றிருக்குந் தானமெனப்படுவது அவிமுத்தமே. எ-று. இல்லையென்பது இலையோர்மருங்கிலே என்பதற்கு இருகூற்றொருவடிவாகிய திருமேனியில் அம்பிகையின்கூறாகிய இடையிலே இல்லையென்பது உண்டேயன்றி, தமதுகூறாகிய இடைவடிவுள்ளதாகலின் அதற்கு இன்மைத்தன்மை இல்லையெனினும் அமையும்.

கசo. பணிக்கும் பணிதிக்கும் மேக்கு என்று ஆர் என்பு அணிக்கும் பணி ஆய் இருந்தது ஓர் என் பணிக்கும் இன்பு ஆம் அகிலேசர்க்கு - அரவாபரணத்திற்கும், ஆபரணத்தினும் உயர்ச்சியெனநிறைந்த எலும்பாபரணத்திற்கும், ஏவலாயிருக்கின்ற எனது தொண்டிற்கும் விருப்பங்கொள்ளும் விசுவநாதருக்கு,—பணிக்கும் பணி என் என்று இரந்தபோது என் - கட்டளையிடுந்தொண்டு யாதென்று யாசித்தபொழுது (அக்கடவுளுக்கு வேண்டுவதாக) யாதிருக்கின்றது? (யாதுமில்லை.) எ-று. எனவே, அக்கடவுள் வேண்டுதலும் வேண்டாமையும் இல்லாதவராகலின், அன்போடு எவர் எத்தொண்டையியற்றினும் அங்கீகரித்து அவர்க்கு இயைந்தபலன்களை அளித்தருள்வரென்பது கருத்து. என் இரண்டனுள்ளே முந்தியது வினாவையும், பிந்தியது யாதுமில்லையென்னும் குறிப்புவினையையும் உணர்த்தின. பணிதிக்கு வேற்றுமைமயக்கம். பணிதி - ஆபரணம். மேக்கு - உயர்ச்சி. என்று வினையெச்சத்திரிபு. இருந்தது மூற்றெச்சம். ஓர் அசைநிலை. எண்ணின்கணின்ற உம்மைமூன்றும் இழிவுசிறப்பு. அகிலேசர்க்கு என்னும் நான்கனுருபு என்னென்னும் குறிப்புவினைகொண்டது.

கஎ. (பலவித)சரக்குகளோடுசெல்லும் தோணியே, கரத்தின்கணுள்ள வளைகளானவை கங்கணங்களோடும் கழலாநின்றன; தவழுகின்றமேகமே, தீவாகிய இடங்களே, எனதுபெண்ணுக்கு அன்னமானது கொடிய விடம்போல்கின்றது; விசாலமாகிய சோலைகளாலே சிந்தப்

படும் தேன்வெள்ளமே, கண்களானவை நீர்சொரிதல் அடங்குவனவல்ல; பிரம்புபோலும் கழுத்தினையுடைய சங்குக்கூட்டமே, துயரின்கண்ணே தங்குதல் அதிகரித்தோம்; கரைகளில்வந்திழிகின்ற கப்பலே, நாவும் வாயும் கருகியுலர்ந்தன; கடலே, கழியே, கழுநீரோ, (முலைமூகட்டிலுள்ளபசப்பைக்) கழுவுகின்ற நீரையுடையனவாகிக் கண்களுறங்குகின்றனவில்லை; (இரைவரவைநோக்கி) அன்னங்களோடு வாடிநிற்கின்ற நாரைகளே, இப்பெண்ணின்பொருட்டு உருகுகின்றீரில்லை; (இவற்றையெல்லாம்நோக்கியும்) அருண்மயமாய்விளங்கும் ஆனந்தவனத்தையுடைய விசுவநாதரும் (இவற்றிற்கு உபசாந்தமாகக்) கொன்றையென்னும் அழகியமாலையை அளிக்கின்றாரில்லை: எவ்வாறு உய்வாள்! எ-று. சரக்கோடு ஒழுகும் கரவனையே என்பதற்கு நாணற்புல்லுகளையுடைய கரைகளிலேசஞ்சரிக்கும் ஒளிபெற்ற சங்கமேயெனவும், கூரற்கழுத்தின் நந்தினமே என்பதற்கு பிரம்புகளின்கழுத்திற்றங்கும் நத்தைகளேயெனவும் உரைப்பதுவும் உண்டு. கண்ணீர் முலைமேற்பசப்பைக் கழுவுமாறு "கண்ணீர் கொடுமென் முலைமேற் பசப்பைக் கழுவுற்றதே." என்னும் திருவெங்கைக்கோவை (௨௯௨-ம்) செய்யுளாலும், "நெடுங்கண் ணீரிற் பீரோடு வனமுலை" என்னும் மதுரைக் கலம்பகம் (௯௧ம்) செய்யுளாலும் உணர்க.

திருச்சிற்றம்பலம்.

---

குமரகுருபரசுவாமிகள்திருவடிவாழ்க.

உ

கணபதி துணை.

# பரிசோதனபத்திரம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩ | ,, | ௨௫ | பிரளை | பிரள |
| ௨௦ | ,, | ௨௮ | முரி | முரிவு |
| ௨௪ | ௯ | ௨ | டவின் | டவில் |
| *௨௭ | ௫ | ௭ | சிறிய | சிறு |
| ௪௪ | ௨ | ௬ | கெரு | கொரு |
| *௫௩ | ௧௪ | ௧ | நஞ்சாய்த் | தம்பெய் |
| ௭௨ | ௧௮ | ௧ | பொய் | மெய் |
| ௭௪ | ௩௦ | ௪ | தென் | தெம் |
| *௭௫ | ௩௫ | ௯ | மமதொன் | மமுமொன் |
| *௭௭ | ௪௦ | ௩ | நகைசேர் | தகையே |
| ௮௧ | ௫௮ | ௧ | அய்ய | ஐய |
| *௯௦ | ௬௪ | ௨ | பெற்றோர் | பெற்ற |
| *௯௨ | ௧௦௧ | ௨ | வுடைந்து | வெடுத்து |
| ௧௭௧ | ௭ | ௨௧ | பஞ்ச | பதஞ்ச |
| ௨௦௬ | ௯௦ | ௩ | பொரு | பெரு |
| ௨௧௧ | ௯௪ | ௧௩ | ஐந்தடி | ஆறடி |
| ௨௧௪ | ௯௭ | ௫ | பஃறோ | பஃறு |
| *௨௧௬ | ௭௭ | ௨ | பரிதி | பரிதியை |
| ௨௩௬ | ௨௧ | ௩ | யைத்தவி | யைந்தவி |
| ௨௪௦ | ௨௨ | ௩௧ | றுறை | றுளை |
| ௨௪௮ | ,, | ௨௯ | கூற்று | [illegible]று |
| *௨௫௦ | ௪ | ௪ | துயின்றன | துயின்றிடு |
| *௨௫௧ | ௭ | ௨ | மிருக்தோ | மிருப்போ |
| *௨௫௬ | ௩௬ | ௩ | ணர்கி | முணர்கி |
| ௨௯௭ | ௭௨ | ௧ | பன்னிரு | பதினன்கு |
| ௨௭௦ | ௮௪ | ௫ | கர | களோர் |

* இக்குறியிடப்பட்டவை அச்சிட்டபின்கிடைத்த பிரதிபேதங்கள்.

# புத்தகவிளம்பரம்.

கீழேகுறிக்கப்படும் புத்தகங்கள் நம்மிடத்திலும், சென்னை, நாட்டுப்பிள்ளையார்கோவில் வீதியில் கூசா - வது வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ கா. முருகேசமுதலியாரிடத்திலும், தண்டையார்பேட்டை, திருவொற்றியூர் ஹைரோட்டு உஎகூ-வது வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ க-வ. இருவேங்கடநாயுடுவினிடத்திலும், சிதம்பரம், சைவப்பிரகாசவித்தியாசாலை மானேசர் ம-ா-ா-ஸ்ரீ பொன்னுசாமிப்பிள்ளையிடத்திலும் தபாற்செலவுடன் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| வசவபுராணம். ... ... ... ... | க | ரு | 0 |
| வாயுசங்கிதை. ... ... ... ... | க | 0 | 0 |
| குமாரகுருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு ... ... | க | 0 | 0 |
| திருக்கூவப்புராணம் ... ... ... | 0 | க0 | 0 |
| சீகாளத்திப்புராணம் ஆப்பயின்டு ... ... | 0 | க0 | 0 |
| ஷைசிவப்பிரகாசசுவாமிகள்வரலாறுடன்காலிகோபைண்டு | 0 | கஉ | 0 |
| சீகாளத்திமான்மியம் (வசனம்) ... ... | 0 | உ | 0 |
| சிவப்பிரகாசசுவாமிகள் பிரபந்தங்களிலே, சோணசைலமாலை முதல் பதினெட்டுமடங்கியது ஷை. சுவாமிகள் வரலாறுடன் | 0 | க0 | 0 |
| பழமலையந்தாதியுரை. ... ... | 0 | கூ | 0 |
| இதுவுஞ்சேர்ந்தது. ... ... | 0 | கஉ | 0 |
| திருவெங்கைக்கோவை. ... ... | 0 | எ | 0 |
| வடதிருமுல்லைவாயிற்றேவாரம், திருப்புகழ்.—(க), கொடியிடையம்மைபிள்ளைத்தமிழ், பஞ்சரத்தினம் இரட்டைமணிமாலை ... ... ... ஆக ரு-ம் | 0 | க | சா |
| புள்ளிருக்குவேளூர்க்கலம்பகம்... ... ... | 0 | க | சா |
| விநாயகரகவல், திருவிரட்டைமணிமாலை, திருமும்மணிக்கோவை, திருவிரட்டைமணிமாலை, விநாயககவசம், செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ் ஆக சா-ம் | 0 | க | சா |
| குசேலோபாக்கியானம். ... ... | 0 | சா | 0 |
| திருவாலங்காட்டுப்புராணம். ... ... | 0 | அ | 0 |

கா. ஞானசுந்தர ஐயர்,

சென்னை முத்தியாலுப்பேட்டை தம்புசெட்டிவீதி (130)-நம்பர் வீடு.